உ
சிவமயம்

சமிவன க்ஷேத்திர மென்னும்
கோயிலூர்ச் சிவஸ்தலத்தில்
எழுந்தருளியிருந்த

ஸ்ரீலஸ்ரீ
முத்துராமலிங்க ஆண்டவர்
ஞான தேசிக சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# சுவானுபவத் திருவாக்கு

சிவமயம்

சமிவன க்ஷேத்திர மென்னும்

கோயிலூர்ச் சிவஸ்தலத்தில்

எழுந்தருளியிருந்த



# ஸ்ரீலஸ்ரீ
# முத்துராமலிங்க ஆண்டவர்
# ஞான தேசிக சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# சுவானுபவத் திருவாக்கு

உரையாசிரியர்

## டாக்டர். சுப. அண்ணாமலை



கோவிலூர் மடாலயம்
கோவிலூர்
(காரைக்குடி அருகில்)
சிவகங்கை மாவட்டம் – 630 307

முதற்பதிப்பு : மார்ச் 2000

இந்தியப் பண்பாடு ஆராய்ச்சி நிறுவனம்

சென்னை கிளை

34–36, குப்பையா செட்டி தெரு,

மேற்கு மாம்பலம்,

சென்னை–600 033.

பதிப்பாளர்

கலாக்ஷேத்ரா பப்ளிகேஷன்ஸ்

84, கலாக்ஷேத்ரா ரோடு,

திருவான்மியூர், சென்னை–600 041.

போன்: 491 1390,

24-2

## ஆசியுரை

### கோவிலூர் ஆதீனம்
### ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள்

தென்னாட்டில் கோவிலூர் மடாலயம் தமிழில் வேதாந்தத்தை பாடம் சொல்லிக் கொடுக்கும் ஒரு உயர்ந்த மரபை உண்டாக்கிய முதல் மடாலயம் ஆகும்.

இம் மடாலயம் இரு நூறு வருடங்களுக்கு முன்பு ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவரால் ஆரம்பிக்கப் பட்டது. இந்த தமிழ் வேதாந்த மரபிற்கு முக்கிய காரணமாக இருந்தவர்கள் ஸ்ரீலஸ்ரீ தத்துவராய சுவாமிகள் (காலம் 700 வருடங்களுக்கு முற்பட்டது) ஸ்ரீலஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகளும் (காலம் 500 வருடங்களுக்கு முற்பட்டது) ஆவர்.

ஆதி சங்கரர் காலம் 1000 வருடங்களுக்கு முன்பு என்று சொல்லப்பட்டாலும் ஆதிசங்கரருக்கு பிறகு முன்னூறு ஆண்டு இடைவெளியில் கோவிலூர் மரபு மேற் கூறிய பெரு மகான்களால் தொடங்கப் பெற்றது.

வட இந்தியாவில் "கோவிலூர் வேதாந்த முறையை" 'கோவிலூர் மண்டலி' என்று சொல்லி கோவிலூர் வேதாந்த மரபிற்கு தக்க மரியாதை செய்து வருகிறார்கள்.

தத்துவராய சுவாமிகள் பல வேதாந்த நூல்களை மொழிபெயர்த்தது மட்டும் அல்லாமல் மூல பாட நூல்களாக நான்கு ஐந்து நூல்கள் தமிழில் செய்துள்ளார்கள். ஸ்ரீலஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் இயற்றிய வைராக்கிய தீபம், வைராக்கிய சதகம் நூல்கள் முதல் பாட நூல்களாக அமைந்தது.

அந்த முறையில் கோவிலூர் மரபு ஒரு சர்வகலாசாலை திட்டம் போல் நான்கு ஐந்து வருட வேதாந்த பாடங்களை செவ்வனே சொல்லிக் கொடுத்து வந்தார்கள்.

ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் அவர்களின் 'சுவானுபவத் திருவாக்கு' டாக்டர். சுப. அண்ணாமலை அவர்களின் எளிய உரையால் இப்போது நூலாக வெளிவந்துள்ளது.

ஓம் தத் ஸத்

15 . 3 . 2000 ஸ்ரீ சற்குருநாதன் துணை

## முன்னுரை

வேதாந்த தத்துவத்தைப் பரப்பும் உயர் பணியை ஒரு நூற்றாண்டாக ஆற்றிவருவது கோவிலூர் மடாலயம். இதனை நிறுவிய அருளாளர், 'கோவிலூர் ஆண்டவர்' என வணங்கிப் போற்றப்படும் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிக சுவாமிகள். இவர் இந்நிலவுலகில் நிலவிய காலம் 1791ஆம் ஆண்டு முதல் 1847ஆம் ஆண்டு வரை ஆகும்.

மகுட தன வைசியர் எனப்படும் நகரத்தார்களின் ஞான பீடமாக, இப் பெருந்தகையார் 1809ஆம் ஆண்டு நிறுவிய இம் மடாலயம் துறவியரின் உறைவிடமாகவும், வேதாந்தக் குருகுலக் கல்லூரியாகவும் விளங்கி, 16 வேதாந்த நூல்களைத் தேர்ந்தெடுத்து, முறைப்படி கற்பித்து, வேதாந்த மெய்ப் பொருள் ஞானிகளை நாடு முழுவதும் அனுப்பி, ஆங்காங்கே மடாலயங்களை நிறுவியும், சேர்ந்தும் வேதாந்த பிரசாரப் பணியினை மேற்கொள்ளச் செய்து வருகின்றது.

கோவிலூர் ஆண்டவர் கோவிலூரில் திருநெல்லை அம்மை உடனாகிய கொற்றவாளீசரை எழுந்தருள்வித்து, ஓர் அழகிய கலைச் செல்வமாகத் திருக்கோயில் கட்டியுள்ளார். இவ்விறைவன் இறைவியரை வழிபடு தெய்வங்களாகக் கொண்டார்.

ஞானத்தின் திருவுருவாம் இப்பெருந்தகையார் அருள் பழுத்த வேதாந்தி. மெய்ந்நூற் பொருளறிவும் அநுபூதிச் செல்வமும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற பக்திப் பெரியவர். இவற்றோடு, செந்தமிழ் நலம் கனிந்து கனிந்து ஒழுகக் கவிதை இலக்கியம் செய்யும் கலைத்திறமும் கைவரப் பெற்ற கவிஞர். அவர் இயற்றிய 'சுவானுபவத் திருவாக்கு' என்னும் இந்நூல் இதற்குச் சான்றாக விளங்குகின்றது.

இந்நூல் இரு பகுதியுடையது. ஒன்று கவிதைப் பகுதி. மற்றொன்று உரைநடைப் பகுதி. முதலாவது சுவானுபவத் திருவாக்கு என்றும், அடுத்தது சுவானுபவ திருவாக்கியங்கள் என்றும் பெயர் பெறும்.

இவற்றுள் கவிதைகள் தெய்வ வணக்கம், குரு வணக்கம், மனத்திற்கு அறிவுறுத்தல் என்னும் மூன்று வகையாக அமைந்து வேதாந்த

மெய்ப் பொருளைப் பழச்சாறு எடுத்துச் சர்க்கரை சேர்த்துத் தருவதே போல், கற்பவர் மிக எளிதில் பொருள் உணர்ந்து கொள்ளுமாறு தருகின்றன. சிற் சில பாடல்கள் மாணிக்க வாசகர், வள்ளலார், தாயுமானவர் ஆகியோரின் பாடல்களை ஒத்திருக்கின்றன.

உரைநடைப்பகுதியில் 81 திருவாக்கிங்கள், சுவாமிகளின் அனுபவ வெளிப்பாடாக அமைந்து, சிறு சிறு வடிவில் சூத்திரம் போல் விளங்குகின்றன.

இந்த நூலுக்கு, உரை எழுதுமாறு, கோவிலூர் மடாலய ஆதீனகர்த்தர் தவத்திரு. நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள் என்னைப் பணித்தார்கள். அதற்குரிய தகுதி சிறிதும் எனக்கு இல்லை ஆயினும் திருவருள் கூட்டி வைக்கும் என்ற துணிவோடு ஒருவாறு இதனை மேற்கொண்டேன். இதில் ஏற்பட்டிருக்கக் கூடிய குறைகளைப் பொறுத்தருளுமாறு பெரியோர் திருவடிகளை இறைஞ்சுகின்றேன். கோவிலூர் சுவாமியவர்கள் திருவடிகளை நன்றியுடன் வணங்குகின்றேன்.

நடக்கத் தொடங்கும் குழந்தை அடிக்கடி கீழே விழும். அதுபோல உரையெழுதும் பொழுது பொருளறியாது இடர்ப்பட்ட போதெல்லாம், மதுரை பிரம்மானந்த சுவாமிகள் மடாலயத்தின் தலைவர் தவத்திரு யோகானந்தகிரி சுவாமிகள் பெருங்கருணையுடன் என்னைத் தூக்கி நிறுத்தித் தமது விரிந்த வேதாந்த ஞானச் செல்வத்திலிருந்து எடுத்து எடுத்து உதவினார்கள். முழுதும் வடமொழிச் சொற்களால் நிரம்பிய பாடல்களுக்கு விளக்கம் கூறினார்கள். அவர்கள் செய்த அளப்பரிய உதவிக்கு அவர்கள் திருவடிகளை நன்றியுடன் வணங்குகின்றேன்.

கோவிலூர் ஆண்டவரின் குருவருள் முன்னின்று, இவ்வுரைப் பணியை முடித்துத் தந்தமையை நினைத்து வணங்கிப் போற்றுகின்றேன்.

மதுரை
11 . 3 . 2000

டாக்டர். சுப. அண்ணாமலை.

உ
சிவமயம்
திருநெல்லையம்பாள் துணை

# சுவானுபவத் திருவாக்கு

1. தோல்ஆ நநமும் துணைப்பதமும் ஐங்கரமும்
நால்ஆம் புயமருப்பும் நாடியே—மேலோர்கள்
கள்ளம்அறப் போற்றும் கணபதியை நன்மனமே
உள்ளநிலை உறைக்க உன்னு.

*பதவுரை* : நன்மனமே – எனது நல்ல மனமே; மேலோர்கள் – ஒழுக்கத்தில் மேம்பட்டோர்; தோல் ஆநநமும் – யானை முகத்தையும்; துணைப் பதமும் – திருவடியிணையையும்; ஐங்கரமும் – ஐந்து திருக்கைகளையும்; நாலாம் புயம் – நான்கு திருத்தோள்களையும்; மருப்பும் – ஒற்றைக் கொம்பையும்; நாடி – தியானித்து; கள்ளம் அறப் போற்றும் – வேறு ஒன்றை எண்ணிப் பொய்யாக அல்லாமல், மெய்யாகப் போற்றி செய்து வணங்கும்; கணபதியை ; உள்ள நிலை – என்றும் மாறாத பிரம நிலையில்; உறைக்க – ஊன்றி நிற்கும் பொருட்டு; உன்னு – தியானிப்பாயாக.

*விளக்கவுரை* : ஆநநம் – முகம். வடசொல். துணை – இரண்டு. நாடுதல்– ஆராய்தல். இங்கு உள் முகமாகச் சிந்தித்தல். உள்ள நிலை – சொரூபம். இங்குப் பிரம சொரூபம்.

எடுத்துக்கொண்ட செயல் இனிது நிறைவேற விநாயகப் பெருமானை வணங்கினார். அப்பெருமான் கடைக்கண் சாத்தி, திருவடிகளைச் சரணடையத் தந்து, துதிக்கையால் எடுத்துத் திருக்கைகளால் அணைத்துக் கொள்ள வேண்டும் என்ற குறிப்பில் 'முகம்' முதல் 'மருப்பு' முடியக் கூறினார். கள்ளம் – வஞ்சனையும் சந்தேகமும். பிரமமே உண்மை; பிற எல்லாம் தோற்றம். ஆதலின் அதனை 'உள்ள நிலை' என்றார். இது உள்ளது; நிலையானது என்றும் பொருள்படும். உறைத்தல் – அழுந்துதல். இது அனுபவம்.

*கருத்து* : பிரமநிலையின் அனுபவம் கிடைத்திடக் கணபதியை வணங்கி, அருள் வேண்டுதல்.

2. சத்தே, என் சித்தத்து ஒளியாய்
விளங்கும் சதாசுகமே
பத்தே பிறந்து பிறந்தேஇந்
நாள்வரைப் பட்ட துன்பக்

கொத்தே அகற்றும் குருவே,
பிறக்கும் குணகுணிக்கு
வித்தே, கழனிச் சிதம்பரம்
என்னும் விநாயகனே.

*பதவுரை* : சத்தே – மாறாத உண்மைப் பொருளே; என் சித்தத்து – என் சிந்தனையறிவில் ; ஒளியாய் விளங்கும் – (அதற்கும்) அறிவாக உள்ள; சதா சுகமே – மாறாத இன்பப் பொருளே; பத்தே – பலபிறவிகளிலே; பிறந்து பிறந்து, இந்நாள் வரை; பட்ட துன்பக் கொத்தே – நான் அனுபவித்த துன்பங்களை எல்லாம்; அகற்றும் – (உன் அருட் பார்வையால்) நீக்கும்; குருவே – என் மானசீக குருமூர்த்தியே; பிறக்கும் – பிறவிக்குக் காரணமான; குண, குணிக்கும்–முக்குணங்களுக்கும், அப்பிறவியை எடுக்கும் சீவனுக்கும்; வித்தே–தோற்றக் காரணமான மாயாலீலையை உடையவனே; கழனி–கழனியூர் என்றும் கழனிவாசல் என்றும் வழங்கும் ஊரின்கண் குடிகொண்ட; சிதம்பரம் என்னும் விநாயகனே – சிதம்பர விநாயகன் என்னும் திருப்பெயர் உடையவனே!; உன்னைப் போற்றுகின்றேன்.

*விளக்கவுரை* : பிரமம் உண்மையும், அறிவும், இன்பமுமாக இருப்பது. சத் சித் ஆநந்தம். அவற்றுள் அறிவு, இங்கு 'ஒளி' என்றும், ஆநந்தம் 'சுகம்' என்றும் கூறப்பட்டன. இம் மூன்றும் பிரமத்தின் குணம் அல்ல. பிரமமே சத்சித் ஆநந்தம். குருபிரான் நயன தீட்சையால் அவித்தையைப் போக்கி, அதனால் துக்கத்தைப் போக்குகின்றான், காரணம் நீங்கக் காரியமும் நீங்குமாதலின். முக்குணம் – சத்துவம், இராஜசம், தாமஸம் என்பவை. இவற்றால் வினையும், அதனால் பிறப்பும் உண்டாகும். பிரமத்தின் மாயா லீலையால் சகமும், (பிரபஞ்சம்) குணங்களும், சீவனும் தோன்றுகின்றன. ஆத்மனே உண்மை. சீவன் தோற்றமே. ஆதலின் ஆத்மனை 'வித்து' என்றார்.

*கருத்துரை* : விநாயகன் சச்சிதானந்தம். மானஸ குரு. லீலாவிநோதன்.

3. முற்பவத்தில் யான்புரிந்த தீவினைகள்
முழுதுஅகற்றும் முகத்தி னானை,
அற்பசுகத்து எனைஅழுத்தா ஐங்கரனைப்,
பிற்பவமும் அகற்றும் கோவை,
சொற்பழுது புரியாத வணிகர்குலம்
தினம்பணியும் துணைத்தா ளானை,
கற்பகத்தின் மிடிஅகற்றும் கற்பகமா
நாயகனைக் கருத்தில் வைப்பாம்.

*பதவுரை:* முன் பவத்தில் – முன் பிறவிகளில்; யான் புரிந்த; தீவினைகள் முழுது– தீவினைப் பயன்களை, முற்றாக; அகற்றும் – நீக்கும்; முகத்தினானை – அருட் பார்வை யுடையவனை; எனை – என்னை; அற்ப சுகத்து – சிற்றின்பங்களில்; அழுத்தா – மனம் பொருந்தச் செய்யாத; ஐங்கரனை; பிற் பவமும் – இனி வர இருக்கும் பிறவிகளையும்; அகற்றும் – வராமல் நீக்கும்; கோவை – முதல்வனை; சொல் பழுது புரியாத – சொன்ன

சொல் தவறாத ; வணிகர் குலம் ; தினம் ; பணியும் – வணங்கும்; துணைத் தாளானை – திருவடிகளை உடையவனை; கற்பகத்தின் – கற்பக தருவின்; மிடி அகற்றும்– வறுமையைப் போக்கும்; கற்பக மா நாயகனை – கற்பக விநாயக மூர்த்தியை; கருத்தில் வைப்பாம் – உள்ளத்தில் இருத்துவோமாக.

*விளக்கவுரை :* முன் பிறவி வினைகள் 'சஞ்சிதம்' எனப்படும். இனி வரும் பிறவிகளுக்குக் காரணம், இந்தப் பிறவியில் நாம் செய்யும் வினைகள். அவை 'ஆகாமியம்' எனப்படும். இப்பிறவியில் அனுபவிப்பதற்குரிய வினைகள் 'பிராரப்தம்' எனப்படும். அற்பசுகம் – சிறிது போது இருந்து மறைவது ஆதலாலும், அள்வின் மிகும் பொழுது துன்பமாய் முடிதலாலும் சிற்றின்பம் எனப்பட்டன. இவை பொருளாலும் காமத்தாலும் வரும் இன்பம். கற்பக தரு – தேவலோகத்தில் உள்ள ஒரு மரம். அதன் அடியில் நின்று, வேண்டுவார் வேண்டுவதை எல்லாம் கொடுப்பது. அதன் வறுமை யாவது, அருளை வழங்க இயலாமை.

*கருத்துரை :* வினை நீக்கி, பிறவியறுத்து அருள் நல்கும் விநாயகப் பெருமானை வணங்குவோம்.

## சுப்பிரமணியர் வணக்கம்

4. பையாடு அரவப் பணிபுனையும் பரமன் தனது திருச்செவியில்,
கையார் நெல்லிக் கனியெனவே ககன அககனம் இலதான
மெய்யாம் பிரமம் இதுவென்று விளம்பற்கு உரிய வேலோனே
பொய்யா மொழிய ரிடத்துறைவாய் போற்றி போற்றி மிகப்
போற்றி.

*பதவுரை :* பை ஆடு – படம் விரித்து ஆடும்; அரவப் பணி – பாம்பாகிய அணிகலத்தை; புனையும் – அணியும்; பரமன் தனது திருச்செவியில்–சிவபெருமானது திருச்செவிகளில்; ககன, அககனம் இலதான–வானவெளியென்றும், அஃது அன்று என்றும் சொல்லப்படும்; மெய்யாம் – உண்மைப் பொருளாகிய; பிரமம் இது என்று – பிரமம் என்பது இதுவே என்று; கை ஆர் நெல்லிக்கனி எனவே – உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெளிவாக; விளம்பற்குஉரிய – உபதேசம் செய்வதற்குத் தகுதிவாய்ந்த; வேலோனே – வடிவேற் பெருமானே; பொய்யா மொழியரிடத்து – பொய்யற்ற சொல் உடையவரது உள்ளத்தில்; உறைவாய் – கோயில் கொண்டவனே; போற்றி போற்றி, மிகப் போற்றி.

*விளக்கவுரை :* வானவெளி – அருவம். வெளி அல்லாதது – உருவம். அருவம், நிர்க்குணப் பிரமம். உருவம், சகுணப் பிரமம். இவ்வாறு, எவ்வகை அடைமொழியும் கொடுத்துச் சுட்ட முடியாதது பிரமம். அடுத்து உணர்தற்கு உரியதே அல்லாமல் சொல்ல முடியாதது. அதனை உணர்த்தினான் சுவாமிநாதன் என்க.

*கருத்து :* சுவாமிநாதனாகிய முருகப்பெருமான் சிவபெருமானுக்குப் பிரமத்தை உபதேசித்தான்.

## திருப்பெருந்துறை

5. தொந்தமும் கடந்த தூயோர் துதித்திடற்கு உரிய பாதம்
அந்தமும் நடுவும் இன்றி அமர்ந்திடும் அம்பொற் பாதம்
சந்ததம் சுகசித் சத்தாய்ச்சதோதிதம் ஆன பாதம்
சிந்தனைப் படியே தோன்றும் திருப்பெருந் துறையான் பாதம்.

*பதவுரை :* சிந்தனைப் படியே – அன்பினால் எண்ணிடும் அடியார் எண்ணிய உருவத்துடன்; தோன்றும் – அவர்கட்குக் காட்சி யளிக்கும்; திருப்பெருந்துறையான் பாதம் – திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானின் திருவடிகள்; தொந்தமும் – எல்லாப் பந்த பாசங்களையும்; கடந்த – விட்ட; தூயோர் – தூயமனம் உடையோர்; துதித்திடற்கு – புகழ்ச்சி கூறித் தொழுதற்கு; உரிய பாதம் – உரியவை. அந்தமும் – முடிவும்; நடுவும் – நிலைபெறும் காலமும்; இன்றி – இல்லாமல்; அமர்ந்திடும் – எப்போதும் விளங்கும்; அம் பொன் பாதம் – அழகிய, பொலிவுடைய திருவடிகளாகும்; சந்ததம் – எப்பொழுதும்; சுக, சித், சத்தாய்–பேரின்பமும், பேரறிவும், பேருண்மையுமாக உள்ள பொருளாய் விளங்கி; சத் உதிதம்–நல்லனவற்றிற்கு எல்லாம் பிறப்புக் காரணமாய்; ஆன பாதம் – ஆகியவை.

*விளக்கவுரை:* தொந்தமும் – உம்மை எச்சப் பொருளில் வந்தது. ஆசைகளை விட்டதோடு என்பது அதனால் பெறும் பொருள். அந்தமும் நடுவும் கூறவே, ஆதியும் கொள்க. "சுகசித் சத்" என்பதனைச் சச்சிதானந்தம் எனக்கொள்க. பிரமமே உண்மை. பிரமமே ஞானம்; பிரமமே ஆனந்தம். உதிதம் – தோன்றுதற் காரணம்.

*கருத்துரை :* பிரமம் பற்று அற்றோர் வணங்குவது. காலங்கடந்தது. சச்சிதானந்தம். சகுணப் பிரமமாயும் உள்ளது.

## கொற்றவாளீசர் வணக்கம்

6. கருக்குழியில் வீழ்ந்து கசடர் உறவாகிப்
பெருக்கமாம் பொய்ப்பொருளைப் பேணா – மருக்கமழும்
தென்கழனி யூரில் சிறந்தகொற்ற வாளீசர்
பொன்கமலத் தாளிணையே போற்று.

*பதவுரை :* கருக் குழியில் – பிறப்பில்; வீழ்ந்து – அகப்பட்டு; (பிறந்து, வளர்ந்து) கசடர் உறவாகி – அறிவற்றோரிடம் நட்புக் கொண்டு; பெருக்கமாம் – ஏராளமாய் உள்ள;

பொய்ப் பொருளை – உலகின் நிலையற்ற பொருள்களை; பேணா – பாதுகாத்துக் கொண்டிராமல்; மரு கமழும் – வாசனை உடைய (மலர் நிறைந்த); தென் கழனியூரில் – கழனிவாயில் என்னும் ஊரில்; சிறந்த–அருள்மிகுந்து விளங்கும்; கொற்றவாளீசர்; பொன் பொலிவுடைய; கமலத் தாள் இணையே – தாமரை போன்ற திருவடிகளையே; போற்று – வழிபடுவாயாக.

*விளக்கவுரை* : இது நெஞ்சுக்கு உரைத்தது. நெஞ்சே என்ற விளி தோன்றாமல் நின்றது. கருக்குழி – தாயின் கருப்பை; பிறவி என்னும் பள்ளம். உலகில் நிலையற்ற பொருள் நிறைய உள்ளன வாதலின், ஆசையும் அளவில் அடங்காமல் இருக்கும். அதனை விடுக என்றார். பொய்ப் பொருளோ பல; ஆனால் மெய்ப்பொருள் ஒன்றே தான். அது பிரமமே ஆகும். அது சகுணப் பிரமமாக – கொற்றவாளீசராகத் – திருமேனி கொண்டு வீற்றிருக்கின்றது.

*கருத்துரை* : உலகியல் நிலையற்றது. கொற்றவாளீசரே நிலையான பொருள்.

7. சுவர் உறையும் ஓவியங்கள் சுவரே என்றல்
சுபாவமதி போல்பரத்தில் தோன்றா நின்ற
பவமுதலாம் சங்கற்ப விகற்பம் எல்லாம்
பரவடிவாய்க் கண்டுபர வடிவ மான
தவர்உறையும் கழனிநகர்க் கொற்ற நாதன்
தனதருளால் பேதமதி நாயி னேனுக்கு
இவன்அவன்நான் அதுஎன்னும் பேதம் இன்றி
எவ்வுருவும் சின்மயமா இருந்த வாறே.

*பதவுரை* : சுவர் உறையும் – சுவரில் வரைந்த; ஓவியங்கள்; சுவரே என்றல்– உருவமாகத் தோன்றினாலும் சுவர்தான் என்று கூறுவது; சுபாவ மதி – இயல்பான அறிவு; போல் – அதைப் போல்; பரத்தில் – பரம் பொருளின் நிழலாக; தோன்றாநின்ற – தோன்றுகின்ற; பவம் முதலாம் – ஜீவான்மாவின் பிறப்பு முதலிய; சங்கற்பம் – மனக் கற்பனையாகிய எண்ணத்தின் தோற்றமும்; விகற்பம் – மறைவும்; எல்லாம் – ஆகிய அனைத்தும்; பர வடிவாய் – பரம்பொருளே என்று; கண்டு – உணர்ந்து; பரவடிவமான – பரம் பொருள் பிரக்ஞையுடன் உள்ள; தவர் உறையும் – முனிவர்கள் வாழும்; கழனி நகர் – கழனி வாயிலில் எழுந்தருளியிருக்கும்; கொற்றநாதன்; தனது அருளால் – அருளினால்; பேதமதி – பிறர் போல் வேறுபாட்டுப் புத்தி கொண்டிருந்த; நாயினேனுக்கு – அடியவனாகிய எனக்கு; இவன், அவன், நான், அது என்னும்; பேதம் இன்றி– வேறுபாடுகள் இல்லாமல்; எவ்வுருவும்–எல்லா உயிர்களும், எல்லாப் பொருள்களும்; சின்மயமா–பேரறிவுப் பொருளாகிய பிரம சொரூபமாக; இருந்தவாறே–தோன்றிய அதிசயம் என்னே!

*விளக்கவுரை* : சங்கற்பம் – எண்ணத்தால் தோன்றுவது. விகற்பம்–அத்தோற்றம் மறைவது. பவத்தின் சங்கற்பம் – உயிர் பிறந்து வாழ்வது போல் தோன்றுதல்; அதன் விகற்பம் – இறப்பது போல் தோன்றுதல். இவ்வாறு உலகில் எல்லாப் பொருளும் மனக்

கற்பனையால் தோன்றுவனவே தவிர, உண்மை யல்ல. அவை அழிதலும் அவ்வாறே. ஞான முனிவர்கள் தமது உயிரும், உடலும் அவ்விதக் கற்பனையே என்று கண்டு, தம்மைப் பிரமசொரூபமாக உள்ளார்ந்து உணர்ந்து இருப்பர். இவன் என்பதும் நான் என்பதும் ஜீவான்மா. அவன் என்பதும் அது என்பதும் பரமான்மா. சித், மயம் – சின்மயம். சித் – பேரறிவு. மயம் – எங்கும் பரவியிருத்தல்.

*கருத்துரை :* உலகம் என்பதும் ஜீவன் என்பதும் கற்பனை. பரம்பொருளாகிய பிரமமே உண்மை.

உபாசனா மூர்த்தியாகிய

## திருநெல்லையம்மை வணக்கம்

### காப்புச் செய்யுள்

8. அருவாய் உருவாய் அருவுருவாய், மேலாம்
திருநெல்லை யம்மை உருச்செப்ப – உருநாமம்
ஆரணங்கள் ஓத அரியபரா சத்திபெற்ற
வாரணமே தந்துஆள் வரம்.

*பதவுரை :* ஆரணங்கள் – வேதங்கள்; உரு, நாமம் – உனது திருவடிவையும், திருப் பெயர்கள் எத்தனை என்பதையும்; ஓத அரிய – கூற முடியாத; பராசத்தி பெற்ற; வாரணமே – யானைமுகக் கடவுளே; அருவாய் – அருவமாகவும்; உருவாய் – உருவமாகவும்; அருவுருவாய் – அருவுருவமாகவும்; மேலாம் – இவற்றைக் கடந்த சொரூபாகவும்; (திகழும்) திருநெல்லை யம்மையின்; உருச் செப்ப – திருமேனியைப் புகழ்ந்து பாட; வரம் தந்து – எனக்கு நா வன்மை தந்து; ஆள் – ஆள்வாயாக.

## அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

9. ஆறாறு அகன்ற பரசிவமாய், அறிவாய், அழிவுஇல் சுகவடிவாய்
வீறார் பரிபூ ரணவுருவாய், வெளியாய் நிறைந்த விநாயகனை
நூறா யிரக்கால் வணங்கிடுவாம் நுவலற்கு அரிய பூரணியை
ஆறா விழிகண் ணீரொழுக அகத்தே துதிக்க அருள்என்றே.

*பதவுரை :* நுவலற்கு அரிய – அளவிட்டுக் கூற முடியாத; பூரணியை–எல்லாமாய், எங்கும் நிறைந்தவளாகிய திருநெல்லையம்மையை; விழி – கண்களிலிருந்து; கண்ணீர்; ஆறா – ஆறு போல்; ஒழுக–பொழிய; அகத்தே – உள்ளத்தில்; துதிக்க – வணங்க; அருள் என்று–அருள்புரிவாயாக என்று; ஆறு ஆறு அகன்ற – முப்பத்தாறு தத்துவங்களும் கடந்த; பரசிவமாய் அறிவாய் – ஞானமே வடிவாய்; அழிவு இல் – என்றும் நீங்காத; சுகவடிவாய் – ஆனந்தமே வடிவாய்; வீறு ஆக – பெருமை மிக்க; பரிபூரண உருவாய்–

எங்கும், எல்லாமாகி நிறைந்த உண்மைப் பொருளாய்; வெளியாய் – குணம், குறி கடந்த சொரூபமாய்; நிறைந்த – யானை முகத்திருமேனியில் நிறைந்து விளங்கும்; விநாயகனை; நூறாயிரக் கால் – இலட்சம் முறை; வணங்கிடுவாம் – தொழுவோமாக.

*விளக்கவுரை* : ஞானமேயாக, ஆனந்தமேயாக, உண்மையேயாக உள்ள பொருள் பிரமம். விநாயகரும் பராசத்தியும் பிரம்ம சொரூபமே.

## எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

10. ஓராறு சமயர்உளத்து உணராய் போற்றி
உணர்விலியேன் உணர்வுதனக்கு உணர்வே போற்றி
கார்ஆரு மிடற்றோனும் அயனும் மாலும்
காண்பரிய ஒளிபோற்றி கரியே போற்றி
தார்ஆரும் குலிசன்முதல் தேவர் எல்லாம்
தாஅரிய பரஞ்சுடரே தாயே போற்றி
சீராரும் கழனியில்வாழ் சிவையே போற்றி
திருநெல்லை நாயகியே போற்றி போற்றி.

*பதவுரை* : ஓர் ஆறு சமயர் – ஆறு சமயங்களையும் சேர்ந்தவர்களது; உளத்து – மனத்தினால்; உணராய் – உணரப் படாதவளே; போற்றி –; உணர்விலியேன் – உணர்வு இல்லாத என்னுடைய; உணர்வு தனக்கு–உள்ளத்திற்கு; உணர்வே – தக்க உணர்வாக உள்ளவளே; போற்றி –; கார் ஆரும் –கருமை பொருந்திய; மிடற்றோனும் – கழுத்தை உடைய சிவபெருமானும்; அயனும் – பிரமனும்; மாலும்–மகாவிஷ்ணுவும்; காண்பு அரிய – காண இயலாத; ஒளி போற்றி; கரியே – அவர்களுக்கும் பிறர்க்கும் ஜீவசாட்சியாக உள்ளே இருப்பவளே; போற்றி; தார் ஆரும் – பெரிய மாலையை அணிந்த; குலிசன் – இந்திரன்; முதல் – முதலிய; தேவர் எல்லாம்; தாவ–பலபடிநிலையைக் கடந்து செல்ல; அரிய – இயலாத; பரம்–மேலான; சுடரே – ஒளியே; தாயே; போற்றி; சீர் ஆரும்–புகழுடைய; கழனியில் கழனிவாயிற் குடியில்; வாழ் – வாழும்; சிவையே; போற்றி; திருநெல்லை நாயகியே – ; போற்றி; போற்றி.

*கருத்துரை* : திருநெல்லை நாயகி பரம்பொருட் சொரூபம் ஆனவள். தெய்வ உருவங்களுக்கு அப்பாற் பட்டவள்.

## எழுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

11. அருளொடு பரையாய்ச் சிவமய மாகும்
அம்மையே எனதுஅகத்து இருந்து
தெருளொடு மருளும் தியக்குஅறத் தெளித்த
தெய்வமே, அன்பிலேன் உனது
திருவடி நிழலில் திரிபுடி மறந்து
திரமொடும் சேரும்நாள் உளதோ

இருள்அற விளங்கும் கழனியம் பதிவாழ்
ஏகமே திருநெல்லை யம்மே.

*பதவுரை* : இருள்–அவிச்சை ஆகிய இருட்டு; அற – நீங்க; விளங்கும்; கழனி அம் பதி– கழனிவாசற் குடியில்; வாழ் – வாழும்; ஏகமே – அத்துவிதப் பொருளே; திருநெல்லை யம்மே–திருநெல்லையம்பிகையே; தெருளொடு–தெளிவும்; மருளும்–மயக்கமும்; தியக்கு அற– (இன்னவை என்று) எனது கலக்கம் நீங்கும்படி; தெளிவித்த–தெளிவாக உணர்த்திய; தெய்வமே; அன்பிலேன்–உனக்கு அன்பு இல்லாத நான்; உனது ; திருவடி நிழலில் – திருவடியின் சார்பில்; திரிபுடி–மூன்று பகுதி எனப்படும் அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்பவற்றின் வேற்றுமையை; மறந்து –; திரமொடும்–உறுதியாக; சேரும் நாள் –; உளதோ – வருமோ?;

*கருத்து* : அம்மா, எனக்கு ஞானம் வழங்கினாய். நான் உன்னுடன் ஐக்கியப்பட விரும்புகின்றேன்.

12. கண்டதே திரமாக் கவர்ந்திடும் கருத்தைக்
கழல்இணை நிழலிலே இருத்திக்
கொண்டிட எனக்குஓர் திரம்இலை; கவராது
இருக்கவும் அருளது கொடுப்பாய்
தண்டுஅற விளங்கும் சச்சிதா னந்தத்
தையலே, சகத்துளோர் களும்மேல்
அண்டரும் இறைஞ்சும் கழனியம் பதிவாழ்
அம்மையே திருநெல்லை யம்மே.

*பதவுரை* : தண்டு – விலகுதல் என்பது; அற – இல்லாத; சச்சிதானந்தத் தையலே – சத், சித், ஆனந்தப் பொருளாயுள்ள தாயே; சகத்து – மண்ணுலகில்; உளோர்களும் – வாழும் மக்களும்; மேல் அண்டரும்–தேவர்களும்; இறைஞ்சும் – வணங்கும்; கழனியம்பதிவாழ் அம்மையே; திருநெல்லையம்மே –; கண்டதே – கண்ணால் கண்ட பொருளையே; திரமா(க) – நிலை என்று கருதி; கவர்ந்திடும்–அதனிடம் செல்லும்; கருத்தை – மனத்தை; கழல் இணை – உனது திருவடியின்; நிழலிலே – சார்பில்; இருத்திக் கொண்டிட – இருக்கச் செய்து கொள்ள; எனக்கு –; ஓர் திரம் இலை – நிலையான புத்தி இல்லை; கவராது – அவ்வாறு செல்லாமல்; இருக்கவும் –; அருளது கொடுப்பாய் – ;

*கருத்துரை* : அம்மா! ஓடும் மனத்தை உன் நினைவில் நிறுத்த அருள் தா.

13. வேண்டுவது ஒழிந்தும் வினையிருள் கடிந்தும்
விழுப்பொருள் இதுஎனக் கண்டும்
ஈண்டுஉறும் நாம, உருஎலாம் சிவமா
இதயத்தில் உணர்ந்துஇவை மறந்தும்
காண்தகு நினது திருவடி கதியாக்
கலந்தனர் அடியர்யான் இன்னம்
ஈண்டுஇருந்து அந்தோ இடர்உறல் அழகோ?
என்னைஆள் திருநெல்லை அம்மே.

*பதவுரை* : என்னை –; ஆள் – ஆளும்; திருநெல்லை அம்மே –; வேண்டுவது – ஒன்றை விரும்பும் விருப்பத்தை; ஒழிந்தும் – விலக்கியும்; வினை இருள்–இருவினைகள் என்னும் இருட்டை; கடிந்தும் – நீக்கியும்; விழுப் பொருள் – சிறந்த பொருள்; இது என – இதுவே என்று; கண்டும்–தெளிந்தும்; ஈண்டு – இவ்வுலகில்; உறு – கற்பனையாக ஏற்பட்டுள்ள; நாம(ம்)–பெயர்களும்; உரு எலாம் – உருவமும் ஆகியவை எல்லாம்; சிவமா –உண்மையில் சிவம் என்றே; இதயத்தில் – ஆழ் மனத்தில்; உணர்ந்து; இவை – பெயர், உருவங்களை; மறந்தும்–புத்தியில் கொள்ளாமலும்; காண் தகு – அழகிய; நினது – ; திருவடி – திருவடியே ; கதியா (க) – தமது புகலிடமாகக் கொண்டு (அதனையே தியானித்து); அடியர் – உண்மை அடியார்; கலந்தனர் – அத்துடன் ஐக்கியமாயினர். அந்தோ – ; யான் – நானோ; இன்னம் – ; ஈண்டு – இங்கு; இருந்து – ; இடர் உறல் – துன்பம் அடைவது; அழகோ – உனக்கு அழகோ?

*கருத்துரை* : உன் அடியார் விருப்பு வெறுப்பு விடுத்து, எல்லாம் சிவமே என உணர்ந்து முத்திபெற்றனர். நான் துன்புறுகின்றேன்.

## எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

14. சகலம்எனும் தொந்தம்எலாம் சிவத்தில் உண்டாய்த்
தனக்குஎன்ன வடிவுஇன்றித் தான்உண் டான
சுகவடிவே வடிவாக இருந்துஅத் தொந்தம்
சுகரூபம் ஆதல்அநு பவமாக் கண்டும்
அகம்உடல்என்று அனுதினமும் நாடி நாடி
அகமிதம்என்று அனவரதம் நைந்து நைந்தும்
இகம்இருந்தே மனதுமிக வாடல் கண்டும்
இன்னம்இரங் காதிருத்தல் என்னே அம்மே.

*பதவுரை* : அம்மே – தாயே; சகலம் எனும் – அனைத்துப் பொருள்களும், உயிர்களுமான; தொந்தம்–பற்றுகள்; எலாம்; சிவத்தில் –; உண்டாய் – தோன்றி; தனக்கு என்ன – தனக்கு உரியதாக; வடிவு – உண்மை உருவம்; இன்றி – இல்லாதனவாக; தான்; உண்டான–தோன்றிய; சுகவடிவே – பிரம்ம சொரூபமே; வடிவாக–தனக்குள்ளே மறைந்திருக்கும் உண்மையாக நிற்க; இருந்து–உலகில் இயங்கியும் கிடந்தும்; அந்தத் தொந்தம் – அப் பற்றுகள் எல்லாம்; சுக ரூபம் ஆதல் – உண்மையில் பிரமமாகவே உணரப்படுவதை; அனுபவமா(க) – பெரியோரின் அனுபவமாக; கண்டும் – அறிந்தும்; உடல் அகம் என்று – உடம்பே நான் என்று தேகாத்ம புத்தியுடன்; அனுதினமும் – நாள் தோறும்; நாடி– இடையறாமல் கருதி; அகம் இதம் என்று – இது நான் என்று (பிரமத்தின் வேறாகக்) கொண்டு, அனவரதம் – இரவும் பகலும்; நைந்து நைந்தும் – (சஞ்சலமுற்று) மனம் நொந்தும்; இகம் – இம்மை வாழ்வில்; இருந்தே – பற்றுக்கொண்டிருந்து; மனது; மிக – ; வாடல் – வாடுவதை; கண்டும் – நீ பார்த்தும் கூட; இன்னம்; இரங்காதிருத்தல் –; என்னே – என்ன காரணத்தால்?

*கருத்துரை*: 'ஜகம் பிரம மயம்' என்பது பெரியோர் அனுபவம். நான் அதை அறிந்தும் தேகாத்ம புத்தி கொண்டும், நான் ஜீவன் என்று கருதியும் கவலைப் படுகின்றேன்.

15. ஓர்ஆகம் தனைஅசைக்கும் ஆவே சத்தை,
ஒருகர்த்தா உண்டுஎன்னாது உலகில் சொல்லும்
பேராத சோதிடத்தைக் காலம் என்னாப்
பித்துஆகும் வயித்தியத்தைப்; பிறங்கும் சித்தை
ஓராது சடங்களையும் தெய்வம் என்றே
உணர்ந்திடும்இம் மார்க்கம்எலாம் உணர்வாக் காணும்
சீர்ஆகும் துணிவுதனை அருள்வாய் தெய்வத்
திருநெல்லை நாயகியே அம்மே அம்மே.

*பதவுரை*: தெய்வத் திருநெல்லை நாயகியே; அம்மே, அம்மே; ஓர் –; ஆகம் தனை – உடம்பை; அசைக்கும்–ஆடச் செய்யும்; ஆவேசத்தை – ; (அதற்கு – அந்த ஆவேசம் தோன்றியதற்கு;) ஒரு கர்த்தா – காரணமாக ஒரு தலைவன் (ஆத்மா) ; உண்டு – ; என்னாது – என்று கருதி அமைதியடையாமல்; உலகில் சொல்லும் – உலகத்தில் சோதிடர் சொல்லுகின்ற; பேராத சோதிடத்தை – நீங்காத பொய் வார்த்தைகளையும்; காலம் என்னா–கொடிய நோய் ஏற்பட்டால், 'காலவினை' என்று தெளிவடையாமல்; பித்து ஆகும் வயித்தியத்தை – மருத்துவம் பலவும் செய்து கூடக் குணப்படாமல் இருப்பது கண்டு, பித்துக் கொள்ளச் செய்யும் மருத்துவ சாத்திரத்தையும்; சடங்களையும்–கல்லும் செம்புமான அசத்துப் பொருளாலான உருவங்களை; பிறங்கும் – அவற்றில் விளங்கும்; சித்தை – பேரறிவுப் பிரமத்தை; ஓராது – சிந்திக்காமல்; தெய்வம் என்றே – கடவுள் என்றே; உணர்ந்திடும் – கருதும்; இம் மார்க்கம் எல்லாம் – ஆக இந்த வழக்கங்களை எல்லாம்; உணர்வா(க) – பிரம நினைவுடன்; காணும் – மாற்றிக் கொள்ளத்தக்க; சீர் ஆகும் – நன்னெறி ஆகிய; துணிவுதனை – வைராக்கியத்தை; அருள்வாய்–;

*கருத்து* : அம்மா! அறியாமையை மாற்றி, ஞானமடையும் மனவுறுதியைத் தா.

## கொச்சகக் கலிப்பா

16. சும்மா இருந்தறியேன் சுகம்இதுவாம் எனத்தொடரேன்
இம்மா நிலத்துஉறுகாண் பனஇவையே சுகம்என்னும்
இம்மா மயல்தீரும் படிஏழை முகம்பாராய்
அம்மா அறிவுருவே திருநெல்லை அகமிதமே.

*பதவுரை*: அம்மா–; அறிவு உருவே – ஞான சொரூபியே; திருநெல்லை –; (என்னும் பெயர்கொண்ட) அகமிதமே – ஆத்மானந்தமே; சும்மா–இருந்தறியேன்–நான் மனச்சலனம் இன்றி;– மௌனத்தில் இருக்க அறியேன்; சுகம்; என– இதுவாம் – இம் மௌனமே சுகம் என்று கருதி தொடரேன்–கடைப்பிடிக்க அறியேன். இம் மா நிலத்து – இந்தப் பெரிய உலகத்தில்; உறு–வந்துள்ளவையான; காண்பன இவையே–காணக்

கூடிய பொருள்களையே; சுகம் என்னும் – இன்பம் என்று கருதும்; இம் மா மயல் – எனது இந்த ஆழ்ந்த மயக்கம்; தீரும்படி – ; ஏழை–அறியாதவனாகிய எனது; முகம் பாராய் – நிலையைப் பார்த்து இரங்குவாயாக.

*கருத்துரை* : ஆசையால் சஞ்சலமடைகின்றேன். அமைதி அருள்.

17. பேய்ஆ யினும்தருவில் கணம்நிலைபெற் றிடும்பேயின்
ஓயா துழல்தமியேன் மனதுஒன்றின் நிலையின்றி
நோயா லயதனுவாய் அனுதினம்நை வதுநோக்காய்
ஆயே, அரும்பொருளே, திருநெல்லை அகமிதமே,

*பதவுரை* : ஆயே – அம்மா; அரும்பொருளே – கிட்டுதற்கு அரிய பரம்பொருளே; திருநெல்லை அகமிதமே; பேயாயினும் –; கணம் – ஒரு கணமேனும்; தருவில் – மரத்தில்; நிலைபெற்றிடும் – நிலையாக நிற்கும். பேயின் – அப்பேயைவிட; ஓயாது – ஒரு கணமும் ஓய்ந்திராமல்; உழல் – திரியும்; தமியேன்–கதியற்றவனாகிய நான்; மனது ஒன்றின்– மனத்தின் குணத்தால்; நிலை இன்றி – ஒரு நிலைப்படாது; நோய் ஆலயம் – பிணிகளுக்கு உறைவிடமாகிய; தனுவாய் – உடம்புடன்; அனுதினமும் – நாள்விடாமல்; நைவது நொந்திருத்தலை; நோக்காய் – உன் அருட்கண்ணால் பார்த்தருள்வாய்.

*கருத்து* : நான் பெரிதும் அலைந்து, கவலையாலும் நோய்களினாலும் துன்புறுகின்றேன்.

18. ஏகா இருளகமாய் இருந்ததனால் இதம்அகிதத்
தாகா திகளாலே தினம்அறவும் துயர்உற்றேன்
ஓகோ இனம்உனைநான் அடைந்துஉய்யும் வகைஉளதோ
ஆகா அவைஆகுந் திருநெல்லை யகமிதமே.

*பதவுரை* : ஆகா அவை – நடவாதவற்றையும்; ஆகும் – நடைபெறச் செய்யும்; திருநெல்லை அகமிதமே – ; அகம் – என் உள்ளம்; ஏகா – எளிதில் அகலாத; இருளாய் இருந்ததனால்; இதம் – சுகமானவற்றையும்; அகிதம்–துன்பமானவற்றையும்; (முறையே) தாக ஆதிகளாலே–அறியாமை விரும்புதலும், வெறுத்தலும் செய்து, அவ்விருப்பு வெறுப்புகளால்; தினம் – நாள்தோறும்; அறவும் – மிகவும்; துயர் உற்றேன்– துன்பமடைந்தேன். ஓகோ –; உடையதாய் நான் –; உனை – உன் திருவடியை; அடைந்து – சார்ந்து; உய்யும் – தப்பிப் பிழைக்கும்; வகை – வழி ; இனம் – இன்னும்; உளதோ – உள்ளதா?

*கருத்துரை* : நான் விருப்பு வெறுப்புகளால் துன்புறுகின்றேன்.

## அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

19. வந்தே புவியின் மதிஅவித்தை
வசமாய்க் காய வசமாக

வந்தே வருத்தும் சுகாசுகத்தை
    மாய்க்கும் வழியேது எனத்தேடி
வந்தேன் உனது திருநெல்லை
    மகத்துஆம் பதிவந்து உன்அருளால்
வந்தேன் வந்தேன் பரிபூர்ண
    வனச மலர்த்தாள் தான்ஆக.

*பதவுரை* : புவியின் – இப்பூவுலகில்; வந்தே – பிறந்து; மதி – எனது புத்தி; அவித்தை– அவிச்சை (அறியாமை) யின்; வசமாய் – வலைப்பட்டு; (அதனால்) காய வசம் ஆக – 'நான் உடம்பு' என்று கருதும் தேகாத்ம புத்தியாய் நிற்க; வந்தே – உடம்பிற்கு வந்து; வருத்தும் – பாதிக்கும்; சுக அசுகத்தை – இன்ப துன்பங்கள் என்ற இரட்டையை; மாய்க்கும் – நீக்கி, ஒரு நிலைப்பட்ட மனம் அடையக் கூடிய; வழி – ; ஏது – ; என – ; தேடி – ; திருநெல்லை–திருநெல்லை அம்பிகையாகிய உனது – ; மகத்து ஆம் – பெருமை யுடைய; பதி – தலத்திற்கு; வந்தேன் – ; வந்து – அங்ஙனம் வந்த பின்; உன் அருளால்; (உனது) பரிபூர்ண – முழு நிறைவாகிய; வனசமலர் – தாமரை மலர் போன்ற; தாள் – திருவடி; தான் – ; ஆக – எனக்குத் துணையாவதற்காக; வந்தேன் வந்தேன்–உன்னைச் சரணடைந்தேன்.

*கருத்துரை* : நான் இன்ப துன்பங்களை விடுத்துச் சஞ்சலம் அற்ற அமைதி நிலையைப் பெற, உன் திருவடிச் சார்பைத் தா.

**20.** அறிவுஅறியா மைஇரண்டும் அறிபவளை அகமிதமும் ஆகி
எங்கும் செறிஒளியாய் இருந்துஅகில சிருட்டிதிதி சங்காரச்
செயல்உள் ளாளைப் பிறிவுஅறியா அடியர்உளம் பிறங்கும்இரும்
பூரணியைப் பேதா பேதக் குறிஇறந்த நிலையாளைக்
குணக்கடலை அருட்குன்றைக் குறித்து வாழ்வாம்.

*பதவுரை* : அறிவு அறியாமை – அறிவு, அறியாமை என்ற இரட்டையை; அறிபவளை உணர்ந்து கொள்ளும் ஆற்றல் உடையவளை; அகமிதமுமாகி – ஜீவாத்மாவும் ஆகி; (அதே சமயம்) எங்கும் – ; செறி – நிறைந்த; ஒளியாய் – ; இருந்து – ; அகில – அனைத்து உலகங்களையும் ; சிருட்டி – படைத்தல்; திதி – காத்தல்; சங்காரம் – ஒடுக்குதல்; (ஆகிய) செயல் உள்ளாளை – மூன்று செயலும் செய்பவளை; பிறிவு அறியா – தன்னை மறவாத; அடியர்–அன்பர்களின்; உளம் – உள்ளத்தில்; பிறங்கும் – ஒளிவீசும்; இரும்–பெரிய; பூரணியை – முழுநிறைவாயுள்ளவளை; பேத, அபேதக் குறி – வேற்றுமையும் ஒற்றுமையும் காட்டும் அடையாளங்களை; இறந்த–கடந்த; நிலையாளை – பரநிலையில் உள்ளவளை; குணக்கடலை – சகுணப் பிரமமாய், நற்குணங்களின் தாயகமாயுள்ளவளை; அருட் குன்றை – அருளில் உயர்ந்தவளை; (திருநெல்லையம்மையை) குறித்து – கருதி அன்பு செய்து; வாழ்வாம் – வாழ்வு பெறுவோம்.

*கருத்துரை:* திருநெல்லையம்பிகை உலக காரணி. பிரம சொரூபி. சகுணபிரமமாயும் உள்ளவள். அவளிடத்து அன்பு செய்தலே வாழ்வாவது.

21. ஆசைஎனும் விடம்அகற்றும் அருமருந்தை அம்பரத்துக்கு
அடங்காது அந்த ஆசுஅகலும் அம்பரத்தை அணுவினுக்கும்
அணுஆகி, அனந்தம் ஆகும் தேசஉருவ வடிவாளை,
சித்தம்முதல் ஆறுஅறியாத் திறத்தி னாளைக் கோசம்எனும்
ஐம்பூதக் குரம்பைஉறைந்து உறையாளைக் குறித்து வாழ்வாம்.

*பதவுரை :* ஆசை எனும் – ஆசையாகிய; விடம் – நஞ்சை; அகற்றும்– மனத்திலிருந்து போக்க வல்ல; அரு – அரிய; மருந்தை – ; அம்பரத்துக்கு – ஐம்பூதங்களுள் ஒன்றாகிய ஆகாயத்தினைப் போன்றவளாயினும், அதற்குள்; அடங்காது–; அந்த; ஆசு – பூத தத்துவம் என்ற குறைபாடு; அகலும் – அற்ற; அம்பரத்தை; பரமாகாயமாக உள்ளவளை; அணுவினுக்கும் – அணுவைவிட; அணுஆகி – சிறிதாகி; (அதே சமயம்) அனந்தமாகும் – அளக்க முடியாத மிகப் பெரிய வடிவம் உடைய; தேசஉருவ வடிவாளை – ஒளி மயமான திருமேனி உடையவளை; சித்தம் முதல் ஆறு – மனம், புத்தி, சித்தம், அகங்காரம், குணம், வாக்கு என்ற ஆறுக்கும்; அறியா – அறியப்படாத; திறத்தினாளை – அரிய தன்மை உடையவளை; கோசம் எனும் – அன்னமய கோசம் என்று கூறப்படுவதும்; ஐம்பூதக் குரம்பை – ஐம்பூத வகையைச் சேர்ந்த நிலம் என்பதிலிருந்து உண்டானதுமாகிய குடிசையில்; உறைந்து – ஜீவாத்மாவாகச் சிறிது காலம் வாழ்ந்தாலும்; (உண்மையில்) உறையாத – அதையும், கால தத்துவத்தையும் கடந்த பிரமசொரூபியை; குறித்து – கருதி அன்பு செய்து; வாழ்வாம் – வாழ்வு பெறுவோம்.

*கருத்து :* அவள் சிறிதினும் சிறியாள். பெரிதினும் பெரியாள். (அனோரணி, மதோன்மதி). ஜீவாத்மாவும் அவளே; பரமாத்மாவும் அவளே.

22. படிஅளந்த மால்அயனும் அரனும்எனது யான்என்னும் பாவத்
தாலே மடிய,அது இன்றிஅன வரதம்ஒரு நிலையாகும் வடிவத்
தாளை, முடிவுஅறியாப் பெரும்பாழை, அகமிதமும்
விளக்கிஎனை முடித்திட் டாளைக் கொடியமன வேட்கைஅற
வரும்அரிய பூரணியைக் குறித்து வாழ்வாம்.

*பதவுரை :* படி–மூன்று உலகங்களையும்; அளந்த – இரண்டு காலால் அளந்து அடக்கிய; மால் – மகாவிஷ்ணுவும்; அயனும் – பிரமனும்; அரனும் – உருத்திரனும்; எனது, யான் என்னும் – யான் என்றும் எனது என்றும் முறையே கருதிக்கொள்ளும்; பாவத்தாலே – கற்பனையால்; மடிய – ஜீவாத்மாவாகவே தமது பத வாழ்வை முடித்துக் கொள்ள; (அதே சமயம்) அது – அந்த முடிவு; இன்றி – இல்லாமல்; அனவரதம் – என்றென்றும்; ஒரு நிலை ஆகும்–ஒரே இருப்பாய், மாறாத 'சத்துப்' பொருளாய் உள்ள; வடிவத்தாளை – ஞானத்திருமேனி உடையவளை; முடிவு – 'முடிந்து போவது' என்பது; அறியா– இல்லாத; பெரும்பாழை – கண் காணும் நிலைகடந்த சொரூபத்தை;

அகமிதமும் – 'அது நான்' என்பதை; விளக்கி–உணர்த்தி; எனை – என்னை; முடித்திட்டாளை – ஜீவாத்மா நிலையிலிருந்து மாற்றி, நிறைபரிபூர்ண நிலைக்கு உரியவனாகச் செய்தவளை; கொடிய – ; மன வேட்கை – மனத்தின் தாபம்; அற – நீங்கும்படி; வரும் – ; அரிய – எண்ணுதற்கு அரிய ; பூரணியை – பரப்பிரமத்தை; குறித்து – கருதி அன்பு செய்து; வாழ்வாம்–வாழ்வு பெறுவோம்.

*கருத்துரை* : அம்பிகை என்றும் மாறாச் சத்துப் பொருள். தன்னை வழிபடுவோரைப் பிரம்நிலை அடையச் செய்வாள்.

23. தீங்குஇடர்கள் இல்லாளைச் சிதம்பரமாம் வடிவாளைச் சிந்தை
ஆதி ஓங்குஇருமூன்று ஆனாளை உன்னரிய வடிவாளை
உணர்வி லேனைத் தாங்குதிரு வுளத்தாளைச் சந்ததம்தன்
மயத்தாளைத் தாமம் மூன்றும் நீங்காது விளக்குவளை
நெடுங்கழனிப் பதியாளை நினைத்தல் செய்வாம்.

*பதவுரை* : தீங்கு – தீமையும்; இடர்கள் – தடைகளும்; இல்லாளை–; சிதம்பரம் ஆம் – சிதாகாயமே; வடிவாளை – வடிவமாக உள்ளவளை; சிந்தை ஆதி – சித்தம் முதலிய; ஓங்கு – உயர்ந்த; இரு மூன்று – ஆறு தத்துவங்களும்; ஆனாளை – ஆனவளை; உன் அரிய – எண்ணுவதற்கு அரிய; வடிவாளை – மேலாம் வடிவினை உடையவளை; உணர்விலேனை–உணர்வு இல்லாத என்னை; தாங்கு–நினைக்கும்; திருவுளத்தாளை–; சந்ததம் தன் மயத்தாளை– (ஜீவாத்மாக்களாகத் தோன்றினாலும், தான் எவ்வகையிலும். விகாரப்படாமல்) என்றும் பிரமநிலையிலேயே இருப்பவளை; தாமம் மூன்றும் – மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம், என்ற மூன்று உடம்புகளிலும்; நீங்காது –; (இருந்து) விளக்குவளை – தெளிவிப்பவளை; நெடும் – பெரிய; கழனிப் பதியாளை – கழனிவாசல் தலத்தில் கோயில் கொண்டிருப்பவளை; நினைத்தல் செய்வாம் – நினைத்து வழிபடுவோம்.

*கருத்துரை* : சிதாகாயமே அவளது வடிவம். ஆயினும் சிந்திப்பவர்க்கு உணரப்படுவாள். கருணை உடையவள். பிரமநிலை மாறாதவள். நம் உடம்பில் நின்று அறிவை விளக்குபவள்.

24. அல்லல்எனும் பிணிஅகற்றும் அருமருந்தை எனதுஅகத்துள்
அமர்ந்த தாயைச், சொல்லரிய பரஞ்சுடரை, அகம்புறமும்
சுகம்அளிக்கும் துரிய வாழ்வைப், பல்லுருவும் படைப்பாளைப்,
படைத்தவையாய் இருப்பாளைப், படையா தாளை, செல்லாத
இருள்அகற்றும் திருநெல்லை நாயகியைச் சிந்தை செய்வாம்.

*பதவுரை*: அல்லல் எனும் – மிகப் பெரிய துன்பமாகிய; பிணி – பிறவிப் பிணியை; அகற்றும் – நீக்கும்; அருமருந்தை – கிடைத்தற்கரிய மருந்தை; எனது; அகத்துள் – உள்ளத்தினுள்; அமர்ந்த – விருப்பத்துடன் வீற்றிருந்த; தாயை; சொல் அரிய – இன்னதென்று வருணிக்கும் சொல்லுக்கு அப்பாற்பட்ட; பரஞ்சுடரை – மேலான ஒளிப்

பிழம்பை; அகம் – உயிரின் உள்ளும்; புறமும் – உடம்பிலும்; சுகம் அளிக்கும் –; துரிய – துரியம் என்ற மனவுணர்வு நிலையில் உணரப்படும்; வாழ்வை – உணர்வுப் பொருளை; பல் உருவும் – பலவகை ஜீவராசிகளையும்; படைப்பாளை; படைத்தவையாய் – அவ்வாறு படைக்கப்பட்ட ஜீவாத்மாவாய்; இருப்பாளை – சிறிது காலம் விளங்குபவளை; படையாதாளை – இதைச் சங்கற்பத்தால் செய்து, உண்மையில், தான் செயலற்றவளாய் உள்ள பிரமத்தை; செல்லாத – எளிதில் நீங்காத; இருள் – அவிச்சை என்ற இருட்டை; அகற்றும் – போக்கும்; திருநெல்லை நாயகியை; சிந்தை செய்வாம்–எண்ணித் துதிப்போம்.

*கருத்துரை* : அம்பிகை பிறவியை நீக்குபவள். பேருணர்வுக்கு விருந்து. செயல் செய்பவள் போல யாதும் செய்யாமல் இருப்பவள்.

25. நான்அவன்ஈது அதுஎனலும் ஆயி னாளை
நாடஅரிய இவற்றுஅகண்டம் ஆய்நின் றாளை
ஆனசகம் வரநிமித்தம் ஆயி னாளை
அதுவொடுஉபா தானம்என ஆயி னாளை
ஈனமனம் இல்இதயத்து எய்து வாளை
ஈனர்உளத்து இருந்தும்அவர்க்கு எய்தா தாளைத்
தீனம்அறச் சேடம்அதாம் திருக்கா வாளைத்
திருநெல்லை நாயகியைச் சிந்தை செய்வாம்.

*பதவுரை* : நான் அவன் – நான் என்றும், அவன் என்றும் சொல்லும் ஜீவாத்மாக்கள்; ஈது அது – இப்பொருள் என்றும், அப்பொருள் என்றும் சொல்லும் சடப்பொருள்கள் என்ற இவ்விரு வகைப் பொருளாகவும் ஆயினாளை; நாடஅரிய – ஆராய்ந்து அறிய முடியாததாய்; இவற்று – இவற்றிற்கு; அகண்டமாய் – அகப்படாத பரம் பொருளாக நிற்பவளை; ஆன – பலவகைப்பட்ட; (அந்த) சகம் – உலகம்; வர – உண்டாவதற்கு; நிமித்தம் – காரணம்; ஆயினாளை; அதுவொடு – சகத்திற்கு; உபாதானம் – மூலப்பொருள்; என ஆயினாளை; ஈனம் – குறைவு பட்டதாகிய; மனம் –; இல் – இல்லாதவனது; இதயத்து – ஜீவ உணர்வில்; எய்து வாளை – உணரப்படுபவளை; ஈனர் –குறைவுபட்ட மனம் உடையவர்களது; உளத்து–மனத்து; இருந்தும்–எங்கும் பரவியிருக்கும் முறையில் இருந்தாலும்; அவர்க்கு–அவரால்; எய்தாதாளை– உணரப்படாதவளை; தீனம் – கதியில்லாத நிலை; அற – நீங்கும்படி; சேடம் அது ஆம்– எல்லாம் அழிந்தாலும், தான் அழியாமல் மிஞ்சி நிற்கும் பிரமம் என்கின்ற; திருக்காவாளை – அழகிய நிழல் கனிந்த சோலையாக விளங்குபவளை; திருநெல்லை நாயகியை – ; சிந்தை செய்வாம்.

*கருத்துரை* : அவளே சகம்; அதே சமயம் அவளே அகண்டாகாரப் பிரமம். அவளே சகத்திற்கு நிமித்தம்; அவளே அதற்கு மூலப்பொருள். ஆனால் சகத்தைப் போல் அழிவதில்லை. என்றும் உள்ளாள். மேலும், என்றும் நிழல் பரப்பி நிற்கிறாள்.

26. வானாடர் மணம்பொருந்தும் வாழ்வுநினை யாதே
மண்நாடர் பதிஅடையும் வாழ்க்கைநினை யாதே
நான்நான்என்று இல்வாழ்வில் நண்ணிஉழ லாதே
நாலிரண்டு சமயநெறி நாடிஅலை யாதே
ஆனாலும் அத்துவித நிலையைமற வாதே
அகம்புறமும் ஓர்உருவை அன்றிஉண ராதே
தேன்நாடும் காவில்மலர்த் தேனாறு பாயும்
தென்கழனித் திருநெல்லை மின்பாதம் நாடே.

*பதவுரை* : (நெஞ்சே) வானாடர் – தேவர்கள்; மணம் பொருந்தும் – காதலித்துக் கூடும் காந்தர்வ மணம் செய்துகொள்ளும்; வாழ்வை – ; நினையாதே – ; மண்நாடர் – இப்பூவுலகில், நாடாளும் மன்னர்கள்; பதி – தமது தலை நகரில்; அடையும் – பெறும்; வாழ்க்கை – சுகபோக வாழ்க்கையை ; நினையாதே –; நான், நான் என்று – (எதிலும், எங்கும், எப்பொழுதும்) 'நான்' – என்ற தன்முனைப்போடு; இல்வாழ்வில் – இல்லறத்தானாக வாழும் வாழ்வில்; நண்ணி – ஈடுபட்டு; உழலாதே – மனம் சுழன்று அலையாதே; நால் இரண்டு – எட்டு (எனப்படும்); சமயநெறி – சமயங்களில்; நாடி– உண்மையை தேடி; அலையாதே – ; ஆனாலும் – அவற்றுள் யாதாயினும் ஒரு சமய நெறியைப் பின்பற்றினாலும்; அத்துவித நிலையை – உண்மை இரண்டு அற்றது என்ற மேலான உண்மை நிலையை; மறவாதே ; அகம் – உள்ளத்திலும்; புறமும் – உலகத்திலும்; ஓர் உருவை அன்றி – பிரம சொரூபத்தை அல்லாமல்; உணராதே – உருவங்களில் ஆழ்ந்து நில்லாதே; தேன் – வண்டுகள்; நாடும் – தேடிச் செல்லும் காவில் – சோலையில்; மலர்– மலர்களில் உண்டாகிய; தேனாறு – தேன் ஆறாகப் பெருகி; பாயும் – ; தென் கழனி – கழனிவாசற் குடியில் வீற்றிருக்கும்; திருநெல்லை மின் – திருநெல்லையம்பிகையின்; பாதம் – திருவடிகளை; நாடு – சரணமாக அடைவாயாக.

*கருத்துரை* : இன்ப வாழ்க்கையால் பயன் இல்லை. வெவ்வேறு சமயநெறிகளில் போக வேண்டாம். பிரமமே உண்மை.

27. இன்னல்உறும் உடல்இருக்க எண்ணும்எணம் போதும்
இருநான்கு சித்திகளில் இச்சைவைத்தல் போதும்
நன்னயமாம் சோதிடத்தில் நாட்டம்இனிப் போதும்
நல்இரும்பு பொன்னாக்கும் நசையதுவும் போதும்
பின்னம்உறும் வைத்தியத்தைப் பெறும்ஆசை போதும்
பேதம்உறும் இவைமுதலாம் பிராந்தியினை விட்டுத்
தென்னனுக்கும் மலையனுக்கும் செல்வினை லாகும்
தென்கழனித் திருநெல்லை மின்பாதம் நாடே.

*பதவுரை* : இன்னல் உறும் – பிணியால் துன்புறும்; உடல் – ; இருக்க – பல ஆண்டுகள் இருக்க; எண்ணும் – ; எணம் – ஆசை; போதும் – ; இரு நான்கு

சித்திகளில் – 'அட்டமா சித்தி' எனப்படும் எட்டுச் சித்திகளை அடைய; இச்சை வைத்தல் – இலட்சியம் கொண்டது; போதும் – ; நன் நயமாம் – நன்மை யெனத் தோன்றுகின்ற; சோதிடத்தில் –; நாட்டம் – கருத்து வைத்தது; இனி – ; போதும் ; இரும்பு இரும்பை; நல்பொன்–உயர்ந்த பொன்னாக; ஆக்கும் – மாற்றும்; நசையதுவும் – விருப்பமும்; போதும்–; பின்னம் உறும் – வேறுபல; வைத்தியத்தை – ; பெறும் – ;ஆசை– ; போதும் ; பேதம் உறும் – மாறுபட்ட; இவை முதலாம் – இவை போன்ற; பிராந்தியினை – மயக்கத்தை; விட்டு – நீக்கி; தென்னனுக்கும் – பாண்டியனுக்கும்; மலையனுக்கும் – இமய மலையரசனுக்கும்; செல்வி எனலாகும் – மகளாகிய; தென் கழனித் திருநெல்லைமின் பாதம் நாடு – ;

*கருத்துரை* : பொன்னிலும் புகழிலும் ஆசை வைக்காமல் அம்பிகையை வணங்குக.

28. பார்க்கஒணா அல்குல்தனைப் படம்எனலும் போதும்
பகரஒணா ஊருவினை அரம்பைஎனல் போதும்
ஆர்க்கவரும் இருகரத்தைக் காந்தள்எனல் போதும்
அக்குஇசையும் கால்கள்தமை வரால்எனலும் போதும்
பார்க்குள்நிதம் தேய்பதத்தைப் பதுமம்எனல் போதும்
பலநாளும் பெண்ணாலே பட்டதுயர் போதும்
தீர்க்கரிய இவ்அரந்தை தீரும்வழி யாகத்
தென்கழனித் திருநெல்லை மின்பாதம் நாடே.

*பதவுரை* : பார்க்க ஒணா – மறைவிடமாகிய; அல்குல்தனை – ; படம் எனலும் – பாம்பின் படம் போலும் என்று வருணித்ததும்; போதும் – ; பகர ஒணா – மற்றொரு மறைவிடமாகிய; ஊருவினை – தொடையை; அரம்பை – வாழை ; எனல் – என வருணித்தது போதும் – ; ஆர்க்க – கட்டிக்கொள்ள; வரும் – ஆர்வத்துடன் நீட்டப்படும்; இரு கரத்தை – கைகளை; காந்தள் – காந்தள் மலர் போலும்; எனல் போதும் – ; அக்கு – எலும்பு; இசையும் – பொருந்திய; கால்கள் தமை – ; வரால் – வரால்மீன் போன்றவை; எனலும் போதும் ; பார்க்குள் – தரையில்; நிதம் – தினமும்; தேய் – நடந்து தேயும் ; பதத்தை – பாதங்களை; பதுமம் – தாமரை; எனல் போதும் – ; பெண்ணாலே – ; பட்ட துயர் போதும்; தீர்க்க அரிய–அகற்றுவதற்கு அரிய ; இவ் அரந்தை – இத்துன்பம் ; தீரும் வழியாக – ; தென் கழனித் திருநெல்லை மின் பாதம் நாடு – ;

*கருத்துரை* : மகளிரின் அழகை வருணித்தலை விட்டு, அம்பிகையை வணங்குக.

29. சீரா இருக்கும் பரமான இன்பச் சிறப்புஅடைய,
நாரா இருக்க, அரவாக் குறித்து நலிவதுபோல்,
வாராது இருக்க, உருநாமம் நாடி வரும்நலிவு
பாராது இருக்க வரம்தா, திருநெல்லைப் பைங்கிளியே.

*பதவுரை* : திருநெல்லை –; (ஆகிய) பைங்கிளியே – பச்சைக் கிளிபோல்வாளே; சீரா (க) இருக்கும் – புகழ்வாய்ந்து நிற்கும்; பரமான – மேலான; இன்ப – மோட்சத்தின்;

சிறப்பு – சிறப்பை; அடைய (நான்) அடையும் பொருட்டு; நாரா (க) இருக்க – கிடப்பது கயிறாக இருக்க; (அதை) அரவா (க) – பாம்பாகக் கருதி; நலிவது போல் – அச்சத்தால் துன்புறுவது போல்; வாராது இருக்க – பிரமம் உருவத்துடனும், பெயருடனும் வராத பரம்பொருளாக இருக்க; உரு – உருவத்தையும், நாமம் – பெயரையும்; நாடி – (உடைய) தெய்வங்களைச் சார்ந்து உய்வு அடைவதற்கு முயன்று; வரும் – அதனால் நன்மை கிடைக்காததால் உண்டாகும்; நலிவு – துன்பத்தை; பாராது இருக்க – நான் அடையாமலிருக்க; வரம் தா – ;

*கருத்துரை* : பிரமத்தை விட்டுத் தெய்வங்களை வழிபடுவதால் வீடுபேற்றுப் பயன் இல்லை.

**30.** தீண்டாது இருக்கும் சவம்போல் இருக்கும்இத் தேகத்திலே
ஆண்டுஆண்டு இருந்தும் அழிந்தோம்; அதுதிண்ணம் ஆகையினால்
மாண்டே சனித்தது ஆகாமல், உன்னடி வைத்து, அதனை
வேண்டாது இருக்க வரம்தா திருநெல்லை மெல்லியலே.

*பதவுரை* : திருநெல்லை –; (ஆகிய) மெல்லியலே – அம்மையே ; தீண்டாது இருக்கும் – யாரும் தொடக் கூசுகின்ற; சவம் போல் இருக்கும் ; இத்தேகத்திலே – ; ஆண்டு ஆண்டு – பல ஆண்டுகள்; இருந்தும் – வாழ்ந்தும் ; அழிந்தோம் – இறந்து போகிறோம். அது (ஆதலால்) மரணம் ; திண்ணம் – (வருவது) உறுதி; ஆகையினால் ; மாண்டே – இறந்து; சனித்தது – (மீண்டும்) பிறந்து வாழ்தலாகிய தொழிலை; ஆகாமல் – உடையவனாகாமல்; உன் அடி – உனது திருவடியை; வைத்து – என் நெஞ்சில் பதித்து; அதனை – பிறவியை; வேண்டாதிருக்க – ; வரம் தா ;

*கருத்துரை* : பிறவியை விரும்பாத வரம் தா.

**31.** விடம்தாங்கு கண்டத்தர் மெய்யினில் பாதி விடாமல்உறைந்து
அடங்காத அழகுரு வானவ ளே, அடி யேனும்இந்தச்
சடம்தான் சுமந்தும் சலியாமல், நின்பொற் சரணில்மனம்
அடங்காது அரந்தை உற்றேன் அபிராமி அடைக்கலமே.

*பதவுரை* : அபிராமி – அபிராம வல்லியே; விடம் தாங்கு – நஞ்சு பொருந்திய; கண்டத்தர் – கழுத்தை உடைய சிவபெருமானின்; மெய்யினில் – உடம்பில்; பாதியை – இடது பக்கத்தை; விடாமல்; உறைந்து – வீற்றிருந்து; அடங்காத – வருணனைக்கு அடங்காத; அழகு உருவானவளே – அழகே வடிவமானவளே; அடியேனும் – ; இந்த – ; சடம் – உடம்பை; சுமந்து;; சலியாமல் –சலியாமலிருக்கும்படி; நின் – உன்னுடைய; பொன் – பொன் போன்ற; சரணில் – திரு வடியில்; மனம் அடங்காது – மனம் வைக்க மாட்டாமல்; அரந்தை–துன்பம்; உற்றேன் – அடைந்தேன்; அடைக்கலமே – (ஆதலால்) உன்னைச் சரணடைந்தேன்.

*கருத்துரை* : நான் பிறவாமல் இருக்க, என் மனம் பரமப் பொருளாகிய உண்மையைத் தியானிக்க வேண்டும்.

32. உன்உருவில் இவ்உலகம் உண்டாய், இருந்து,ஒடுங்க
முன்னும் பினும்இருந்த மூலமே – பின்னம்அற
எவ்உலகும் தானாய் இருந்தமௌ னத்தலைவி
தவ்வுமனம் தீரவரம் தா.

*பதவுரை* : உன் உருவில் – உன்னிடத்திலிருந்து; இவ் உலகம் – இந்த உலகங்களும் உயிர்களும்; உண்டாய்; இருந்து – சிலகாலம் வாழ்ந்து, ஒடுங்க – ; முன்னும் – அந்தப் படைப்பிற்கு முன்னும்; பின்னும் – அந்த ஒடுக்கத்திற்குப் பிறகும்; இருந்த – இருக்கின்ற; மூலமே – மூலப்பொருளே; (அப்படி உலகங்களைப் படைத்து) எவ்உலகும் – எல்லா உலகங்களும்; தானாய் – நீயாகவே; பின்னம் அற – (அவை) விகாரப் பட்டாலும், நீ விகாரப்படாமல்; இருந்த – ; மௌனத்தலைவி – அசைவு இல்லாத பிரமசொரூபமே; தவ்வும்–ஒன்றை விட்டு, ஒன்றைப் பிடித்து, நிலை மாறிக் கொண்டுள்ள; மனம் – என் மனம்; தீர – அழிய; வரம் தா–;

*கருத்துரை* : அம்மையே, நீ விகாரப் படாமல் இருக்கின்றாய். நானோ விகாரப்பட்டுக்கொண்டே யிருக்கின்றேன். இந்நிலையை மாற்றியருள்வாய்.

33. இந்த உடற்சுமையை ஏன்சுமந்து நொந்துஅலைந்தேன்
பந்தம் கடந்த பராபரையே – சுந்தரியே
வாங்குதற்கு நீஒருத்தி வல்லாளே வந்தசுமை
தாங்குவதும் இல்லைமெய்தந் தால்.

*பதவுரை* : பந்தம் – பாசபந்தங்களை; கடந்த – ; பராபரையே – ; சுந்தரியே – ; (நான்) ஏன் – ; இந்த உடல் – ; (ஆகிய) சுமையை; சுமந்து – ; நொந்து – மனம் வருந்தி; அலைந்தேன்? – ; வாங்குதற்கு – (இந்தச் சுமையை) இறக்குவதற்கு ; நீ ஒருத்தி – நீ மட்டுமே; வல்லாள் – வல்லவள்; (நீ என் பால் கருணை கூர்ந்து) மெய்–மெய்ஞ்ஞான மாகிய பிரம ஞானத்தை; தந்தால் – ; வந்த – என் (ஆத்மா) மீது கற்பனை செய்யப்பட்ட; சுமை – பிறப்பு, கர்மம் ஆகிய பாரத்தை; தாங்குவதும் – நான் தாங்கிக் கொண்டிருக்கிறேன் என்பதே ; இல்லை – ;

*கருத்துரை* : அம்மையே, நீ பிரமஞானம் தந்தால், இவ்வுடல் ஆத்மாவின்மீது கற்பிக்கப்பட்டது என்பது தெளிவாகும். அப்போது, இவ்வுடலும், நான் அனுபவிக்கும் வினைப் பயனும் சுமை அல்ல.

34. சித்தம் இரங்கிலையோ? சீர்நெல்லை நாயகியே
நித்தம் திருவடியை நீங்கினனோ? – சத்தம்முதல்
பஞ்ச விடயப் பழம்பகையைத் தீர்ப்பதுஎன்றோ
துஞ்சும்உடல் தீர்வதுஎன்றோ சொல்.

*பதவுரை* : சீர் – புகழ்படைத்த; நெல்லை நாயகியே – ; (என்பால்) சித்தம் ; இரங்கிலையோ? – இரக்கம் கொள்ள வில்லையா? (நான் செய்த குற்றம் என்ன?)

திருவடியை – ; நித்தம் – நாள்தோறும்; நீங்கினனோ – வணங்காதிருந்தேனா? (இல்லையே!) சத்தம் முதல் – ஒலி, ஓசை, ஊறு, மணம், சுவை என்ற; பஞ்சவிடய ஐம்புலன்களாகிய; பழம்பகையை – நெடுநாட் பகையை; (நீ) தீர்ப்பது – ; என்று?; (அதன் பயனாக) துஞ்சும் – சாகக்கூடிய; உடல் – இவ்வுடம்பு; தீர்வது – (எடுத்தற்குக் காரணமான பிறவி) நீங்குவது; என்று – எப்போது?

*கருத்துரை* : உன்னை விடாது வழிபடும் என் பிறப்பை நீக்கு.

35. இன்னம் கிருகப் பிரவேசம் எய்தாமல்
முன்னம் புகுந்தபுர மேமுடி்ய – அன்னமே
அன்னம் அளிப்பாய் அதுஇன்றேல், கூழ்காடி
என்னத்தால் பேதம் எனக்கு.

*பதவுரை* : அன்னமே – அன்னம் போன்ற அம்மையே; (நான்) இன்னம் – ; கிரகப்பிரவேசம் – வீடுபேறு அடைதல் என்பதை; எய்தாமல் – பெறாமல்; (வருந்துதலால்) முன்னம் – முன்பு; புகுந்த – அகப்பட்ட; புரம் – பிறவிச் சிறை; முடிவு எய்த – அழியும்படி; அன்னம் அளிப்பாய் – மெய்ஞ்ஞானமாகிய உணவைத் தருவாயாக; அது இன்றேல் – அது இல்லையாயின்; கூழ் – கூழோ; காடி – புளித்த கஞ்சியோ; (தருவாயாக); (அவை) என்னத்தால் – என்ன காரணத்தால், எனக்கே – ; பேதம் – வேறுபட்டவை ஆகும்?

*கருத்துரை* : நான் பிறவியை நீக்கும்படி நீ யாது தரினும், அதை ஏற்பேன்.

36. தொன்றுவரு மாயா துவந்துவமாம் சொப்பனம்விட்டு
என்று தொலையும்எனக்கு என்தாயே – அன்றுவரை
நஞ்சுண்டோன் போலிருந்து நான்மெலிந்து வாடுதலின்
துஞ்சித் தொலைதல் சுகம்.

*பதவுரை*: மாயா – மாயையினால்; தொன்று வரும் – மிகப் பழைய காலத்திலிருந்து ஜீவாத்மாவை மயக்கும்; துவந்துவம் ஆம் – இரட்டைகள் ஆகிய; சொப்பனம் – கனவு; எனக்கு – என்னை; விட்டு – ; என்று ; தொலையும் – நீங்கும்?; என் தாயே – ; அன்று வரை – ; நான் – ; நஞ்சு உண்டோன் போல – நஞ்சு அருந்தியவனைப் போல; இருந்து – மயங்கி இருந்து; மெலிந்து – ; வாடுதலின் – வாடுவதை விட; துஞ்சி – இறந்து; தொலைதல் – போவது; சுகம் – ;

*கருத்துரை* : அம்மையே, சஞ்சலம் வருவது இரட்டைகளால். அந்த மயக்கம் நீங்க அருள்வாயாக.

37. ஆகாத இவ்வுடலுக்கு ஆர்உதவி அம்மம்மே
போகாத துக்கம் பொருந்தியிடில் – ஒகோகோ
உன்னை நினைத்தல்;திண்ணம் உன்அருளால் இவ்வுடம்பு
பின்னப் படுவதுஎன்றோ பேசு.

*பதவுரை* : அம்மம்மே – அம்மா, அம்மா; போகாத – நீங்காத; துக்கம் – துயரம்; பொருந்தியிடில் – நேர்ந்தால்; ஓகோகோ – ; ஆகாத – ஒன்றுக்கும் பயன்படாத; இவ்உடலுக்கு – ; உதவி ஆர் – உதவி செய்பவர் யார்? (நீயே உதவுவாய். ஆனால்) திண்ணம் – (நான்) உறுதியாக; உன்னை நினைத்தல் – உன்னை எண்ணி வணங்குவதும்; உன் அருளால் – ; இவ் வுடம்பு – ; பின்னப்படுவது – இறந்து போக (நான்) மீண்டும் பிறவாத நிலையை அடைவதும்; என்று–எப்போது ? பேசு –;

*கருத்துரை* : அம்மா, உன் அருளால் தேகாபிமானம் நீங்க வேண்டும்.

38. சுற்றத்தார் இன்னம் தொலைந்தால் நிலைஎனவே
பற்றுஅற்றே நைந்துஇருத்தல் பண்புஆமோ? கொற்றன்உடல்
பாதி பரித்திருக்கும் பண்ணவியே உன்னைஅடைந்து
ஈதுஇருக்க ஞாயம்இல் லை.

*பதவுரை* : கொற்றவன் – சிவபெருமானின்; உடல் – உடம்பில் ; பாதி – பாதியை; பரித்திருக்கும் – இடமாகக் கொண்ட; பண்ணவியே – தேவியே; சுற்றத்தார் – என் உறவினர்; இன்னம் – இன்றே; தொலைந்தால் – என்னை விட்டு நீங்கினால்; நிலை – (மனப் பற்றுகளால் சஞ்சலப் படாமல்) ஒரு நிலைப்படும்; எனவே – என்று எண்ணி; பற்று அற்று – அன்பு இல்லாமல்; நைந்து – நொந்து; இருத்தல் – ; பண்பு ஆமோ – பண்பு ஆகுமா?; உன்னை – ; அடைந்து – நான் சரணாக அடைந்த பிறகு ; ஈது – இந்தச் சங்கடம்; இருக்க – எனக்கு இருப்பது; ஞாயம் இல்லை – முறையல்ல;

*கருத்துரை* : பண்பாட்டுக்கு மாறுபாடு இன்றிப் பற்றை நீக்க வழிகாட்டுவாயாக.

39. இருப்பதுபோ லேகரையும் இவ்உடம்போடு என்றும்
இருக்கச் சகிக்கவிலை என்தாய் – உருத்தெரியாது
இவ்உடலில் நீஇருந்தது இன்றுஅறிந்தேன் இன்னம்எனக்கு
இவ்வுடலால் எப்பயனும் இல்.

*பதவுரை* : என் தாய் – என் அன்னையே; இருப்பது போலே – ; (தோன்றி) கரையும்– தேயும்; இவ்வுடம்போடு – ; என்றும் – ; இருக்க – வாழ; சகிக்கவிலை – மனமில்லை; நீ– ; இவ்உடலில் –; உருதெரியாது – மறைந்து; இருந்தது – இருப்பதை; இன்று – ; அறிந்தேன் – அறிந்து கொண்டேன்; இவ் உடலால் – ; எனக்கு – ; இன்னம் – இனி ; எப்பயனும் – யாதொரு பிரயோசனமும் ; இல் – இல்லை;

*கருத்துரை* : அம்மா, நீ அழியாதவள். அழியும் உடம்பிலும் உள்ளாய் என்பதை அறிந்துகொண்டேனாதலின், தேகாபிமானத்தை விட்டேன்.

40. தன்னைமறந்து உன்மத்தன் தான்நடிக்க வந்ததுபோல்
என்னைமறந்து இத்தேகம் எய்தியதே – இன்னம்இதுஆய்ப்
போவதுஅழ கோஉனது பொன்அடிக்கே ஆளாக
ஆவது அழகோ அறை.

*பதவுரை* : உன்மத்தன் – பித்தன்; தன்னை மறந்து – தான் இன்னது செய்கிறோம் என்ற நினைவு இல்லாமல்; நடிக்க வந்தது போல் – ஒரு நாடகத்தில் ஒருபாத்திரமாக நடிப்பதற்கு வந்ததைப் போல; என்னை மறந்து – நான் ஆத்மா என்பதை மறந்து போனதால்; இத்தேகம் – இந்த உடம்பு; எய்தியது – வந்தது; இன்னம் – ; இது ஆய் – இது போன்ற பிறவியை எடுத்து;போவது – வீணாவது; அழகோ?; உனது –; பொன்னடிக்கு – அழகிய திருவடிக்கு ; ஆளாக – அடிமையாக; ஆவது – ; அழகோ. – ; அறை – கூறு.

*கருத்துரை* : நான் பிரம சொரூபம் என்பதை மறந்தேன் அதனால் பிறந்தேன்.

41. இராகத்து வேடமுடன் யான்ஆக்கை யோடுஇருந்து
மோகப் பிசாசாய் முடிவேனோ – பாகம்அற
எங்கும் சிதம்பரமாய் இன்புஉருவாய் உன்வடிவில்
தங்கி இருக்கவரம் தா.

*பதவுரை* : இராகம் – ஆசை; துவேடம் – வெறுப்பு; உடன் – ஆகிய இவற்றுடன் ஆக்கையோடு – இந்த உடம்பில்; இருந்து –; நான் – ; மோகப்பிசாசாய் – மிக்க மோகம் கொண்டு வாழ்ந்து; முடிவேனோ – இறந்து போவேனோ; பாகம் – துண்டு துண்டான இடமாக; அற – இல்லாமல்; எங்கும் – ; சிதம்பரமாய் – சிதாகாசமாய்; இன்பு உருவாய் – இன்பவடிவாய்; உன் வடிவில் – பிரமமாகிய உனது சொரூபத்தில்; தங்கி இருக்க – நிலையாக இருக்க; வரம் தா – ;

*கருத்துரை* : உடம்பில் இருக்கும் வரை விருப்பு வெறுப்புகள் இருக்கும். பிரமஞானம் வந்தால், அவை தொலைய, சிதாகாச அனுபவம் கிடைக்கும்.

42. சருமஆதி ஆறோடும் சந்ததம்நாறு ஆகம்
அருமையென எண்ணி அலைவேனோ–ஒருமையுடன்
அல்லல்எல்லாம் நீக்கும்உனது அம்பொன் திருவடியில்
புல்லுவதும் என்றோ புகல்

*பதவுரை* : சருமம் – தோல்; ஆதி – முதலிய; ஆறோடும் – அதை உள்ளிட்ட ஆறு தாதுக்களோடு இருந்து; சந்ததம் – என்றும்; நாறும் – ; ஆகம் – உடம்பு; அருமை–; என; எண்ணி – நினைத்து; அலைவேனோ – சிற்றின்பங்களுக்காக அலைந்து திரிவேனோ; ஒருமையுடன் – எனக்கு மன ஒருமை தருவதோடு; அல்லல் எல்லாம் – துன்பம் எல்லாம்; நீக்கும் – ; உனது – ; அம்பொன் – அழகிய; திருவடியில் – ; புல்லுவதும் – சேர்வதும்; என்று – எந்த நாளில்? புகல் – சொல்வாயாக.

*கருத்துரை* : நாறும் உடம்பால் வருவது துன்பம். அம்மையை ஒருமையுடன் நினைத்து உய்யவேண்டும்.

43. அவ்வியமாய் நீங்கா அரந்தை;சட மேவடிவாம்
இவ்உடம்போடு இன்னும் இருப்பேனோ – பவ்வம்அற

உன்னாது, உரையாதே, உள்ளம்அழிந்து உன்உருவாய்ப்
பின்னம்அற நிற்பதுஎன்றோ பேசு.

*பதவுரை*: அவ்வியமாய் – பொறாமை நீங்காதிருப்பது போல்; அரந்தை – துன்பம்; நீங்கா – நீங்கவில்லை; சடமே – செத்துப்போன பொருளிலிருந்து; வடிவாம் – உருவாகிய; இவ்உடம்போடு ; இன்னும் – ; இருப்பேனோ? – ; பவ்வம் – நினைப்பு என்ற கடல்; அற – நீங்க; உன்னாது – நினைத்தல் செய்யாமலும்; உரையாது – பேசாமலும்; உள்ளம் – மனம்; அழிந்து – ; உன் உருவாய் – பிரம சொரூபமாக; பின்னம் அற – நீயும் நானும் என்ற வேற்றுமை இன்றி, அத்துவிதமாய்; நிற்பது – ; என்று? – ; பேசு.

44. என்றும் பிணிஉளதாய், எந்நாளும் நைவுளதாய்ப்
பொன்றும் உடல்மயமாய்ப் போவேனோ – நன்று, தீது
ஆம்என்று உணர்வரிய அம்மையினது அம்பதத்தில்
ஏம்உறவே யான்இருப்பது என்று?

*பதவுரை* : என்றும் – 'எந்த நாளும்; பிணி உளதாய் – நோய் குடியிருத்தற்கு இடமாகவும்; எந்நாளும் – ; நைவு உளதாய் – நொந்து தேய்வதாகவும் (உள்ள); பொன்றும் – இறக்கும் தன்மையுடைய ; உடல் – உடம்பின் வசமாகவே; (இருந்து) போவேனோ– அழிவேனோ? ; நன்று தீது ஆம் என்று – நன்மையா, தீமையா என்று; உணர்வு அரிய–உணர்வதற்கு அரிய; அம்மையினது ; அம்பதத்தில் – அழகிய திருவடியில்; யான் – ; ஏம் உற – பாதுகாப்புடன்; இருப்பது – ; என்று? – ;

*கருத்துரை* : தேகாத்ம புத்தியுடன் இருந்து மடியாமல், வீடுபேறு பெற வேண்டும்.

45. மெய்போல் இருந்துஅழியும் மின்போலும் பொய்யுடலை
மெய்யாக எண்ணி மெலிவனோ ஐயோஈது
என்ன மயலைவைத்தாய், இன்னம் இரங்கலையோ
உன்உருவே நானாக உன்னு.

*பதவுரை* : மெய் போல் இருந்து – உண்மையைப் போலத் தோன்றி, சிறிது காலம் வாழ்ந்து; அழியும் – இறக்கும்; மின் போலும் – மின்னலைப் போன்ற; பொய் – பொய்யான; உடலை – ; மெய்யாக – மெய் என்றே; எண்ணி – ; மெலிவனோ – அது நோயுறுதல் கண்டு, மெலிந்து போவேனோ? ஐயோ – ; ஈது என்ன மயலை வைத்தாய் – எத்தகைய மயக்கத்தை ஏற்படுத்தினாய்?; இன்னம் – ; இரங்கலையோ – இரங்காயோ? நான் – ; உன் உருவே.– பிரம சொரூபமே; ஆக – ; உன்னு – உன் திருவுள்ளத்தில் நினைத்தருள்.

*கருத்துரை* : உடம்பு அழிவது. நாம் பிரம சொரூபம் ஆவதே அழியாமை ஆகும்.

46. பாருளோர் எல்லோரும் பார்த்துநிந்தை பண்ணும்இடம்
சோரும்மனத் தோடுஇருந்து சோர்வேனோ – சாரும்இடம்

இன்னதுஎனச் சுட்டறிவோடு எய்தில்அரிது ஆம்துரியம்
தன்னில்யான் சேர்வதுஎன்றோ சாற்று.

*பதவுரை* : பார் உளோர் – உலகில் வாழ்வோர்; எல்லோரும் – ; பார்த்து ; நிந்தை பண்ணும் – பழித்துப் பேசும் ; இடம் – இடத்தில்; சோரும்–தளரும்; மனத்தோடு இருந்து– ; சோர்வேனோ – உடல் தளர்வேனோ? சாரும் இடம் – செல்லும் இலட்சிய இடம்; இன்னது எனச் – ; சுட்டறிவோடு – குறித்து அறியும் அறிவோடு ; எய்தில் – சென்றால் ; அரிது ஆம் – அடைவதற்கு அரிதாகிய ; துரியம் தன்னில்–துரிய உணர்வு நிலையில்; யான் –; சேர்வது– பிரம நிலையை அடைவது; என்று – எந்த நாளில்?; சாற்று – சொல்வாயாக.

*கருத்துரை* : ஆசை காரணமாக, மக்கள் பழித்துப் பேச வாழேன். என் உணர்வு உயர்நிலை ஆகிய துரியத்தை அடைய வேண்டும்.

47. நாறும்உடல் யான்எனவும், நாடும்மனை என்னதுஎன்றும்
மாறுபட எண்ணி மயங்காதே – தேறஅரிய
அம்மை திருநெல்லை அம்போ ருகஅடியை
இம்மையிலே நாடி இரு,

*பதவுரை* : (என் மனமே) நாறும் – நாற்றம் எடுக்கும் ; உடல் – உடம்பை; யான் எனவும் – ஆத்மா என்றும் ; நாடும் – விரும்பும் ; மனை – வீடு; எனது – என்னுடையது என்றும் ; மாறுபட – உண்மைக்கு மாறாக ; எண்ணி – ; மயங்காதே – அறிவுக் குழப்பம் அடையாதே; தேற அறிய – இன்ன குணம், இன்ன வடிவம் என்று அறிய இயலாத பிரம சொரூபமாகிய; திரு நெல்லை – ; (திருநெல்லை நாமம் கொண்ட அம்பிகையின்) அம்போருகம் – தாமரை போன்ற; அடியை – ; இம்மையிலே – இந்த வாழ்வில்; நாடி – தியானித்துக் கொண்டு; இரு–;

*கருத்துரை* : அகங்காரம், மமகாரம் ஆகியவற்றை விட்டு, அம்மையை வணங்கு.

48. ஆறாறும் பொய்யாம்; அதில்பயனும் பொய்யாகும்;
ஆறாறும் பொய்யா அறிவதும்பொய் – ஆறாறு
கையானைத் தந்த கழனித் திருநெல்லை
மெய்யாம் அவள்சரணம் மேவு.

*பதவுரை* : (என் மனமே) ஆறாறும் – மும்பத்தாறு தத்துவங்களும்; பொய்யாம்– பொய்த்தோற்றம் ஆகும்; அதில் – அவற்றால்; (விளையும்) பயனும் – காரியமும்; பொய்யாம் –, மாயையே. ஆறாறும் – அத்தத்துவங்களையும் (அவற்றின் பயனையும்); பொய்யாக – பொய் என்று ; அறிவதும் – அறிபவனாகிய ஜீவாத்மாவும்; பொய் – பொய்யான தோற்றமே ஆகும்; ஆறு ஆறு – பன்னிரண்டு; கையானை – திருக்கைகளை உடைய முருகப் பெருமானை; தந்த – பெற்ற; கழனி – கழனிவாசல் தலத்து இறைவியாகிய;

திருநெல்லையவள் – திருநெல்லை அம்மையின் ; மெய்யாம் – உண்மையான ; சரணம் – திருவடியை ; மேவு – சார்ந்து வாழ்வாயாக ;

*கருத்துரை* : உலகம் மாயா காரியம். ஜீவாத்மா என்ற கருத்து, அவிச்சையினால் (அறியாமையால்) தோன்றியது. இவ் விரண்டும் நிலையற்றவை. நிலையான பிரமசொரூபம் ஆகிய அம்மையை வணங்கு.

49. அன்புசற்றும் இல்லாத ஆயிழையார் மாமாயைத்
துன்பம்உற்ற ஆழியிலே தோயாமல் – இன்பரசத்
தேன்ஆர் கழனித் திருநெல்லை அம்மைபதம்
நீநாளும் நெஞ்சே நினை.

*பதவுரை* : நெஞ்சே – எனது மனமே; நீ–; சற்றும் – சிறிதும்; அன்பு;–; இல்லாத–; ஆயிழையார் – பொது மகளிர்; (செய்யும்) துன்பம் உற்ற – துன்பம் ஆகிய; ஆழியில் – கடலில்; தோயாமல் – முழுகிவிடாமல்; இன்பம் – இன்பந் தரும்; ரசம்–சாறாகிய; தேன்; ஆர்.– நிறைந்த ; கழனி – கழனிவாசற்குடிப் பதியில் வீற்றிருக்கும்; திருநெல்லையம்மை; பதம் – திருவடிகளை; நாளும் – நாள்தோறும் ; நினை – தியானிப்பாயாக.

*கருத்துரை* : சிற்றின்பத்தை விரும்பாமல், அம்மையை வணங்கு.

50. ஆறாறும் நாடுமிடத்து அப்பாலுக்கு அப்பாலாய்,
ஆறாறும் ஓடி அறிவுஅரிதாய் – ஆறாறும்
காணற்கு இனன்ஆகும் காரணியைக் கல்நெஞ்சே
பேணற்கு உரித்தாப் பிடி.

*பதவுரை* : கல் – கல் போன்ற; நெஞ்சே – எனது மனமே; ஆறாறும் – 36 தத்துவங்களாலும்; நாடும் – உணரக் கூடிய; இடத்து – அறிவின் எல்லைக்கு; அப்பாலுக்கு அப்பாலாய் – மிகவும் எட்டாததாய்; ஆறாறும் – அத்தத்துவங்களின்; ஓடி – நீக்கத்தில்; அறிவு அரிதாய் – அறிய முடியாததாய்; ஆறாறும் – தத்துவங்களால்; காணற்கு – அறிவு பெறுதற்கும் அவற்றை அறிவதற்கும்; இனன் ஆகும் – துணையாகின்ற; காரணியை – காரணபூதமாக உள்ள (உண்மையில் தானே காண்கின்ற) அம்பிகையை; பேணற்கு – வழிபடுவதற்கு; உரித்துப் ஆ(க)ப் – உரிமை யுடையளாாக; பிடி – பற்றிக் கொள்.

*கருத்துரை* : பிரம சொரூபம் சடப்பொருளின் உதவியால் அறிவதற்குரியதல்ல. அச்சடப் பொருள்களையே ஆத்மாவாகிய பிரமமே அறிகின்றது; அவையும் பிரமமே என்று அறிகின்றது.

51. பிடியாய் அகநாட்டம் பேறுஆகும் இன்பம்
விடியா இருள்போய், விழிப்பு ஆம் – அடி,அந்தம்
இல்லா வெளியாய் இருந்த படிஇருக்க
நில்லாய்; அதுவே நிலை.

*பதவுரை*: (நெஞ்சே) அக நாட்டம் – உன் உள்ளே, உயிருணர்வின் உள்ளே, ஆழ்ந்து செல்லும் ஞானத் தேடுதலை (விசாரணையை); பிடியாய் – தொடங்கிச் செய்வாயாக. இன்பம் – பேரின்பம் ; பேறு ஆகும் – அதன் பயனாகக் கிடைக்கும். விடியா – நீங்காத; இருள் – அவிச்சையாகிய இருள்; போய் – நீங்க; விழிப்பு ஆம் – விழிப்பு உணர்வை (சாக்கிர நிலை) அடையலாம். அடி – தோற்றமும்; அந்தம் – முடிவும்; இல்லா; வெளியாய்– அகண்டாகாரமாய்; இருந்தபடி – மாறாமல்; இருக்க – பிரம சொரூபமாய் இருப்பதற்கு; நில்லாய் – தவம் இரு; அதுவே – அந்த இருப்பே; நிலை – உண்மை (ஸத்) ஆகும்.

*கருத்துரை* : அவிச்சை அகற்றிப் பிரமநிலை அடையத் தவம் செய்.

52. நிலையாமோ இல்லம் நிலையாமோ செல்வம்
நிலையாமோ மைந்தர்மனை நெஞ்சே – நிலையாமோ
ஆகம் கரணாதி; அத்தனையும் சொப்பனம்என்று
ஏக நினைவாய் இரு.

*பதவுரை* : நெஞ்சே – ; இல்லம் – வீடு முதலிய சொத்துகள்; நிலையாமோ– உனக்கே உரியவையாக இருக்குமா? செல்வம் – ; நிலையாமோ – இழக்கப்படாதிருக்குமா? ; மைந்தர் – மகன் முதலிய சுற்றமும் ; மனை – மனைவியின் துணையும்; நிலையாமோ?– ; ஆகம் – உடம்பும் ; கரண ஆதி – அதில் உள்ள கருவி கரணங்களும் ; நிலையாமோ? அத்தனையும் – ; சொப்பனம் என்று – ; ஏகம் – பிரமமாகிய அத்வைதப் பொருளே; நினைவாயிரு – ;

*கருத்து* : உலகம் நிலையில்லாதது. பிரமமே உண்மை. அதையே நினை.

53. இருக்குஆ திகள்தேர்ந்தும் இன்புஉருவாம் தேவி
திருப்பாதம் சேரும் திறமாப் – பெருக்குஆகச்
சொல்லின், எறிகல் துருவனிடம் போயிடினும்
அல்லல்அற மாட்டாது அறி.

*பதவுரை* : இருக்கு – 'ரிக்' வேதம்; ஆதிகள் – முதலிய நூல்களை; தேர்ந்தும்– கற்றுத் தெளிந்தவுடன்; (அத்தெளிவு) இன்பு – ஆனந்தமே; உருவாம் – வடிவான; தேவி– பிரம்ம சொரூபமான அம்மையின்; திருப்பாதம் – திருவடியை; சேரும் – ; திறம் ஆ (க) – நன்மையைத் தரும் என்று கருதி; பெருக்காக – நிறைந்த ஆர்வத்துடன்; சொல்லின் – பேசினால்; (அதில் உண்மை இல்லை; ஏன் என்றால்) எறிகல் – தரையிலிருந்து எறியப்பட்ட ஒரு கல்; துருவனிடம் – மிக உயரத்தில் உள்ள, துருவ நட்சத்திரம் வரை; போயிடினும் – சென்றாலும்; அல்லல் அறமாட்டாது – அங்கேயே நிலைத்து நின்று ஒளிபெற முடியாது. (கீழே விழும்) என்று – ; அறி – அறிக.

*கருத்து* : கலைஞானம் பிரமநிலை அடையப் பயன்படாது. தவத்தால் உண்மை ஞானம் பெற முயல வேண்டும்.

54. அறிவே திருஉருவாம் அம்மை சரணாப்
பிறியாது நின்றார் பெரியோர் – குறியாது
நின்றாய்என் நெஞ்சே நெடுநாள்யான் என்னதென்று
நன்றோ? சிவைவடிவை நாடு.

*பதவுரை* : நெஞ்சே – ; பெரியோர் – ; அறிவே – ; திரு உருவாம் – தனது வடிவமாகக் கொண்ட; அம்மை – திருநெல்லை அம்பிகையே; சரண் ஆ(க) புகலாக; பிரியாது – ; மறவாமல் வாழ்கின்றனர், (நீ) குறியாது – அதை எண்ணாமல்; யான், எனது என்று – நான் என்ற அகங்காரத்தோடும், எனது என்ற பற்றுக்களோடும்; நெடுநாள் பல்லாண்டுகளாக; நின்றாய் – வீணாகப் பொழுது போக்குகின்றாய்; நன்றோ – இது நன்மையா? (இதை விட்டு) சிவை – அம்பிகையின்; வடிவை – பிரம சொரூபத்தை; நாடு – நினைந்து, அடைவாயாக.

*கருத்துரை* : அகங்கார, மமகாரங்களை விட்டு அம்பிகையைச் சரண் அடை.

55. நாடிப் பொறிகள்ஐந்தில் நாள்தோறும் நாணாமல்
ஒடி எடுத்தபலன் ஒன்றுஒன்றோ – கேடுதரும்
உற்பத்தி, நாசமுடன் ஒகோகோ துக்கசுகம்
அற்பம்அல, எண்இறந்த வாம்.

*பதிவுரை* : ஐந்து –; பொறிகளில் – இந்திரியங்களின் வழியே; நாடி – புலன் இன்பத்தை அடைய விரும்பி; நாணாமல் – (அதை இழிந்தது என்று கருதித்) தயங்காமல்; நாள் தோறும் – ; ஒடி – விடயங்களின் மீது ஆசை கொண்டு; எடுத்த – பெற்ற; பலன்; ஒன்று, ஒன்றோ – சிலவோ? (அல்ல) பல. உற்பத்தி பிறப்பு; நாசம் – இறப்பு; உடன் – என்ற இவற்றுடன்; துக்கம் – ; சுகம் – ; (ஆகியவை) அற்பம் அல்ல – சிறிது அல்ல; எண் இறந்தவாம் – கணக்கற்றவையாகும்.

*கருத்துரை* : புலன் இன்பத்தை விரும்பினால், பிறவி பெருகும். இன்பதுன்பங்கள் விடமாட்டா.

56. ஆமே அவாஅறுத்தல், ஆமே அரந்தைஒழிவு
ஆமே இரண்டுவினை அற்றிடுதல் – ஆமேகாண்
வாசி, அகம்இறத்தல், வந்துவிடும் பேரின்பம்
சீசீ அகமுகமே செல்.

*பதவுரை* : நெஞ்சே; அவா – ஆசைகளை; அறுத்தல் – நீக்குதல்; ஆம் – கைகூடும்; அரந்தை – துன்பத்தை (விலக்கும்); ஒழிவு – நீக்கம்; ஆம் – சாத்தியமாகும்; இரண்டு வினை – நல்வினை, தீவினை என இரண்டாக உள்ள கர்மங்களின் பயனாகிய புண்ணியமும் பாவமும்; அற்றிடுதல் – அனுபவத்திற்கு வராமல் இருத்தல்; ஆம் – கூடும்; வாசி – மூச்சின் இயக்கம்; இறத்தல் – நின்று போய்ப் பூரண கும்பகம் கைகூடுவதும்; அகம் இறத்தல் – மூச்சுடன் சேர்ந்தே இயங்குவதாகிய மனம் செயலற்று இருத்தலும்;

ஆம் – கைகூடும்; பேரின்பம் – நீங்காத ஆனந்தம்; வந்து விடும் – ; (ஆதலால்) சீசீ – இழிவான மனமே; அகமுகமே – உள்முகமாகவே; செல் – சிந்தனை செய்வாயாக.

*கருத்துரை* : உள்முகச் சிந்தனை (ஞான விசாரணை) யால் நன்மைகள் பலவும் எய்தும்.

57. செல்லாய் இடர்நெஞ்சே தீநெறியில் நாள்தோறும்
செல்லின், குறைபோம் திறம்உண்டோ? – நல்லோர்கள்
தேடற்கு உரித்தான தென்கழனி அம்மைபதம்
கூடில்உனக்கு என்ன குறை?

*பதவுரை* : இடர் – துன்பத்தைத் தரும்; நெஞ்சே – ; செல்லாய் – உன் போக்கை நிறுத்து; (நீ) தீநெறியில் – தீய புலன் இச்சைப்படி; நாள்தோறும் – ; செல்லின் – சென்றால்; குறை – இப்பிறவியின் குற்றம்; போம் – நீங்கும்; திறம் – தன்மை; உண்டோ? – ; இல்லையே! (ஆகவே) நல்லோர்கள் – ; தேடற்கு – ஞான நெறியில் உள்முகமாக விசாரித்து அறிவதற்கு; உரித்தான – உரிய உயரிய உண்மைப் பொருளான; தென் கழனி – கழனிவாசலில் வீற்றிருக்கும்; அம்மை பதம் – திருநெல்லையம்மையின் திருவடிகளை ; கூடில் – சார்ந்து வணங்கினால்; உனக்கு – ; என்ன குறை – தாழ்வு என்ன? ஒன்றுமில்லை.

*கருத்துரை* : புலன்வழியில் வாழ்தலால் பிறவி நீங்காது. அம்பிகையின் திருவடியில் சரண்அடை.

திருநெல்லையம்மை வணக்கம் முற்றிற்று.

## பஞ்சாக்கர நாயகி வணக்கம்

58. கண்ட பொருள்அல்ல, காணாப் பொருள்அல்ல கண்டபொருள்
மண்டும் இருள்அல்ல, மாயும் ஒளிஅல்ல, மன்னும்ஒளி
பண்டுஎன் பதும்அல்ல இன்றுஎன்பது அல்ல, பராபரமாம்
அண்டம் அடங்க அடங்காப் பெருவெளி ஐயுளியே.

*பதவுரை* : ஐயுளி – திருவைந்தெழுத்தின் பொருளாக உள்ள பரசிவானந்தவல்லி; கண்ட பொருள் – ; அல்ல; காணாப் பொருள் – காணாத பொருளும்; அல்ல; கண்ட – உணர்ந்த; பொருள் – மெய்ப் பொருளாவாள். (அவள்) மண்டும்–நிறையும்; இருள்அல்ல; மாயும் – இருந்து, மறையும்; ஒளி அல்ல – ; சூரியன், சந்திரன் இவற்றின் ஒளி அல்ல; மன்னும் ஒளி – என்றும் உள்ள ஒளி ஆகும்; பண்டு என்பது – முன்னொரு காலத்தில் இருந்தது என்று சொல்லும் பொருள்; அல்ல; இன்று என்பது – இன்று தோன்றிய புதிய பொருளும்; அல்ல – ; பர, அபரம் ஆம் – காலத்தைக் கடந்த பொருளாக இருப்பினும், அதே சமயம் இன்றும் புதுமையாக, இன்றும் அறிய வேண்டிய பொருளாக உள்ளது; அண்டம் – ; அடங்க – தன்னுள் அடங்கி நிற்க; அடங்கா – தான் அளவில்லாததாய் நிற்கும்; பெருவெளி – வெரியவெளி; (ஆகும்)

*கருத்துரை* : அம்பிகையாகிய பரம்பொருள் சுட்டிக் கூறப்படுவது அன்று.

## கொப்புடையாள் வணக்கம்

59. பின்னா பின்னம் ஒன்றுஇலதாய்ப், பெரிதாம் சத்தா சத்து இலதாய், முன்னா நின்ற நிரவயமாய், முடியாது இருந்த சாவயமாய்; பன்ன ஏதும் இல்லாமல் பகரும் மநுடக் கொம்பாகும் அன்ன மாயை தனைஅகற்றாய் அம்மே, கொப்பை உடையாளே.

*பதவுரை* : அம்மே – அம்மையே; கொப்புடையாளே – ; பின்னஅபின்னம் – சிதைவு உடையது என்றோ; முழுமையுடையது என்றோ; ஒன்று இலதாய் – சிறிதும் சொல்ல இயலாத பொருளாகவும்; பெரிதாம் – போற்றிக் கூறப்படும்; சத்து – உண்மைப் பொருள் என்றோ; அசத்து – நிலையற்ற பொருள் என்றோ; இலதாய் – வரையறுத்துச் சொல்ல இயலாத பொருளாகவும்; முன்னா நின்ற – நினைக்கப்படும்; நிர் அவயமாய் – உறுப்புகள் இல்லாதது என்றோ; முடியாது இருந்த – முடிவற்ற; சா அவயமாய் – உறுப்புகளோடு கூடியது என்றோ; பன்ன – சொல்லிப் புலப்படுத்த; ஏதும் – எச் சொல்லும்; இல்லாமல்; (விளங்கிக் கொண்டே) பகரும் – வடிவங்களுள் ஒன்றாய் உள்ள; மநுடக் கொம்பு ஆகும் – ; மனிதப் பெண்ணாய்த் திருக்கோலம் கொண்ட; அன்ன– இந்த; மாயை தனை – மாயா லீலா விபூதியை; அகற்றாய் – நீக்குவாயாக;

*கருத்துரை* : நீ குணம், குறி – ஏது மில்லாத பிரமம். ஆயினும் சகுணப் பிரமமாகத் தோன்றும் இந்த மாயையை விலக்குவாயாக.

60. மூர்க்கர் இணக்கம் தவிர்த்திடுஎன முன்னோர் உரைத்த மாற்றமதைப் பார்க்கில் உலகத்து ஒருவர்இலை, பாவி மனமே மிகமூர்க்கன்; தீர்க்கும் உனது பதம்அ கன்றே தீன விடயத்து அழுந்துகின்றது! ஆர்க்கும் உயிரே, இதைஅகற்றாய், அம்மே கொப்பை உடையாளே.

*பதவுரை* : அம்மே, கொப்பை உடையாளே – ; ஆர்க்கும் உயிரே – ஜீவாத்மா ஒவ்வொன்றிலும் உள்ள ஆத்மாவே; முன்னோர் – ; மூர்க்கர் – அறிவில்லாதவர்களின்; இணக்கம் – நட்பை; தவிர்த்திடு – நீக்கு; என உரைத்த – என்று சொல்லிய; மாற்றம் அதை – அறிவுரையை; பார்க்கில் – சிந்தித்தால்; உலகத்து – இந்த உலகில் ; ஒருவர் இலை – வேறு ஒருவரும் அல்லர்; பாவி மனமே – பாவ எண்ணங்களை எண்ணும் மனமே; மிக – மிகவும்; மூர்க்கன் – அறியாமை உடையதாகும்; (அது) தீர்க்கும் – அறியாமையை நீக்கும்; உனது – ; பதம் – திருவடியிலிருந்து; அகன்று – எண்ணத்தை மாற்றி; தீன விடையத்து – கேடுதரும் புலன் விஷயங்களில்; அழுந்துகின்றது–மிகவும் ஈடுபடுகின்றது. இதை – ; அகற்றாய் – மாற்றியருள்வாயாக.

*கருத்துரை* : அம்மையே; என் அவிச்சையை நீக்கு.

61. ஆலோன் இறந்தும், உமைபாகத்து அண்ணல் இறந்தும், கமலம்உறை நால்ஆ னனத்தோன் முடிந்துஇறந்தும்; நார தாதி யோர்இறந்தும் காலா திகளும் ஒழிந்துஇறந்தும், ககனம் ஆதி அழிந்துஇறந்தும் ஆலோ கங்கள் இறந்துநின்றாய் அம்மே, கொப்பை உடையாளே.

*பதவுரை* : அம்மே, கொப்பை உடையாளே –; ஆலோன் – ஆல் இலையில் துயின்ற திருமால்; இறந்தும் – மறைந்தும்; உமை பாகத்து – உமா தேவியை ஒரு பாகத்தில் உடைய; அண்ணல் – பெரியோன்; இறந்தும் – மறைந்தும்; கமலம் உறை – வெண்டாமரையில் வீற்றிருக்கும்; நால் ஆனனத்தோன் – நான்கு முகங்களை உடையவனாகிய பிரமன்; முடிந்து இறந்தும் – மறைந்தும்; நாரத ஆதியோர் – நாரதர் முதலிய தெய்வ முனிவர்கள்; இறந்தும் – மறைந்தும்; கால ஆதிகளும் – காலம் முதலிய தத்துவங்களும் ; ஒழிந்து இறந்தும் – மறைந்தும்; ககனம் ஆதி – ஆகாயம் முதலிய ஐம்பூதங்கள்; அழிந்து இறந்தும் – மறைந்தும் ; (நீ)

கருத்துரை : அம்மா! நீயே அழிவற்றவள்.

62. ஓங்குதனி மருப்புஆனை ஒருபாகன் கைவசமாய் உழன்றது
அந்தோ தூங்குபனைக் கரசயிலம் தனைப்பாகன் எற்றாலோ
துன்பம் செய்தான் தாங்கும்இரு நிலத்தின்வினை
இரண்டுஎன்னும் வல்லியினால் தகைத்துப் பின்னும்
ஓங்கிவளர் இச்சைஎனும் தாம்பதனால் மலக்குகையில்
இறுக்கிக்கட்டி;

*பதவுரை* : ஓங்கு – உயரமான; தனி – தனிச் சிறப்புடைய; மருப்பு ஆனை தந்தங்களோடு கூடிய யானை; ஒரு பாகன் – பாகனது; கைவசமாய் – ஏவலுக்கு அடங்கி; உழன்றது–. துன்புற்றது; தூங்கு – தொங்கும்; பனைக் கரம் – பனை போன்ற துதிக்கையை உடைய; சயிலம் தன்னை – மலை போன்ற அந்த யானையை; பாகன்; எற்றாலோ – ஏதோ ஒரு ஆயுதத்தைக் கொண்டு; துன்பம் செய்தான்; (அது போல) தாங்கும் – உயிர்களைத் தாங்கும்; இரு நிலத்தின் – பெரிய நிலவுலகில்; இரண்டு வினை – நல்வினை, தீவினை என்ற இரு வகை வினைகள்; என்னும் – ஆகிய; வல்லியினால் கொடியினால்; தகைத்து – கட்டி; பின்னும் – அதன் மேலும்; ஓங்கி வளர் – பெருகி வளரும்; இச்சை எனும் – ஆசை ஆகிய; தாம்பு அதனால் – கயிற்றினால்; மலக்குகையில் – ஆணவமலம் ஆகிய இருட்டுக் குகைச் சிறையில்; இறுக்கிக் கட்டி – ;

*கருத்துரை* : ஜீவாத்மா இருவினை, இச்சை என்ற கயிறுகளால் கட்டி, மலம் என்ற சிறையில் தன்மைப்பட்டுள்ளது.

63. நல்லறிவு முதல்வீரம் எலாம்அடங்க நாரியராம் நாகம் கவ்வ
வல்லையினில் செலுத்தியபின் மகத்தான பெருந்தன்மை

மறக்கப் பொல்லாப் புல்லறிவரம் அங்குசத்தால் மத்தகத்தில்
அடித்துஅடித்துப் புன்மை செய்ய, அல்லல்உறும்; அக்கயம்தான்
யாது? என்னில் யான்ஆகும் அந்தோ அந்தோ.

*பதவுரை* : (ஒரு யானை) நல்லறிவு – நல்ல வழியில் வாழ்வதற்கான அறிவு; முதல்; வீரம் – ; எலாம் – ; அடங்க – குறையுமாறு; (அதனை) நாரியராம் – மகளிராகிய; நாகம் – பாம்பு; கவ்வ – தீண்ட; (அதனை மருந்தால் மாற்றி) வல்லையினி – வலிதாக; செலுத்திய பின் – செல்லச் செய்த போது; 'மகத்' ஆன பெருந்தன்மை – பிரமம் என்ற மிகப் பெரிய வெளியின் அகண்டாகாரத் தன்மையை; மறக்க – மறந்து போகும்படி; பொல்லா – தீயதான; புல்லறிவாம் – அற்ப அறிவாகிய; அங்குசத்தால் –; மத்தகத்தில் – ; அடித்து அடித்து – மீண்டும் மீண்டும் குத்தி; புன்மை செய்ய – சிறிய விஷயங்களை எண்ணும் கீழ்மைக் குணத்தை உண்டாக்க; (அதனால், நல்ல வழியில் செல்ல எண்ணியும், செல்ல முடியாமல்;) அல்லல் உறும் – துன்பம் அடையும்; அக்கயம் தான் – அந்த யானை; யாது என்னில் – எது என்றால்; யான் ஆகும் – ; அந்தோ, அந்தோ – ;

*கருத்துரை* : நான் நல்ல வழியில் வாழா வண்ணம் புலன் ஆசை, புல்லறிவு ஆகியவை தடை செய்கின்றன.

64. அப்பாகன் யார்என்னில், அஞ்ஞானம் என்பவனே, அவனை
வெல்ல, இப்பாரில் எவ்இடத்துச் சென்றாலும், உனைஅன்றி,
ஏதும் காணேன், ஒப்புஆரும் இல்லாளே பூரணியே, காரணியே,
ஓங்கும் மேன்மைக் கொப்பாளே உன்னிடத்தில் வந்தேன்என்
பகைநீங்கக் குறிக்க வேண்டும்.

*பதவுரை* : அப் பாகன் – (மேலே கூறிய) யானையைச் செலுத்தும் பாகன் ; யார் என்னில் – ; அஞ்ஞானம் – அவிச்சை – ; என்பவனே – ; அவனை – ; வெல்ல – வெல்லுவதற்காக; (ஒரு வழியைத் தேடி) இப்பாரில் – இவ்வுலகில்; எவ் இடத்துச் சென்றாலும் – எங்குத் தேடினாலும்; (அஞ்ஞானத்தை முற்றும் போக்கிடும் தெய்வம்) உனை அன்றி – உன்னைத் தவிர; ஏதும் – வேறு யாரையும்; காணேன் – ; ஒப்பு ஆரும் இல்லாளே – உனக்கு இணையாக ஒருவரும் இல்லாது, உயர்ந்து விளங்குபவளே; பூரணியே – நிறைவே; காரணியே – அனைத்தும் தோன்றி நிலவுவதற்குச் காரணமான மாயையை உண்டாக்குபவளே; ஓங்கும் – சிறப்புடைய; மேன்மை – மாண்பு கொண்ட; கொப்பாளே – கொப்புடை நாயகியே; உன்னிடத்தில் – ; வந்தேன் – அடைக்கலம் வந்தடைந்தேன்; என் – ; பகை – அவிச்சை ஆகிய எனது பகை; நீங்க – அகலும்படி; குறிக்க வேண்டும் – நீ திருவுள்ளம் கொள்ள வேண்டும்.

*கருத்துரை* : அவிச்சை நீங்குமாறு, பிரம ஞானம் தா.

65. தூசே தரிக்கில் ஒடியும்எனும்
சொல்லே புனையும் துடிஇடையார்;
ஆசைச் சுமையைச் சுமக்கஎனக்கு

அந்தக் கரணச் சும்மாடு
மாசுஇ லாளே நீதந்து
மாறாச் சுமையாச் சுமக்கவைத்தாய்
ஆசுஆம் இந்தச் சுமைஇறக்காய்
அம்மே கொப்பை உடையாளே.

*பதவுரை* : அம்மே, கொப்பை உடையாளே – ; தூசே – ஆடையை; தரிக்கில் அணிந்தால்; (அது பாரமாக) ஒடியும் – ஒடிந்து விடும் ; எனும் – என்ற; சொல் – உயர்வு நவிற்சியை; புனையும் – (கவிஞர்) புனைந்து கூறுவதற்குக் காரணமான; துடி இடையார் – உடுக்கை போன்ற இடையை உடைய பெண்களின் மீது; ஆசைச்சுமையை – கொள்ளும் ஆசையாகிய பாரத்தை; சுமக்க – ; எனக்கு; அந்தக்கரணம் – மனம் முதலிய நான்கு அகக் கருவிகளாகிய; சும்மாடு –; மாசு இலாளே – குற்றமற்றவளே; நீ தந்து – நீயே கொடுத்து; மாறாச் சுமையா – என்றும் இறக்கிவைக்காத பாரமாக; சுமக்கவைத்தாய் – ; ஆசு ஆம் – குற்றமான; இந்தச் சுமை – ; இறக்காய் – நீயே இறக்கி வைத்து விடு.

*கருத்துரை* : பெண்ணாசையை நீக்க உதவுவாய்.

66. உன்னைக் கதிஎன்று அடையாமல்
ஓகோ உலக வாஞ்சையினால்
என்னே, இற்றை நாள்வரைக்கும்
இழிவாம் தொழிற்கே இழுத்தல் கண்டாய்
பின்னை எனக்கோர் கதிஇல்லை
பேசாது இருந்தால் என்செய்வேன்?
அன்னே, இந்த மதிஅகற்றாய்
அம்மே, கொப்பை உடையாளே.

*பதவுரை* : அம்மே, கொப்பை உடையாளே – ; இந்த மதி – என்னுடைய புத்தி; உன்னை – ; கதி என்று – புகல் என்று சரணடையாமல்; உலக வாஞ்சையினால் – உலகப் பற்றினால் ; இன்றை நாள் வரைக்கும் (தொடக்கம் முதல் (இன்று வரை); இழிவாம் – இழிந்த தொழிற்கே – செயல்களையே செய்யும்படி; இழுத்தல் – என்னைத் தூண்டுவதை; கண்டாய் – பார்த்தருள்; பின்னை – (நீ கைவிட்டால்) பிறகு; எனக்கு ஓர் கதி இல்லை; பேசாதிருந்தால் – நீ அருள் செய்யாமலிருந்தால்; என் செய்வேன் – நான் செய்வது யாது; அன்னே – அம்மா; (இந்தப் புத்தியை) அகற்றாய் – மாற்றியருள்வாயாக.

*கருத்துரை* : என் புத்தி என்னை இழிந்த செயலுக்கே தூண்டுகின்றது. இதை மாற்றியருள்.

67. அப்பாய், நிலமாய், அனலாய், வளியாகிச்
செப்பும் ககனமாய்ச், சித்தாகிக் – கொப்புடையாள்
நின்றநிலை அறியா நெஞ்சகமே ஏன்பிறந்தாய்?
பொன்றும் உடம்பு உறவோ போ.

*பதவுரை* : கொப்புடையாள் – கொப்புடைய நாயகி ; அப்பு ஆய் – நீராயும்; நிலமாய் – தரையாயும்; அனலாய் – நெருப்பாயும் ; வளியாகி – காற்றாயும்; செப்பும் – கூறப்படும்; ககனமாய் – ஆகாயமாயும்; 'சித்' ஆகி – பேரறிவுப் பொருளாயும்; நின்ற – ; நிலை – உண்மையை; அறியா – அறியாத; நெஞ்சமே – ; ஏன் பிறந்தாய் – நீ ஏன் எனக்கு ஓர் தத்துவமாய்த் தோன்றினாய்?; பொன்றும் – மாளக் கூடிய ; உடம்பு – ; உறவோ – நிலை பெறுவதற்காகவா எண்ணமிடுகிறாய்? (அது பயனற்றது ஆதலின்) போ – நீ மாய்ந்து விடு.

*கருத்துரை* : மனமே ; நீ பிரமத்தை உணராய்.

## விஷ்ணு வணக்கம்

68. நடந்து விடுங்காண் இருவினைகள்
நாராய ணாய நமஎன்னில்,
நடந்து விடுங்காண் பிறப்புஇறப்பு
நாராய ணாய நமவென்னில்,
நடந்து விடுங்காண் பகைஉறவு
நாராய ணாய நமவென்னில்
நடந்து விடுங்காண் அகங்கரப்பேய்
நாராய ணாய நமவென்னில்.

*பதவுரை* : நாராயணாய நம – ; என்னில் – எனக் கணித்தால்; இருவினைகள் – நல்வினை, தீவினைகள்; நடந்துவிடும் – நீங்கும்; பிறப்பு இறப்பு – தோற்றமும் மரணமும் நீங்கும்; பகை, உறவு – பகையும் உறவும் ஆகிய இரட்டை நிலை நீங்கும் ; அகங்கரப் பேய் – நான் என்னும் அகங்காரம் நீங்கும்.

*கருத்துரை* : நாராயண மந்திர ஜெபம் பிறப்புக் காரணத்தையும் புதுவினை சேர்த்தலையும் ஒழிக்கும்.

## இருபத்தெண் சீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்

69. ஆகஉற்ற குருதியது வீசவே சருமமது
அடர்ந்தது திரண்டு வீழ,
அத்தியது முண்டுமுண் டாகவே நின்றதுவும்
அனவாதம் எனைஉ றுத்த,
நாசத் தசைகள்அவை மாகச் சுமையாகும்
நடுமச்சை ஊழல் நாறும்
நானாசன ஆயுஅவை ஊன்ஆன தைச்சற்று
நாடில், பழிப்புஆகுமே

ஓசைத் தொழில்ஆதி ஓரைந்து புள்ளுக்கும்
 உறைகின்ற கூட தாகும்
ஓர்ஒன் பதுவாசல், ஈரைந்து வாயுக்கள்,
 ஓடித் திரிந்து உலாவும்
கேசப் புழுக்கள்அவை கூடிப் பலஉண்டு,
 கிருமிகள் அனந்த கோடி,
கீழ்வாசல் ஓடிவரும், மேல்வாசல் ஏறியது
 கீழே விழுந்து நெளியும்
வாசிக் குரங்குஎன்பது ஓடிக் குதித்திடவும்
 வன்பான தருஅது ஆகும்
வானத்தின் நீலம்என, மேகத்தின் மின்னல்என,
 வாரியதின் மொக்குள் எனலாம்
மூசச் சதாநாறும் மாசுற்ற மலம்என்பது
 ஒழியா திருக்கும் இடமாம்
ஓங்குகக னத்தின்இடை பாங்கான இந்த்ரதனு
 உண்டாய், ஒடுங்கல் போலாம்,
ஆசைக் கழுகுஎன்பது ஓடிப் படிந்திடவும்
 அசைவற்ற கட்டை ஆகும்
ஆங்காரம் என்ற முனி, வாங்கா திருந்திடவும்
 ஆலயமது ஆகும், இந்த
நீசத் தொழில்உடைய பாவக் குடில்இதுவை
 நினையாது, அகற்ற நினைவாய்
நிர்ச்சுதந் தரமாகும், மெய்ச்சுதந் தரமாகும்
 நீள்மாயை உடைமாயனே.

*பதவுரை* : நிர்ச் சுதந்திரம் ஆகும் – சுதந்திரத்தை வேண்டாததாகவும்; மெய்ச் சுதந்திரம் ஆகும் – சுதந்திரம் உடையதாகவும் உள்ள; நீள்மாயை – பேராற்றலாகிய சக்தியினை உடையவனாதலோடு. உலகப் படைப்பாகிய மாயையும் உடையவனே; ஆசு உற்ற – குற்றமுடைய; குருதியது – இரத்தம் ; வீசவே – நிலத்தில் வடிந்ததும் ; சருமம் அது – தோல் ; திரண்டு – சுருண்டு ; வீழ – உதிர ; அத்தி அது – எலும்பு ; முண்டு முண்டாக – முரட்டுக் கழிகளைப் போல; நின்றதுவும் – நின்ற காட்சி ; அனவரதம் – நாள்தோறும்; எனை – ; உறுத்த – துன்புறுத்த; நாசம் – அழியக் கூடிய ; தசைகள் அவை –; மாசுச் சுமை ஆகும் – குற்றம் உடைய பாரம் ஆகும் ; நடு மச்சை – நடுவில் உள்ள மச்சை யானது ; ஊழல் – முடை நாற்றம்; நாறும் – ; நானா அசனம் – பலவிதமான உணவுகளும் ; ஆயு – வாழ்நாளும்; (கூடி) ஊன் ஆனதை – உடம்பாக அமைந்த தன்மையை; நாடின்– சிந்தித்தால்; பழிப்பாகும் – பழிக்கத்தக்க அருவருப்பாம்; ஓசைத் தொழில் ஆதி – ஓசை முதலிய தொழில்களை உடைய; ஓர் ஐந்து – ஐம்பூதங்கள் ஆகிய;

புள்ளுக்கும்–பறவைகளுக்கும்; உறைகின்ற – வாழ்கின்ற; கூடு அது ஆகும் – கூடு என்று சொல்லப்படும்; ஓர் ஒன்பது வாசல் – ஒன்பது துவாரங்களின் வழியாக; ஈர் ஐந்து – பத்து; வாயுக்கள் – ; ஓடித்திரிந்து – ; உலாவும் – இயங்கும் ; கேசம் – தலையில்; புழுக்கள் – ; கூடி – ; பல உண்டு – ; கிருமிகள்– கண்ணுக்குத் தெரியாத சிற்றுயிர்கள்; அனந்தகோடி – அளவற்றவை; கீழ்வாசல் – உடம்பின் கீழ்ப்புறத்தில் உள்ள துவாரத்தின் வழியாக; ஓடி வரும் – வெளிப்படும்; மேல்வாசல் – மேலே உள்ள ரத்த நாளங்களில்; ஏறி – ஏறியும்; அது – அந்தப் புழுக்களும் கிருமிகளும்; கீழே விழுந்து தெளியும் – ; வாசிக் குரங்கு என்பது – மூச்சு என்ற குரங்கானது; ஓடி – ; குதித்திடவும் – மூக்கின் வழியாக வெளிப்படவும்; வன்பான – வலிமையான; தரு அது ஆகும் – மரமாகும்; வானத்தின் – ஆகாயத்தின் நிறமாக உள்ள ; நீலம் என – நீல நிறம் போலவும் ; மேகத்தின் – ; மின்னல் என – மின்னலைப் போலவும்; வாரி அதன் – கடலில் உள்ள; மொக்குள் – குமிழி; எனலாம் – போலவும் உள்ளன; மூச – ஈ ஆனது மொய்க்க; சதா – ; நாறும் – ; மாசு உற்ற – குற்றம் உடைய ;– மலம் என்பது – மலமானது; ஒழியாது – நீங்காமல்; இருக்கும் இடமாம் –; ஓங்கு – உயர்ந்த; ககனத்தின் – ஆகாயத்தின்; இடை – மேலே; பாங்கான–அழகிய; இந்த்ரதனு – வானவில்; உண்டாய் – தோன்றி; ஒடுங்கல் – மறைவதை– ; போலாம் – போன்றதாம் ; ஆசைக்கழுகு – ஆசை என்ற கழுகானது; ஓடி – ; படிந்திடவும் – தன்மேலே அமரவும்; அசைவு அற்ற – அசையாமல் கிடக்கும்; கட்டை ஆகும் – பிணம் ஆகும்; ஆங்காரம் – கர்வம் என்ற; முனி – ; வாங்காது – வெளியேறாமல்; இருந்திடவும் – ; ஆலையம் அது ஆகும் – கோயில் ஆகும்; இந்த – ; நீசத்தொழில் – இழிவான செயல்களை; உடைய; பாவக் குடில் – பாவத்தால் வந்த குடிசை; இதுவை – ஆகிய உடம்பை; நினையாது – ஒரு பொருட்டாக நினைக்காமல்; அகற்ற – மறக்க; நினைவாய் – அருள் புரிவாயாக.

*கருத்துரை* : ஏழு தாதுக்களாலாகிய உடம்பு இழிவானது. அதைப் பொருட்படுத்தலாகாது.

**70.** விஞ்சுநா கப்பதுமம் வந்ததுஎன எப்பொழுதும்
வீயாத சித்தின் இடமாய்,
வெளியாகி, அல்லல்வடி வாகியே சந்ததமும்
வேறாகி நின்ற மனதே
வஞ்சத் துவம்பேசும், மிஞ்சத் தொடர்ந்தோடும்
வன்பாச கூவம் உறையும்
வாராதில் இச்சையுமுன் வந்ததில் அனிச்சையும்
வைத்துநிதம் மாயும் மாயும்
சஞ்சலமது ஆகவே பஞ்சப் புரங்கள்அவை
தம்மில்விளை யாடி நிற்கும்
தானேசெ காகிருதி ஆகியே நிற்கும்இது
தானே செகத்தை எல்லாம்
துஞ்சும் படிச்செய்யும் இங்குஆர் தடுப்புஅரிது
சொன்னமலை தூக்கி விடலாம்
சுழல்கின்ற உததியும் பருகலாம் வெங்கனல்

தொட்டே விழுங்கி விடலாம்
உஞ்சல்என உலைகின்ற நெஞ்சமதை ஒருவரும்
உழலாது அடக்க அரிதாம்
ஓகோ இதன்பெருமை ஒன்றோ அனந்தவிதம்
ஒருபிரம சாக ரத்தில்
நெஞ்சுஉருவ, அயன்ஆதி யானஇவ் அகிலம்எனும்
நேரான திரைகள் ஆக்கி,
நிமிடத்து அழித்துவிடும், இந்தவலு மனதைநான்
நிலையாது அறுக்க எளிதோ?
கொஞ்சத் துவமானது, அஞ்சுகொடி கட்டுவது,
கூடாது கூட்டு விக்கும்
குறைஅன்றி நிறையாது, மறைசென்ற வழிசென்று,
குறையாத தாகும் இந்த
நெஞ்சப் பகையும்,இதன் அஞ்சுத் தொழில்களையும்
நிலையாது அறுக்க நினைவாய்
நிர்ச்சுதந் தரம்ஆகும் மெய்ச்சுதந் தரமாகும்
நீள்மாயை உடைமாயனே.

*பதவுரை* : நிர்ச் சுதந்திரம் ஆகும்–; மெய்ச் சுதந்திரம் ஆகும் – ; நீள்மாயை உடைமாயனே – ; விஞ்ச நாகம் – விந்தியமலைச் சாரலில்; பதுமம் – தாமரை; வந்தது என – மலர்ந்தது போல; எப்பொழும் – ; வீயாத – நீங்காத; சித்தின் – சாலங்களுக்கு ; இடமாய் – ; வெளியாகி – புலப்பட்டு ; அல்லல் – துன்பமே ; வடிவாகி – ; சந்ததமும் – எப்பொழுதும்; வேறாகி நின்ற – மாறுதல் அடைந்து கொண்டிருக்கும்; மனது – என் மனம்; வஞ்சத்துவம் – வஞ்சனை (மறைத்தல்) என்ற பண்பை; பேசும் – சரியானது என்று எண்ணும்; மிஞ்ச – புத்தியினால் தெளிவடைந்து, மனத்தின் எண்ணத்தை மீறி நடந்தால்; தொடர்ந்து ஓடும் – அந்த வழியே எண்ணமிடும்; வன்பாசம் – வலிமையான பாசம் என்ற; கூவம் – கிணற்றில் ; உறையும் – வீழ்ந்துகிடக்கும்; வாராதில் – கிடைக்காத பொருளின் மேல் ; இச்சையும் – விருப்பமும் ; வந்ததில் – கையில் உள்ள பொருளின் மேல்; அனிச்சையும் – விருப்பமின்மையும்; வைத்து– கொண்டு; நிதம் – தினமும்; மாயும் – ஏங்கும்; பஞ்சப் புரங்கள்தம்மில் – ஐம்புலன் ஆசைகளிலும்; சஞ்சலம் அது ஆகவே – மாறி மாறி; விளையாடி நிற்கும் – விருப்பம் கொள்ளும்; தானே – ; செக ஆகிருதி ஆகியே நிற்கும் – எண்ணத்தால் உலகம் முழுதும் மிக வேகமாக ஓடிப் பரவும்; தானே – ; செகத்தை எல்லாம் – ; துஞ்சம்படி – உறங்குமாறு; செய்யும் ; (அதாவது), பகை மறந்து தன் நினைவில் கிடக்கும்; இங்கு – ; (அதன் போக்கை) ஆர் – யாராலும்; தடுப்பு அரிது – தடுக்க இயலாது; சொன்ன மலை – இமயமலையை; தூக்கி விடலாம் –; சுழல்கின்ற – அலை மோதும்; உததியும் – கடலினையும்; பருகலாம் – குடிக்கலாம்; வெம்கனல்–அரும் தீயை; தொட்டு – எடுத்து, விழுங்கி விடலாம் –; உஞ்சல் என– ஊஞ்சலைப் போல; உலைகின்ற – நிலையற்று ஆடும்; நெஞ்சம் அதை –; உழலாது – அவ்வண்ணம் ஓடாது; அடக்க – நிறுத்த ; ஒருவரும் யாராலும்; அரிது ஆம் – இயலாது ; இதன் – ; பெருமை –

தனி இயல்புகள்; ஒன்றோ – ; (அல்ல) அனந்த விதம் – எண்ணிக்கை அற்ற பற்பல வாகும்; ஒரு – ஏகமாகிய ; நெஞ்சு உருவ – மனம் வியக்கும்படி; பிரம சாகரத்தில் – பிரமம் என்னும் கடலில்; அயன் – பிரமனை; ஆதியான – படைப்பவனாகக் கொண்ட; இவ் அகிலம் எனும், இந்த அண்டம் என்னும்; நேரான – இசைவாயும், அடுக்கடுக்காயும் அமைந்த ; திரைகள் ஆக்கி – அலைகளை உண்டாக்கி; நிமிடத்து – ஒரு மணித்துளியில்; அழித்துவிடும் – ; இந்த – ; வலு – வலிமையை உடைய; மனதை – ; நான் – ; நிலையாது – முன்னும் கெட்டு ஒழியும்படி; அறுக்க – கழிப்பது; எளிதோ– எளிமையான செயலா? அல்ல ; (இது) கொஞ்சத்துவம் ஆனது –அணுவைப் போல நுட்பமானது; அஞ்சு கொடி – ஐம்புலன்கள் ஐந்து கோட்டைகளைக் கட்டிக் கொடி கட்டி வைத்திருப்பது; கூடாது – மெய்யாக வந்து சேராத ஒன்றை; கூட்டுவிக்கும் – கற்பனையால் தந்து, அனுபவிக்கச் செய்யும்; குறை அன்றி – எவ்வளவு அனுபவித்தாலும், மேலும் விருப்பம் கொள்ளுமே அன்றி; நிறையாது– திருப்தி அடையாதது; இந்த – ; நெஞ்சப் பகையும் – மனமாகிய விரோதியையும்; இதன் அஞ்சு தொழில்களையும் – ஐம்புலன் வழியே சென்று, இது கொள்ளும் பற்பல ஆசைகளையும்; நினையாது – அவ்வாறு அது நினைத்து, என்னை வருத்தாமல் ; அறுக்க – நீக்க ; நினைவாய் – திருவுளம் கொள்வாயாக.

*கருத்துரை* : பற்பல ஆசைகளில் உழலுவதும், நிலையற்று ஓடுவதும், என் துன்பங்களுக்குக் காரணமானதும் ஆன மனத்தை வெல்ல அருள்வாய்.

71. வாங்காது சீறுபணி தாங்காது, கிட்டினரை,
வாய்நின்ற தந்தம் அதனால்
வன்பாய் நலிந்தவுடன், முன்பாய் நடந்தகதி
மாண்டுவிட, மேலதாகி
தாங்காது வந்தவிடம் ஒங்காது இறங்குபடி
தக்கதுஒரு மந்திரங்கள்
தம்மால் அழிப்பதுஎன, என்னைஒரு பெண்அரவு
தாவிக் கடித்தது அந்தோ!
ஆம்காலம் நீங்கிவிடில் அழிகாலம் வருவதுஎன,
அந்தோ, அடர்ந்த விடமும்
அடியான அதுதொட்டு, முடிவரையும் மிகஏறி
அல்லலொடு போராடுதே
ஈங்கார் பொறுப்பர்இதை, என்னால் இறக்கஅரிது
இந்தவிடம் மாற்ற உரியான்
இவன்என்ன எண்ணி,உனை இன்றுஅடைந் தேன்இந்த
இடையூறு ரூபம்ஆகி,
நீங்காத காமன்உயிர் தாங்காது கொல்வன்அவன்
நிந்தையை அறுக்க நினைவாய்,
நினையாது இருந்துவிடில், எனைஆ தரிப்பதுஎவர்?
நீதான் ஒருத்தன்இன்றிப்

பாங்கான தந்தைஇலை, நீங்காத அன்னைஇலை,
பார்க்கில்,உறவு ஒன்றுகாணேன்
பட்சத்துடன் தேடி ரட்சிப்பது உன்னுடைய
பாரம்,இதில் ஐயம்இல்லை
தூங்காது தூங்குவது தூயோர் தமக்குஉளது
சொல்கின்ற காமனுடனே
தூங்கப், பிறர்செல்வம் வாங்கக் கொடிகட்டிச்
சுற்றிச் சுழன்ற என்னை
நீங்காத உன்அருகில் எந்நேரம், எப்பொழுதும்
நிலையாக வைக்க நினைவாய்
நிர்ச்சுதந் தரமாகும் மெய்ச்சுதந் தரமாகும்
நீள்மாயை உடைமாயனே.

*பதவுரை* : நிர்ச் சுதந்தரம் ஆகும் – ; மெய்ச் சுதந்தரம் ஆகும் – ; நீள் மாயை – ; உடைமாயனே – ; வாங்காது – பின்னடையாமல்; சீறு – சீறும் ; பணி – பாம்பு; கிட்டினரை – நெருங்கிவந்தோரை ; தாங்காது – காலம் தாழ்த்தாமல்; வாய் நின்ற – தனது வாயில் உள்ள; தந்தம் அதனால் – பல்லால்; வன்பாய் – வலிமையோடு ; நலிந்தவுடன் – கடித்தவுடன்; (கடிபட்டவர்களுக்கு) முன்பாய் – அதுவரை; நடந்த கதி – இருந்து வந்த பிறப்பு ; மாண்டு விட – முடிவடையும்படி ; மேலது ஆகி – அவர்களின் உடம்பினைக் குறிவைத்து; தாங்காது – விரைவாக; வந்த – பாய்ந்த; விடம் – நஞ்சு ; ஓங்காது – தலைக்கு ஏறாமல் ; இறங்குபடி – இறங்குமாறு; தக்கது ஒரு மந்திரங்கள் – தம்மால் தகுந்த மந்திர செபத்தினால்; அழிப்பது என – மாற்றுவது போல; என்னை – ; ஒரு பெண் அரவு – பெண் என்ற ஒரு பாம்பு; தாவிக் கடித்தது – ; அந்தோ – ; அடர்ந்த – உடம்பில் நெருங்கிய; விடமும் – நஞ்சும்; அடியான அது தொட்டு –கால் முதல் ; முடிவரையும் – உச்சிவரையும்; மிக – அதிகமாக; ஏறி – ; அல்லலொடு – துன்பத்தை உண்டாக்கி; போராடுதே – உயிர்வாதனை செய்கின்றது ; இதை – ; இங்கு – ; ஆர் பொறுப்பர் – யார் தாங்குவார்? (இதனை) என்னால்– ; இறக்க அரிது – இறக்க இயலாது ; இந்த –; விடம் – நஞ்சினை ; மாற்ற உரியான் – மாற்றக் கூடியவன் ; இவன் என – இவனே என்று ; எண்ணி – ; உனை –உன்னை; இன்று – ; அடைந்தேன் – சரணாக அடைந்தேன்; நீங்காத – என்னைவிட்டு அகலாத ; காமன்– மன்மதன் ; இந்த – ; இடையூறு – துன்பத்தின் ; ரூபம் ஆகி – வடிவாகி; உயிர் – என் உயிரை ; தாங்காது – தாமதம் செய்யாமல்; கொல்வன் – கொல்வான்; அவன் நிந்தையை – அவனால் நேர இருக்கும் பழியை; அறுக்க – தவிர்க்க; நினைவாய் – திருவுளம் பற்றுவாயாக; நினையாது இருந்து விடில் – ; எனை – ; ஆதரிப்பது; எவர் – யார் பொறுப்பு? நீதான் – ; ஒருத்தன் – எனக்கு ஒரே உறவு ; இன்றி – அல்லாமல்; பாங்கான–அன்புடைய; தந்தை இலை – தந்தை இல்லை. நீங்காத – என்னை விட்டுப் பிரியாத; அன்னை – தாய் ; இலை – இல்லை; பார்க்கில்–தேடினாலும்; உறவு ஒன்று – ஓர் உறவும் ; காணேன் – நான் பார்க்க இயலவில்லை. தேடி – என்னைத் தேடி வந்து; பட்சத்துடன் – அன்புடன்; ரட்சிப்பது – காப்பது ; உன்னுடைய – ; பாரம் – பொறுப்பு; இதில்– இந்த விடயத்தில்; ஐயம் இல்லை – சந்தேகம் இல்லை; தூங்காது

தூங்குவது – துரிய நிலை என்ற உணர்வு நிலையைப் பெறுவது; தூயோர் தமக்கு – உள்ளத் தூய்மை உடையவர்களுக்கு; உளது – வாய்ப்பதாகும். (ஆனால்) சொல்கின்ற – மேலே கொடியவன் என்று கூறப்பட்ட; காமனுடனே – மன்மதனால் காமம் உண்டாக்கப்பட்டு ;தூங்க – சிற்றின்பத்தில் என்னை மறந்து கிடக்கவும்; செல்வம் – செல்வத்தை; வாங்க – சேர்க்கவும் ; கொடி கட்டி – உறுதி எடுத்துக் கொண்டு ; சுற்றிச் சுழன்ற –பலவிடங்களிலும் அலைந்து திரிந்த; என்னை – ; நீங்காத – எங்கும் நிறைபொருள் ஆகிய ; உன் அருகில் – உன்னுடைய சார்பில்; எந்நேரம் – எந்த நேரத்திலும் ; எப்பொழுதும் – ; நிலையாக – ; வைக்க – வைத்திருக்க; நினைவாய் – திருவுளம் பற்றுவாயாக.

*கருத்துரை* : பெண்ணாசை, பொன்னாசைகளில் உழலும் என்னை, உனது சார்பில் வைப்பாயாக.

72. ஆர்ஒருவர் இணையற்ற சீருடைய வத்து,விடை
யாங்காரம் என்றஅலகை
அல்லில் பழுதையிடைப் பல்லில் கொடியவிட
அரவுவரு மாறுவந்து
சீருடைய வேதத்தை ஆராய அஞ்சும்,அது
தீரர்கள் நடப்பதுஎல்லாம்
சிறுமைஎன எண்ணியே தன்னுடைய தொழிலையே
திரமாக எண்ணி, நாடிப்,
பேர்பெரியர் என்னும்,நம் சீர்பெரியது என்னும்,நம்
பேராத வாழ்வதென்னும்;
பெண்ணில்ஒரு மலடிகைப் பிள்ளைஎனும் ரூபமாய்ப்
பிரித்துஅறியில் இல்லைஆகும்,
நேரான அகிலத்தில் உறைகின்ற சீலர்களை
நிலையாது அலைத்துவிட்டு,
நீநான் எனப்பேசி, ஆனாத துன்பமதில்
நிமிடத்து அழுத்துவிக்கும்,
ஆரோ இதற்குஇந்த அநியாய அதிகாரம்
அளித்திட்டு அகன்றது அந்தோ,
ஆஆ இதன் பெருமை அயன்ஆதி தேவர்களும்
அரியஅரிது ஆகும், ஆகும்,
பார்அதனில் நம்மைவிட ஆர்பெரியர் என்றுமிகு
பாழான நாட்டம்இட்டுப்,
பங்கே ருகன்பாலும், அம்கேச வன்பாலும்
பார்ஆதி கொல்வனிடமும்
சாராது, சார்ந்தவர்கள் தமைமயக்காது உறையும்;

தமியேன் உளம் காணியாய்த்
தன்அரசு நாடுபெற்று, என்னையும் மயக்கியது,
தாழ்விக்கும் நரகில், இந்த
நேராத ராவணனை நின்கருணை அம்புகொடு
நிலையாது அறுக்க நினைவாய்
நிர்ச்சுதந் தரமாகும் மெய்ச்சுதந் தரமாகும்
நீள்மாயை உடை மாயனே.

*பதவுரை* : (மனம்) ஆர் ஒருவர் – வேறு ஒருவரும்; இணை அற்ற – தனக்கு இணையாக முடியாத; சீர் உடைய – புகழ் கொண்ட; வத்து – ஒரு பொருளாகும். விடய– புலன் விடயங்களில் பொருந்தி; ஆங்காரம் – செருக்குக் கொள்ளும்; அலகை – பேய்; அல்லில் –இருளில்; பழுதையிடை – கயிற்றினிடமாக; பல்லில் – பல்லினிடத்தில்; கொடிய விடம் – கொடுமை பொருந்திய நஞ்சினை உடைய; அரவு – பாம்பு ; வருமாறு – தோன்றுவது போல; வுந்து – தோன்றி; சீர் உடைய – புகழ் வாய்ந்த; வேதத்தை – ; ஆராய – ; அஞ்சும் – தயங்கும் ; அது; தீரர்கள் – வைராக்கியசாலிகள்; நடப்பது எல்லாம்– வாழும் முறையை; சிறுமை என – அற்பமானதாக; எண்ணியே – நினைத்து; தன்னுடைய; தொழிலையே – செயல்களையே; திரமாக – நிலையாகச் செய்யக் கூடியவை என்று; எண்ணி – நினைத்து; நாடி – அவற்றைச் செய்யும் வழிகளை ஆராய்ந்து; பேர் – (நாம்) புகழால்; பெரியர்; – பெரியவர்; என்னும் – ; என்று தற்பெருமை கொள்ளும்; நம் – ; சீர் – சிறப்புக்கள்; பெரியது – பெரியவை ; என்னும் – என்று எண்ணிக் கொள்ளும்; நம் வாழ்வு – ; பேராதது – மாறாதது; என்னும் – என்று கருதிக் கொள்ளும். பெண்ணில் பெண்களில்; ஒரு மலடி – மலடியின் ; கை – கையில் உள்ள ; பிள்ளை எனும் ரூபமாய் – பிள்ளை என்ற சொல் உண்மை ஆகாதது போல; பிரித்து அறியில் – தத்துவங்களை வேறு பிரித்து எண்ணிப் பார்த்தால்; இல்லை ஆகும் – இல்லாத பொருள் என்பது தெளிவாகும்; (மனம் என்ற இந்த மாயை) நேரான – கண்ணுக்குத் தோன்றும்; அகிலத்தில் – உலகத்தில்; உறைகின்ற – வாழும்; சீவர்களை – சீவாத்மாக்களை; நிலையாது – ஓர் எண்ணத்தில் நிலையாக நிற்காதபடி; அலைத்துவிட்டு – கலையச் செய்தும்; நீ, நான் எனப் பேசி – நான் வேறு; நீ வேறு எனப் பிரித்துப் பேசியும்; நிமிடத்து – ஒரே மணித்துளியில்; ஆனாத – குறையாத; துன்பம் அதில் –; அழுத்துவிக்கும் – அழுந்தப்பண்ணும்; அந்தோ – ஐயோ; இதற்கு – இந்த மனத்திற்கு; இந்த – ; அநியாய – முறையில்லாத; அதிகாரம் அதை – அதிகார உரிமையை ; அளித்திட்டு – கொடுத்து; அகன்றது – நீங்கியவர்; ஆரோ – யாரோ, தெரியவில்லை; இதன் – ; பெருமை – ; அயன் அதி தேவர்களும் – பிரமன் முதலிய தேவர்களாலும்; அறிய அரிதாகும் ஆகும் – அறிந்து கொள்ள முடியாததாகும்; (இது) பார் உலகில் – மண் உலகில் ; நம்மை விட – ; யார் – ; பெரியர் – பெருமை உடையவர்? ஒருவரும் இல்லை என்று – ; மிகும் – மிக்க; பாழான ; நட்டமிட்டு – ஆட்டம் ஆடி ; பங்கேருகன் பாலும் – பிரமனிடமும்; அம் கேசவன்பாலும் – திருமாலினிடமும்; பார் ஆதி – மண்ணுலகம் முதலிய உலகங்களை; கொல்வனிடமும் – அழிப்பவன் ஆகிய உருத்திரனிடமும்; சாராது சார்ந்தவர்கள் தமை – அவர்கள் பிரமமே என்ற உணர்ச்சியுடன் வழிபடுவோரை; மயக்காது – ; உறையும் – இங்கு வாழும் ; (ஆனால்), தமியேன் – எனது ; உளம் – உயிரை; காணியாய் – உரிமையாகக் கொண்டு; தன் அரசும்

–தான் இருந்து அரசு செலத்தும் அதிகாரமும்; நாடும்–; தனது நாடாக வைத்துக்கொள்ளும் உரிமையும் ; பெற்று – ; மயக்கியது – என் அறிவை மயங்கச் செய்தது; (இதன் விளைவாக) நரகில் – ; தாழ்விக்கும் – விழுந்து துன்புறச் செய்யும்; நேராத– பொருந்தாத; இந்த – ; இராவணனை – ; நின் – உனது ; கருணை ; (என்னும்) அம்பு கொடு – அம்பினால்; நிலையாது – என்னிடம் நில்லாமல்; அறுக்க – அழிக்க; நினைவாய் – திருவுளம் பற்றுவாயாக;

*கருத்துரை* : என் மனத்தின் செயல்கள் கொடியவை. அதன் வசம் சிக்கினால், நான் நரகில் விழுவேன். ஆதலால், மனத்தை அழிப்பாயாக.

73. பண்டுஇல்லம் மேவிஅதில் உண்டான தொழில்கள்அவை
பண்பாய் நடத்தி வருகில்,
பரிவான தந்தை,அனை, மக்களொடு சுற்றம்,இவள்
பாரிஎன வந்த இந்த
வண்டக் கயவருடன் ஒன்றிடில், சந்ததமும்
வலுநரகில் வீழ்வம் என்று
மனதில்ஒரு மித்திதனை விட்டுநாம் மோட்சம்அடை
மார்க்கம்எது என்று தேடி,
அண்டரொடு முனிவரும் ஏத்தற்கு உரித்தான
அருளுருவ மானகுருவுக்கு
அன்புஎன்னும் மலர்எடுத்து அர்ச்சனை நிதம்செய்து,
அடியிணைகள் போற்றி நின்று,
தொண்டர்என, அவர்ஏவல் எப்போதும் முடிசூடித்
துகள்அற்ற சித்தனாகித்
தூய்தான குரவர்,அவர் சித்தபரி பாகமது
சோதித்து அறிந்துபின்பு
கொண்டாடி, இவருக்கு, வானவரும் அறிவுஅரிய
குறைவற்ற பொருளை ஈயக்,
குணமதுடன் வாங்கிஅதை இப்புருடர் ஆனவர்கள்
கோதுஇன்றி நின்றும், அதனைக்
கண்டார்கள், இந்தவிதம் நாயிற் கடையான
கசடன்இறு மாப்புஅடைந்து,
கண்கெட்ட பகடுஆகி, அனவரதம் மாதருடைக்
கால்இடைகள் தேடிநைந்தும்
வெண்டிங்கள் வதனம்உடை மின்னார்கள் சொன்னபடி
விலகாது செய்து நின்றும்,
வெகுகாலம் இந்தவிதம் வீணாள் கழிக்கின்ற
வினையேனை ஆள்வது என்றோ?

ஞெண்டுபோல் அலைவுற்ற மனம்இலா அடியர்அகம்
நீங்கா திருந்த அறிவே
நிர்ச்சுதந் தரமாகும் மெய்ச்சுதந் தரமாகும்
நீள்மாயை உடைமாயனே.

*பதவுரை* : நிர்ச் சுதந்தரம் ஆகும், மெய்ச் சுதந்தரம் ஆகும் நீள் மாயை உடை மாயனே – ; பண்டு – முன்னதாக ; இல்லம் மேவி – இல்லறத்தை மேற்கொண்டு; அதில் – ; உண்டான தொழில்கள் அவை – உரிய அறங்களையும், செயல்களையும்; பண்பாய் – நற்பண்போடு; நடத்தி வருகில் – நடத்தி வரும் பொழுது; பரிவான – அன்புடைய ; தந்தை ;(என்றும்) அனை – தாய் (என்றும்); மக்கள் – ; (என்றும்); சுற்றம் – ; (என்றும்) இவள் – ; பாரி – மனைவி ; என – என்றும்; வந்த – ; இந்த ; வண்டக் கயவருடன் – திண்மையான வஞ்சகருடன்; ஒன்றிடில் – சேர்ந்து வாழ்ந்தால்; சந்ததமும் – என்றும் ; வலு நரகில் – வன்மையாகப் பிடித்து அமிழ்த்தும் நரகத்தில் ; வீழ்வம் – விழுவோம் ; என்று – ; ஒரு மித்தை – பொய்த் தோற்றமாகிய இதனை; மனதில் – ; (எண்ணும் நினைவை) விட்டு – ; நாம் – ; மோட்சம் அடை – வீடுபேறு அடையும் ; மார்க்கம் – நெறி ; எது – ; என்று தேடி; அண்டரொடு – தேவர்களுடன் ; முனிவரரும் – முனிவர்களும்; ஏத்தற்கு உரித்தான – புகழ்வதற்குரிய ; அருள் உருவம் ஆன – அருளே வடிவமான; குருவுக்கு – ஞானாசிரியருக்கு; நிதம் – தினமும்; அன்பு என்னும் – ; மலர் எடுத்து – ; அர்ச்சனை செய்து – ; அடியிணைகள் – அவர் திருவடிகளை; போற்றி நின்று – ; தொண்டர் என – பணியாளரைப் போல; அவர் ஏவல் – அவர் இடும் கட்டளையை; எப்போதும் – ; முடி சூடி – தலைமேல் கொண்டு; (செய்து) ; துகள் அற்ற – குற்றமற்ற; சித்தன் ஆகி – சிந்தனை உடையவனாய்; (நிற்க) தூய்தான – ஆன்ம பரிசுத்தராகிய; குரவர் அவர் – ஞானாசிரியர் ; (இந்தச் சீடனின்) சித்த பரிபாகம் அது – உயிருணர்வின் பக்குவ நிலையை; சோதித்து அறிந்து – தேர்வுகளால் தெரிந்து ; பின்பு – ; கொண்டாடி – நன்மாணாக்கராக ஏற்று ; இவருக்கு – ; வானவரும் – தேவர்களும் ; அறிவு அரிய – அறிய வியலாத ; குறைவு அற்ற பொருளை – பிரம்ம உபதேசத்தை; ஈய – அளிக்க; இப்புருடர் ஆனவர்கள் – புருடன் என்ற தத்துவ மாத்திரமாய் நின்ற இச் சீடர்கள்; குணம் அதுடன் – நல்ல பண்புடன்; வாங்கி – பெற்று; கோது இன்றி – குற்றம் அற ; நின்றும் – அதன்படி வாழ்ந்தும்; அதனை – பிரம நிலையை; கண்டார்கள் – உணர்ந்தனர்; (ஆனால்) நாயின் – நாயை விட; கடையான – இழிவான; கசடன் – அறிவிலியாகிய நான்; இந்த விதம் – ; இறுமாப்பு அடைந்து – கருவம் கொண்டு; கண் கெட்ட – பார்வை அற்ற; பகடு ஆகி – மாடு போல; (வாழ்ந்து) மாதருடை – பெண்களுடைய; கால் இடைகள் தேடி – ; நைந்தும் – வருந்தியும்; வெண்திங்கள்– வெண்ணிலாச் சொரியும் சந்திரனைப் போன்ற; வதனம் உடை– முகம் உடைய; மின்னார்கள் – பெண்கள்; சொன்னபடி – ; விலகாது – தவறாமல்; செய்து நின்றும் – ; வெகுகாலம் – ; இந்த விதம் – ; வீணாள் கழிக்கின்ற –; வினையேனை – தீவினை வசத்தால் பிறந்த என்னை; ஆள்வது – உன் சார்பில் வைப்பது; என்றோ? – ; ஞெண்டு போல் – நண்டைப் போல; அலைவு உள்ள – இங்கும் அங்கும் அலைகின்ற; மனம் இலா – மனத்தை அழித்த – அடியர் – அன்பரின்; அகம் – உணர்வில்; நீங்காது இருந்த – அகலாது உள்ள; அறிவே – ஞான வடிவமே!

*கருத்துரை* : நல்லோர் துறவு மேற்கொண்டு ஞானாசிரியரை அடைந்து பிரம ஞானம் பெற்றனர். நான் ஆசை வயப்பட்டு உழல்கின்றேன். என்னை அடிமை கொள்வாயாக.

74. ஓர்இல்வரு பூதங்கள் ஓரைந்தும் மனம்ஆதி
ஓர்ஐந்து, சத்தஆதியாம்
ஓர்ஐந்து வாக்குஆதி ஓர்ஐந்து பிராணஆதி
ஓர்ஐந்து சருமம்ஆதி
நேரில்இரு மூன்றாகும், இவைமூன்று பத்துஒன்று
நிகழுபிர மாதி ஐந்து
நிகழும்இவை ஆறாறின் நிச்சயமது ஒன்றாகும்,
நிலையாத ஏழ்–ஐந்துமாம்;
பாரில்ஒரு சற்புருடர் சீர்இல்இவை ஏழ் – ஐந்தும்
"பாழ்" என அறிந்து, விட்டுப்
பதியான ஒருபொருளை மதியால் அறிந்துணர்வு
பற்றிநிலை நில்பரமமாம்
சீருடைய சின்மயனை மேருஎன அசையாத
சித்தாந்தம் ஆனபொருளைத்
தீரஆள் தமக்குஉரிய, மூடஆள் தமக்குஅரிய
சின்மயா னந்தவடிவை,
யாரும்அறி யாதபொரு ளாய்நின்ற பேரறிவை,
அண்டபகிர் அண்டநிறைவை,
அத்துவித மானவனை, எத்திசையும் நின்றவனை,
அணுவில் அணு வாகினானைப்
போராது இருந்தபரி பூரணம தாகின்ற
பேச்சற்ற மோனவடிவைப்,
பெற்றும்பெ றாமலே கத்தித் திரிந்துநான்
பெரிதான குருடனாகி,
யார்ஒருவர் இணைஇன்றி, நாரிவசம் எந்நேரம்
அல்லுபகல் நாட்டம்ஆகி,
அலைகின்ற வீணன்உனை என்றைக்கு அடைந்துநிலை
அதுவாவது எந்த நாளோ?
நேர்ஒருவர் இல்லாத பேரறிவு தனுவான
நின்மலா னந்தமயனே
நிர்ச்சுதந் தரம்ஆகும் மெய்ச்சுதந் தரம்ஆகும்
நீள்மாயை உடைமாயனே.

*பதவுரை* : நேர் ஒருவர் – உனக்கு இணையாக ஒருவரும்; இல்லாத – ; பேரறிவு ; தனுவான – உடம்பாக உடைய; நின்மலானந்தமயனே – சுத்த ஆனந்தப் பொருளே; நிர்ச் சுதந்தரம் ஆகும், மெய்ச்சுதந்தரம் ஆகும் நீள் மாயை உடை மாயனே – ; ஓர் இல் வரும் – 'மகத்' என்ற பிரபஞ்சம் ஆகிய மூலத்தில் உண்டாகிய; பூதங்கள் ஓர் ஐந்தும் – ஐம்பெரும் பூதங்களும்; மனம் ஆதி – மனம் முதலிய ஐந்தும் – மனம், புத்தி, சித்தம், அகங்காரம், குணம் என்பவையும்; சத்த ஆதியாம் ஓர் ஐந்தும் – சத்தம், ரூபம், ரசம், கந்தம், ஸ்பரிசம் என்ற ஐந்து தன்மாத்திரைகளும்; வாக்கு ஆதி ஓர் ஐந்தும் – வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்ற செயற் கருவிகள் ஐந்தும்; பிராணாதி ஓர் ஐந்தும் – பிராணமயகோசம், அன்னமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞான மய கோசம், ஆனந்த மய கோசம் என்ற ஐந்து உடம்புகளும்; சருமம் ஆதி நேரில் இருமூன்று ஆகும் – தோல் முதலிய தாதுக்கள் ஆறு ஆகும்; இவை மூன்றுபத்து ஒன்றும் – ஆக, இவை முப்பத்தொன்றும்; நிகழும் பிரமாதி ஐந்து – பிரமன், விஷ்ணு, உருத்திரன், மயேச்சுரன், சதாசிவன் என்ற ஐந்து தெய்வ நிலைகளும்; (இவற்றுடன்) நிகழும் இவை ஆறாறின் – இந்த முப்பத்தாறின் –; நிச்சயமது ஒன்றாகும் – நிச்சயம் என்ற தத்துவம் ஒன்றும் (என 37 எனலாம்) நிலையாத ஏழ் – ஐந்துமாம் – முப்பத்தைந்து எனலும் உண்டு; சீர் இல் – சிறந்தவை அல்லாத; இவை ஏழ் ஐந்தும் – இந்த முப்பத்தைந்தையும்; பாரில் – இந்த உலகில்; சற்புருடர் – நல்லோர்; பாழ் என – வீண் என்று; அறிந்து; விட்டு – ; பதியான – தலைவனாக உள்ள; ஒரு பொருளை – ஒப்பற்ற பிரமத்தை; தீர ஆள் தமக்கு – வைராக்கிய சாலிக்கு; உரிய – உரியதும்; மூட ஆள் தமக்கு – அறிவற்றவனுக்கு; அரிய – கிடைத்தற்கு அரியதுமாகிய; சின்மய ஆனந்த வடிவை – பேரறிவும், பேரானந்தமுமாக உள்ள வடிவம் உடைய பொருளை; யாரும் அறியாத பொருளாய் நின்ற – ; பேரறிவை – ; அண்ட பகிரண்ட நிறைவை – அண்டத்தின் உள்ளும் வெளியும் நீக்கமற நிறைந்திருப்பவனை; அத்துவிதம் ஆனவனை – ஏகமாய் உள்ளவனை; அணுவில் – அணுவைவிட; அணு ஆகினானை – சிறிதாயுள்ளவனை; பேராது – நீங்காமல்; இருந்த – ; பரிபூரணமது – முழு நிறைவுடையது; ஆகின்ற – ; பேச்சு அற்ற – சொல்லைக் கடந்த ; மோன வடிவை – மௌனநிலையை; நான் – ; பெற்றும் – பெற்றிருந்தும்; பெறாமலே – அதை உணராது; கத்தித் திரிந்து – வார்த்தைகளைப் பெருகப் பேசி; பெரிதான – மிகுதியான; குருடன் ஆகி – அறியாமை உடையவனாகி; யார் ஒருவர் – ஒருவரும்; இணை இன்றி – எனக்குச் சமமாகாத வகையில் ; எந்நேரம் – எந்த நாளும்; நாரி வசம் – பெண்ணிச்சையுடன்; அல்லு பகல் – இரவும் பகலும்; நாட்டமாகி – கருத்தாகி; அலைகின்ற ; வீணன் – வீணனாக உள்ளேன்; உனை – ; என்றைக்கு அடைந்து – எக்காலத்தில் அடைந்து; நிலை ஆவது – ஒரு நிலை பெறுவது ?

*கருத்துரை* : நல்லோர் தத்துவங்களைச் சாராமல், மெய்ப்பொருளாம் பிரமத்தைச் சார்ந்தனர். எங்கும் நிறைவாகிய பிரமம் என்னுள்ளும் இருக்கிறது. இதை உணராமல், ஆசை வயப்பட்டு அலைகின்றேன்.

**75.** ஆழம்ஒரு மட்டின்றி, நீளமதுஇ லக்குஇன்றி
அகலம் கணக்கு அற்றதாம்
அறிவுஎன்ற ஆனந்த வாரியினில் அனவரதம்
அயன்ஆதி முனிவோர்களும்

ஆழிஒரு சத்தவிதம் என்பனவும், அட்டகயம்
அவையோடும், ஆதிசேடன்,
அகிலாண்ட பிண்டங்கள், ஆகாய வீதிவரும்
ஆதபனும் வெண்டிங்களும்,
தாழ்வுஒன்றும் இல்லாத அட்டகுல வெற்பும்ஒரு
தடையற்ற ககனாதியும்,
தண்ணென்ற கங்கையது முதலான நதிகளும்
தாழ்வற்ற துருவ இறையும்
கீழான சரஅசர உயிர்கள்பல யாவையும்
கெம்பீர உததிதன்னில்
கிளர்கின்ற அலைகள்போல் தோன்றியே வரும்இவை;
கிளத்த ஒரு ஏதுஅற்று,
வாழ்கின்ற இவைஅலைகள் போலவே, தோன்றி,அதில்
மாயும்என வேதம்அறையில்,
வந்தஒரு அயன்ஆதி முந்தஆ னந்தகன
மயம்ஆவது ஐயம்இல்லை;
பாழான துன்பமதில் ஆழும் பிராந்திகொடு
பார்க்கில்இப் போதுசுகமாம்
பண்டையுண் டானசுகம் அதில்மீண்டு அடங்கும்அது
பார்க்கில்அப் போதுசுகமாம்;
கேழ்கிளரும் இந்தநெறி நில்லாது, தேகமது
கெடுகாலம் வந்தபோது,
கீழான புத்திகொடு துன்பமயம் ஆகியும்
கெட்டேன் எனப்பகர்ந்து
நீழல்என அறியாது, வீணாள் கழித்தஎனை
நின்அடியன் ஆக்க நினைவாய்
நிர்ச்சுதந் தரமாகும் மெய்ச்சுதந் தரமாகும்
நீள்மாயை உடைமாயனே.

*பதவுரை* : நிர்ச் சுதந்தரம் ஆகும், மெய்ச் சுதந்தரம் ஆகும் நீள்மாயை உடைமாயனே ; ஆழம் – ; ஒரு – ; மட்டின்றி – அளவின்றி; நீளம் அது – ; இலக்கு இன்றி – முடிவின்றி ; அகலம் – ; கணக்கற்றதாம் – ; அறிவு என்ற – ; ஆனந்த – ; வாரியினில் – கடலில் ; அனவரதம் – எப்பொழுதும்; அயன் ஆதி – பிரமன் முதலிய; முனிவோர்களும் – முனிவர்களும்; ஆழி – கடல்கள்; ஒரு சத்த விதம் – ஏழு; என்பனவும்; அட்டகயம் அவை யோடும் – எட்டுத்திசை யானைகளும் ; ஆதி சேடன் – ஆதி சேடனும்; அகில அண்ட, பிண்டங்கள் – அனைத்து உலகங்களும், அவற்றில் உள்ள உயிர்களும்; ஆகாய வீதி வரும் – வானில் உலாவரும்; ஆதபனும் – சூரியனும்; வெண் திங்களும் – சந்திரனும்; தாழ்வு ஒன்றும் இல்லாத – சிறிதும் குறையற்ற; அட்ட குல வெற்பும் – எட்டுத்

திசை மலைகளும்; ஒரு தடை அற்ற – சிறிதும் தடையற்ற ; ககன ஆதி – விண்வெளி முதலிய ஐம்பெரும் பூதங்களும்; தண்ணென்ற – குளிர்ந்தநீரை உடைய; கங்கையதும் – கங்கா நதி; முதலான நதிகளும் – ; தாழ்வு அற்ற – உயர்ந்ததான; துருவ இறையும் – துருவ நட்சத்திரமும்; கீழான – அற்பமான; சர, அசர உயிர்கள் பல யாவையும் – இயங்குவனவும், நிற்பனவும் ஆகிய உயிர்கள் பலவும்; கெம்பீர உத்தி தன்னில் – பெருமிதத்தோற்றம் கொண்ட கடலில்; கிளர்கின்ற – எழுகின்ற; அலைகள் போல் – ; தோன்றியே வரும் இவை – தோன்றி நிற்பவை ஆகும்; கிளத்த – சொல்வதற்கு; ஒரு ஏது அற்று – காரணம் ஒன்றும் இன்றி; வாழ்கின்ற இவை – வந்து நிற்கும் இலை யாவும் ; (கடலில்) அலைகள் போல்வே தோன்றி – ; அதில் – அந்தக் கடலிலேயே; மாயும் – மறையும்; என – என்று; வேதம் – ; அறையில் – கூறுகிறது; அப்படியானால்; வந்த ஒரு அயன் ஆதி – தோன்றிய பிரம்மா முதலியவர்கள்; முந்த – ஆதி முதல் உள்ள; ஆனந்த – ஆனந்தவடிவான; கனமயமாவது – வெளி என்பதில்; ஐயமில்லை – சந்தேகமில்லை; (இதனை எண்ணாது) பாழான – ; துன்பம் அதில் – துன்ப உணர்ச்சியில்; ஆழும் – மூழ்கும்; பிராந்தி கொடு – மயக்க உணர்வினால்; பார்க்கில் – பார்த்தால்; இப்போது சுகமாம் – இன்று சுகமாய் உள்ள விடயங்கள்; (சுகமாய் இல்லாமல்) பண்டை உண்டான – முன்பு தோன்றிய; சுகமதில் – சுகத்தில் ; மீணடு அடங்கும் – பழைய சுகமே சுகம், என்று கருதச் செய்யும். அது பார்க்கில் – அந்தப் பழைய சுகத்தை எண்ணிப் பார்த்தால்; அப்போது சுகமாம் – அந்தச் சில கணம் மட்டும் நீடித்த சுகமாகவே இருந்திருக்கும்; (ஆகவே உண்மையில் சுகமும் பொய்; துக்கமும் பொய்). கேழ் கிளரும் – புகழ் வாய்ந்த; இந்த நெறி – இந்த ஞானவிசார நெறியில்; நில்லாது – ; தேகம் அது – உடம்பு; கெடுகாலம் – நீங்கும் காலம் (மரண காலம்); வந்த போது – ; கீழான புத்தி கொடு – தாழ்வான அறிவுடன் இருந்து ; துன்ப மயம் ஆகியும் – துன்பக் கடலில் மூழ்கியும்; கெட்டேன் எனப் பகர்ந்தும் – நான் அழிந்து விட்டேன் என்று கூறியும்; நீழல் என அறியாது – துன்பவெயிலுக்கு ஒதுங்கும் நிழல் எது என்று அறியாமல்; வீணாள் – ; கழித்த ; என்னை – ; நின் – உனது ; அடியன் ஆக்க – சார்பில் வைப்பதற்கு; நினைவாய் – திருவுள்ளம் பற்றுவாயாக;

*கருத்துரை* : அகில சராசரங்களும் பிரமத்தில் தோன்றி மறைபவை. பிரம்மா முதலிய தெய்வங்கள் பிரமமயம். இதைக் கருதாமல் துன்பப்படுவது வீணானது. சுகமும் துக்கமும் பொய்யானவை.

**76.** நிர்ச்சீவன் ஆகிஅகல் தற்போத மாகிநவில்
நிர்நாம ரூபனாகி
நிர்லேபன் ஆகிநித நித்தியா னந்தம்எனும்
நிராதார மோன வடிவாய்
நிர்த்தோஷன் ஆகிஅணு ஆகியே எப்பொழுதும்
நிஷ்கிரியன் ஆகி நின்று,
நித்தியா பரோட்சமாய், முக்கால ரகிதமாய்,
நிர்அவயவம் ஆன பொருளாய்
நிர்க்குண விலாசமாய், எச்சருவ கதன்ஆகி,

நிருபத்திரன் ஆகி நின்று
நிர்இந்தியா காரமாய்ப், பொருந்தல்அரிது – ஆகிய
நிரானந்த ரூபம் ஆகி
நிஷ்காரணன் ஆகி, அப்பிரவிர்த்தன் ஆகியே,
நிர்விஷய சுத்தன் ஆகி,
நிறைவான விபுஆகி, அசலனாய் அகேயனாய்,
நிரஞ்சனா னந்த அறிவாய்
நிர்மலா னந்தனாய், எம்மாசு ரகிதனாய்,
நீள்மனது அகோசரமதாய்,
நெஞ்சமொடு தெவ்வற்ற தேகம்ஒரு ரூபமாய்
நிரதிசய மான பொருளாய்
நிர்ச்சங்க வடிவமாய் எச்சங்க நாஸ்தியாய்
நீங்காத சத்து வடிவாய்
நெடிதான திருசிய அதீதனாய், அனவரத
நிர்மூட வஸ்து வடிவாய்
நிர்ப்பூத ஆகமாய் எப்போதும் அழியாது
நிலையான பிரம வடிவாய்
நீ, நான் எனக்கூறு பேதமது இன்றியே
நிர்த்தொந்தமான பொருளாய்
நீர்த்தரங் கப்புணரி யாய்நின்ற ராமனே
நீசனையும் ஆள்வது என்றோ?
நிர்ச்சுதந் தரமாகும் மெய்ச்சுதந் தரமாகும்
நீள்மாயை உடைமாயனே.

*பதவுரை* : நிர்ச்சுதந்தரம் ஆகும், மெய்ச் சுதந்தரம் ஆகும் நீள் மாயை உடை மாயனே–; நிர்ச் சீவன் ஆகி – சீவான்மாவாகத் தோன்றினாலும், உண்மையில் சீவத்துவம் இல்லாதவனாய்; அகல் – அதினின்றும் விலகி நிற்கும்; தற்போதம் ஆகி – ஆத்ம ஞானமாகி; நவில் – சொல்லப்படுகின்ற; நிர் நாம, ரூபன் ஆகி– பெயரோ, உருவமோ இல்லாதவனாய்; நிர் லேபனாகி – பாவ, புண்ணியங்களால் பற்றப் படாதவனாய்; நித, நித்யானந்தம் எனும் – அளவுபட்ட இன்பம், அளவுபடாத இன்பம் என்ற இரண்டையும் கடந்த; நிர் ஆதார – எந்த அடிப்படையிலும் சார்ந்து நில்லாத; மோன வடிவாய் – முத்தி நிலையாய்; நிர்தோஷன் ஆகி – குற்றமற்றவனாகி; அணு ஆகி – சூட்சுமம் ஆகி; எப்பொழுதும் – ; நிஷ்கிரியன் ஆகி – செயலற்றவனாய்; நின்று – ; நித்திய அபரோக்ஷமாய் – ஞானிகளுக்கு என்றும் பிரத்தியக்ஷமாக உள்ளவனாய்; முக்கால ரகிதமாய் – காலம் கடந்தவனாய்; நிர் அவயவம் ஆன பொருளாய் – உறுப்புகள் அற்றவனாய்; நிர்க்குண விலாசமாய் – குணமற்றவனும், காரிய காரணத்தோடு பெருவிளக்கமாக நிற்பவனுமாய்; எச்சருவ கதனாகி – எல்லாச் சீவர்களிடத்தும் வியாபித்தவனாகி; நிர் உபத்திரன் ஆகி; நாணமற்றவனாய்; நின்று – ; நிர் இந்திய

ஆகாரமாய் – பொறி புலன்கள் அற்றவனாய்; பொருந்தல் அரிது ஆகிய – அடைவதற்கு அரிய; நிரானந்த ரூபமாகி – இன்ப, துன்பங்கள் அற்றவனாய்; நிஷ்காரணன் ஆகி – தனக்குக் காரணம் அற்றவனாய்; அப்பிரவிர்த்தன் ஆகி – எத் தொழிலும் இல்லாதவனாய்; நிர்விஷய சுத்தன் ஆகி – விடயங்கள் இல்லாத தூய்மையை உடையவனாய்; நிறைவான விபு ஆகி – எங்கும் அந்தர்யாமியாக நிறைந்தவனாய்; அசலனாய் – சலனம் அற்றவனாய்; அகேயனாய் – எதனாலும் பற்றப் படாதவனாய்; நிரஞ்சன ஆனந்த அறிவாய் – அறியாமை அற்றதும், ஆனந்தமே ஆனதும் ஆகிய ஞான வடிவாய்; நிர்மல ஆனந்தனாய் – மலதோஷம் இல்லாத இன்பவடிவமாய்; எம்மாசு ரகிதனாய் – எந்தக் குற்றமும் இல்லாதவனாய்; நீள் மனது அகோசரமதாய் – நீள நினைவார்க்கும், இன்னது என்று வரையறுக்கப்படாத பொருளாய்; நெஞ்சமொடு தெவ் அற்ற – மனத்தோடு பகை கொள்ளுதல் இல்லாத; தேகம் ஒரு ரூபமாய் – ஞானத்திருமேனி உடையவனாய்; நிரதிசயமான பொருளாய் – புதுமைகளற்ற பொருளாய்; நிர்ச் சங்க வடிவமாய் – பற்றற்றவனாய்; எச்சங்க நாஸ்தியாய் – எவ்வகைப் பற்றும் இல்லாதவனாய்; நீங்காத – ; சத்து வடிவாய்; நெடிதான – தொலைவில் நோக்குவதாகிய; திருசிய – பார்வையை; அதீதனாய் – கடந்தவனாய்; அனவரத நிர்மூட வஸ்து வடிவாய் – எப்போதும் மோகம் அற்ற பொருளாய்; நிர்ப்பூத ஆகமாய் – பூத சம்பந்தம் இல்லாத வடிவம் உடையதாய்; எப்போதும் அழியாது நிலையான – ; பிரம வடிவாய் – பிரமமே ஒரு பிறப்புக் கொண்டு தோன்றியவனாய்; நீ, நான் எனக் கூறும் – ; பேதம் அது இன்றியே – வேறுபாடு இல்லாமல்; நிர்த் தொந்தமான பொருளாய் – இரட்டைகள் இல்லாத பொருளாய்; நிர்த் தரங்கப் புணரியாய் – அலை ஒய்ந்த கடலாய் ; நின்ற – ; ராமனே – ; நீசனையும் – கீழானவன் ஆகிய என்னையும்; ஆள்வது – நீ அடிமை கொள்வது ; என்று – ;

77. அறிகின்ற விசுவாதி அபிமானி மூன்றுஎனவும்,
  ஆகம்ஒரு மூன்று ஆவதும்,
அவத்தை திரிவிதம் எனவும், ஆகநவ விதமான
  அவையோடு கூடு புருடன்
பிறியாத இடமுதற் பதவாச்சியார்த்தமாம்
  பேராத உயிரிலட்சியம்
பேதமது இன்றிய விராட் – ஆதி மூன்றுதநு,
  பெரிதாம் சிருட்டியாதி
அறைகின்ற மூன்றாம் அவத்தையொடு வைசுவா
  னரன்ஆதி யான மூன்றும்
அபிமானி யாம்என்பர், ஆகநவ விதமான
  அவையோடு கூடும் ஈசன்
அறைகின்றது இவைநடுப் பதவாச்சி யார்த்தமாம்;
  அழியாத பிரமம் லட்சியம்;

ஆதார பரன்ஆதி யானஒரு மூன்றனையும்
அபிமானி ஆகும் என்பர்
நிறைகின்ற சர்வசுகம் ஆதியாம் மூன்றனையும்
நிலையாம் அவத்தை என்பர்
நிலையாத அஸ்தி, பாதி, ப்ரியம் மூன்றும் இவை
நிகழும் சரீரம்என்பர்
குறைகின்ற இந்தவிதம் என்பதுடனும் கூடும்
ஒருபரப் பிரமம் என்பது
ஒன்றாய் இருந்த அசிபத வாச்சியார்த்தமாம்
ஒருசர்வ சாட்சி லட்சியம்
முறையால் எடுத்துஇங்ஙன் அறைமூன்று வாச்சியமும்
முழுமித்தை என்று தள்ளி,
மூன்றான லட்சியமும் ஒன்றுஎன அறிந்துபினும்
மோனத்தில் அவையும் விட்டு,
நிறைகின்ற பூரணமது ஆகின்ற ஆரியர்கள்
நிலையில்எனை வைக்க நினைவாய்
நிர்ச்சுதந் தரமாகும் மெய்ச்சுதந் தரமாகும்
நீள்மாயை உடைமாயனே.

*பதவுரை* : நிர்ச்சுதந்தரம் ஆகும் மெய்ச் சுதந்தரம் ஆகும் நீள்மாயை உடைமாயனே – ; அறிகின்ற – சுட்டி அறியப்படும்; விசுவம் ஆதி அபிமானி மூன்று–விசுவ, தைசத, பிராக்ஞ என்பவை. ஆகம் – உடம்பு தூலம், சூக்குமம், காரணம் என மூன்றும்; அவத்தை – உணர்வு நிலை; திரிவிதம் எனவும்– சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என மூன்றும்; ஆக – ; நவ விதமான அவையோடு – மொத்தம் ஒன்பது தத்துவங்களுடன்; கூடு –சேரும்; புருடன் – புருடதத்துவம்; பிறியாத இடம் – பிரமத்தினின்றும் வேறாக எண்ணப்படாத; முதல் பத வாச்சிய அர்த்தமாம் – (தத்வமசி மகா வாக்கியத்தில்) 'தத்' என்ற முதல் சொல்லின் பொருள் ஆகும் ; இலட்சியம் – அது குறிக்கும் பொருள்; பேராத உயிர் – நீங்காத சீவான்மா ஆகும்; பேதம் அது இன்றிய – வேறுபாடு இல்லாத; 'விராட்' ஆதி மூன்று தனு–விராட், விசுவ, சதுர்புஜ என்ற மூவுடம்பும்; பெரிதாம் – பெரிய அளவிலான; சிருட்டி ஆதி – படைத்தல், காத்தல், அழித்தல் என்ற; மூன்றாம் அவத்தை – மூன்று அவத்தைகளையும்; வைசுவானரன் ஆதியான மூன்றும்–விசுவாநரன், இரணிய கர்ப்பன், அவ்யாகிருதம் என்ற மூன்றும் அபிமானி ஆகும் என்பர் – ஆக நவ விதமான – ஒன்பது ; அவையோடு கூடும் ஈசன் – குணம், செயல்களோடு உள்ள ஈஸ்வரன்; அறைகின்றது இவை – மகாவாக்கியத்தில் உள்ள; நடுப்பத – த்வம் என்ற நடுச்சொல்லின்; வாக்கியார்த்தமாம் – பொருள் ஆகும்; லட்சியம் – அதன் இலட்சியப்

பொருள் ; அழியாத பிரமம் – ; ஆகும்; (இதற்கு) ஆதார பரன்–ஆதியான காரண உபாதி, காரிய உபாதி, காரணகாரியாதீத உபாதி என்பவை அபிமானி ஆகும் என்பர் – ; (இதற்கு) நிறைகின்ற – ; சர்வ சுகம் – ஆதியாம் – எல்லோர்க்கும் சுகவடிவாயுள்ளது, தனது உபாதியால் சுகவடிவாயுள்ளது, தானே சுக வடிவானது என்பவை நிலையாம் அவத்தை என்பர் – நிலைகள் என்று கூறுவர்; நிலையாத ; அஸ்தி – இருப்பு; பாஸ்தி – விளக்கம்; ப்ரியம் – இன்பம் ; மூன்றும் இவை – ஆகிய மூன்றும்; நிகழும் –; சரீரம் என்பர் – தேகம் என்று கூறுவர். குறைகின்ற – ; இந்த விதம் – இந்தப் பண்புகள் என்பதுடனும் – ; கூடும் – சேரும்; ஒரு பரப்பிரமம் என்பது – ; ஒன்றாய் இருந்த – ஒன்று எனப் பொருள்படும்; அசிபத – “அசி” என்ற சொல்லின்; வாக்கியார்த்தமாம் – பொருள் ஆகும்; லட்சியம் – இதன் லட்சியப்பொருள்; ஒரு சர்வசாட்சி – ; (ஆகும்). முறையால் – வரிசையாக; எடுத்து – ; இங்ஙன் – இவ்வாறு; அறை –சொல்லப்படும்; மூன்று வாச்சியமும் – மூன்று பொருள்களும் (அபர ஞானமாதலின்) முழு மித்தை – முற்றும் மாயை; என்று; தள்ளி – ; (மேலே சொல்லிய) மூன்றான லட்சியமும் – ; ஒன்று என – ஒன்றே என்று, அறிந்து – ; பின்னும் – ; மோனத்தில் – சமாதியில் ; அவையும் விட்டு – ; நிறைகின்ற – ; பூரணம் அது ஆகின்ற–முழுநிறைவாகின்ற; ஆரியர்கள்–சான்றோரின்; நிலையில்; எனை – என்னையும்; வைக்க – உயர்த்திட ; நினைவாய் – திருவுள்ளம் கொள்ளுவாய்.

*கருத்துரை* : மகா வாக்கியப் பொருளை அறிந்து, மௌனத்தில் அந்த அறிவும் விட்டு, முழு நிறைவாகும் நிலையை எனக்குத் தா.

## போற்றி சங்கீர்த்தனம்

78. அந்நாளில் இராக்கதரை அறுத்தாய் போற்றி
 அம்பரத்தில் உம்பர்களுக்கு அகமே போற்றி
இந்நாளில் எனது அகத்துள் திமிர ஈனம்
 ஈடுஅழிக்கக் கோடிஇனன் ஆனாய் போற்றி
பன்னாளும் அடியார்கள் பவத்தை நீக்கும்
 பரிசாகத் திகிரிக்குப் பணித்தாய் போற்றி
நன்னாளும் இடர்நாளும் அடியா ருக்கு
 நற்சுகமாம் என்று சங்கை நலிந்தாய் போற்றி.

*பதவுரை* : அந்நாளில் – முன்பு ; இராக்கதரை – ; அறுத்தாய் – அழித்தாய்; போற்றி – ; அம்பரத்தில் – வானுலகத்தில்; உம்பர்களுக்கு – தேவர்களுக்கு; அகமே – உள்ளுறையும் பிரமமே; போற்றி – ; இந்நாளில் – ; எனது அகத்துள் – என் மனத்தில் ; திமிர ஈனம் – அவிச்சை என்ற இருள் ஆகிய இழிவை; ஈடு – வலிமை ; அழிக்க – போக்க; கோடி – ; இனன் ஆனாய் – சூரியனாக ஆனாய் ; போற்றி – ; பன்னாளும் – ஊழி

தோறும்; அடியார்கள் – அடியார்களின் ; பவத்தை – பிறவிநோயை; நீக்கும் – ; பரிசாக தன்மை உடையதாக ; திகிரிக்கு – சுதர்சனம் என்ற திருவாழிக்கு ; பணித்தாய் – கட்டளை இட்டாய் ; போற்றி – ; நன்னாளும்–நற்பண்புவாய்ந்த ; அடியாருக்கு –; நாளும் – நாள் தோறும் ; இடர் – வரும் துன்பம்; நற்சுகமாம் – இன்பமாக மாறும்; என்று ; சங்கை – ; நலிந்தாய் – முழக்கினாய் ; போற்றி – ;

*கருத்துரை* : திருமால் தன் அடியார்களின் பிறப்பை நீக்குவான். இன்பம் அருள்வான்.

79. எவ்விடமும் அசுத்தம் என எண்ணி நீயும்
எழுவாரி தனில்,ஒன்றில் இருந்தாய் போற்றி;
அவ்விடமும் அசுத்தமதாம் பிரளயத்தில்
அழிவதினால் எனஎண்ணும் அய்யா போற்றி;
இவ்விடமும் இப்படியோ என்று விட்டே
இரவுபகல் அற்றஅகத்து இருப்பாய் போற்றி
அவ்விடமே எல்லாமாய் நின்ற தாலே
அதற்குஅசுத்தம் இலைஎன்றே அமர்ந்தாய் போற்றி.

*பதவுரை* : எவ் இடமும் – இடம் என்று சுட்டப் படுபவை எல்லாம் ; அசுத்தம் – ; என – ; எண்ணி – ; நீயும் – ; எழு வாரி தனில் ஒன்றில் – ஏழு பெருங்கடல்களுள் ஒன்றாகிய பாற்கடலில்; இருந்தாய் – ; போற்றி; அவ்விடமும் – அந்தப் பாற்கடலும்; அசுத்தமதாம் – அசுத்தமாகும்; பிரளயத்தில் – ஒடுக்கக் காலத்தில்; அழிவதனால் – ; என எண்ணும் – ; ஐயா – ; போற்றி ; இவ்விடமும் – இம் மண்ணுலகமும்; இப்படியோ – இத்தகையது தானோ – ; என்று – ; விட்டே – அதை நினைப்பதை விட்டு; இரவு பகல் அற்ற – இரவு பகல் என்ற கால வேறுபாட்டை உணராத; அகத்து – மனத்தில் ; இருப்பாய் போற்றி –; இவ்விடமே – இராப் பகல் அற்ற இடமே; எல்லாமாய் – எங்கும் வியாபகமாய்; நின்றதாலே – நின்ற காரணத்தால் ; அதற்கு – ; அசுத்தம் – ; இலை என்றே; அமர்ந்தாய் – இங்கு வீற்றிருந்தாய்; போற்றி – ;

*கருத்துரை* : சுட்டி அறியும் இடம் உண்மை அல்ல; குணம், குறி, காலம் – இவை கடந்த ஒன்றே உண்மை.

80. ஆனைகண்ட குருடரைப்போல் அறிந்த பேர்க்கும்
அப்பாலாம் ஏகனாம் அறிவே போற்றி
தானையது இரணியத்தால் தரித்தாய் போற்றி
சராசரமாம் உலகம்எலாம் தந்தாய் போற்றி
யானையதின் கோடுஅதுபோல் கொங்கை உள்ள
அணிமடவார் வாஞ்சைஎலாம் அறுப்பாய் போற்றி
ஊனைஅபி மானித்தே உழல்வேன் தன்னை
ஒப்பிலா உனக்கேஆள் ஆக்காய் போற்றி.

*பதவுரை* : ஆனை கண்ட – யானையைக் கையால் தடவிப் பார்த்த; குருடரைப் போல் – குருடர்கள் தாம் தாம் தடவிப் பார்த்த உறுப்பே யானை என்று எண்ணி, யானையை வெவ்வேறு வகையாக வருணித்தாற் போல; அறிந்த பேர்க்கும் – வேற்றுமையான பலவகை இறைவரை அறிந்தவர்களுக்கும்; ஏகனாம் – உண்மையில் ஒன்றாய் நின்றே பலவாய்த் தோற்றும் ; அறிவே – ஞான சொரூபனே; போற்றி–; இரணியத்தால் – பொன்னால் ஆன; தானையது – ஆடையை ; தரித்தாய் – ; போற்றி; சராசரமாம் – நிற்பனவும் இயங்குவனவுமாகிய உலகத்து உயிர்களை எல்லாம்; தந்தாய் – படைத்தவனே; போற்றி – ; யானையதின் – யானையினுடைய ; கோடு அது போல் – கொம்பைப் போன்ற; கொங்கை உள்ள – ; அணிமடவார் – அழகிய பெண்கள் மீது செல்லும் ; வாஞ்சை எலாம் – ஆசையை; அறுப்பாய் – ; போற்றி – ; ஊனை – தேகத்தில்; அபிமானித்தே – பற்று வைத்து உழல்வேன் தன்னை – அலைகின்ற என்னை; ஒப்பிலா – இணை ஒருவரும் இல்லாத; உனக்கே – ; ஆள் ஆக்காய் – அடிமையாகச் செய்ய வேண்டும்; போற்றி – ;

*கருத்துரை* : தெய்வம் ஒன்றே. அது பரப்பிரமம். உடற்பற்றை விட்டு, அதனைச் சார வேண்டும்.

81. காண்பானும் காண்பவையும் ஆனாய் போற்றி
கருத்தனும்ஒண் கருமமுமாய் நின்றாய் போற்றி
பூண்பானும் பூண்பனவும் ஆனாய் போற்றி
பொல்லாத மாயைஇலாய், புணர்ந்தாய் போற்றி
மாண்பான மாயவனாய் நின்றாய் போற்றி
மகாசூர குலாந்தகனாய் நின்றாய் போற்றி
வீண்பயிலும் விழற்கு இறைத்து வீணாள் தள்ளும்
விரகுஇலேற்கு அருள்புரியும் விறலாய் போற்றி

*பதவுரை*: (நீ) – ; காண்பானும் – பொருள்களைப் பார்ப்பவனாகவும்; காண்பவையும் – அந்தப் பொருள்களாகவும்; ஆனாய் – உள்ளாய்; கருத்தனும் – காரியத்தைச் செய்யும் கருத்தாவாகவும்; ஒண் கருமமுமாய் நின்றாய் – செய்யப்படும் காரியமாகவும் உள்ளாய்; பூண்பானும் – அணிகலன்களை அணிபவனாகவும்; பூண்பவையும், அந்த அணிகலன்களாகவும்; ஆனாய் – ; பொல்லாத – ; மாயை – ; இலாய் – இல்லாதவன்; (ஆயினும்) புணர்ந்தாய், சீவான்மாவாய் நிற்கும் போது, மாயையுடன் சேர்ந்துள்ளாய்; மாண்பான – சிறந்த; மாயவனாய் – திருமாலாய்; நின்றாய் – ; மகா சூர குல அந்தகனாய்– பெரு வீரராகிய அசுரர் குல நாசகனாய்; நின்றாய்; வீண்பயிலும் – வீணாகச் செய்வதும்; விழற்கு இறைத்து – தண்ணிரைப் புல்லுக்கு இறைப்பதைப் போன்றதுமாகிய செயலைச் செய்து; வீணாள் தள்ளும் – காலத்தை வீணே கழிக்கும்; விரகு இலேற்கு – உய்யும் உபாயம் கடைப் பிடியாத எனக்கு; அருள்புரியும் – ; விறலாய் – பெற்றிமை உடையாய் ; போற்றி – ;

*கருத்துரை* : எல்லாம் பிரமம். அது மாயை அற்றது. சீவன்மா மாயையை அகற்றத் துணை புரிவது பிரமம்.

82. ஓர்உருவாய் மூஉருவாய் உறைந்தாய் போற்றி
உம்பர்கள்தம் பெருமானே உயிரே போற்றி
கார்உருவாய் நிறைந்தபெருங் கடலே போற்றி
கண்முதலாம் பொறியாலும் காணாய் போற்றி
பார்உருவாம் தந்தியது பதைத்த போது
பதைப்பறவே அங்கராப் படுப்பாய் போற்றி
யாரும்அறி யாதஇடம் அகமாய் நின்ற
ஆதவனே அடியனைஆள் போற்றி போற்றி.

*பதவுரை* : ஓர் உருவாய் – பிரமம் என ஓர் உண்மைப் பொருளாக நின்றே; மூ உருவாய் – அரி, அரன், பிரமன் என்னும் மூன்று கடவுளராய்; உறைவாய் – வீற்றிருப்பவனே; உம்பர்கள் தம் – தேவர்களுக்கு; பெருமானே – தலைவனே; உயிரே – உயிர்க்கு உயிரே; கார் உருவாய் – கரிய வடிவத்துடன் கூடிய; நிறைந்த – நிறைவான; பெருங்கடலே – கடல்போல் எங்கும் பரவியவனே; (ஆனால், பிரம நிலையில்) கண் முதலாம் – கண் முதலிய; பொறியாலும் – ஐம் பொறிகளினாலும்; காணாய் – காணப்படாதவனே; பார் உருவாம் – பூவுலகத்தில் வாழ்ந்த; தந்தி அது – கஜேந்திரன் என்ற யானை முதலையால் பிடிக்கப்பட்டு; பதைத்தபோது அஞ்சிய பொழுது; பதைப்பு அறவே – அந்த அச்சம் நீங்க; அம் கரா – அந்த முதலையை; படுப்பாய் – கொன்றவனே; யாரும் அறியாத இடம் – ஒருவராலும் சுட்டி அறியப்படாத இடமாகிய; அகமாய் – அனைத்துக்கும் உள்ளுண்மையாய்; நின்ற – ; ஆதவனே – கோடி சூரியப் பிரகாசனே; அடியனை – ; ஆள் – அடிமை கொள்வாயாக; போற்றி போற்றி –;

*கருத்துரை* : தெய்வமாய் நின்று காட்சியளித்து வரம் தருபவனும் அவனே. சுட்டியறியப்படாத பிரமமும் அவனே.

83. மனம்ஆதி ஆறாலும் மதியா தான
மாயோனே, மகத்துக்கு மகத்தே போற்றி
இனன்ஆதி புழுவரையும் இருப்பாய் போற்றி
இருக்குஆதி வேதங்கட்கு எட்டாய் போற்றி
பினம் ஆகி அபினமுமாய்ப் பேராது ஆகிப்
பேச்சு இறந்து பிறங்குகின்ற பிரானே போற்றி
கனமான அரக்கர் எலாம் அடியற்று ஏகக்
கைப்பாணம் எடுத்துஎய்த காரே போற்றி.

*பதவுரை* : மனம் ஆதி ஆறாலும் – மனம், புத்தி, சித்தம், என்ற அகக் கரணங்கள், சத்துவம், இராசதம், தாமதம் என்ற குணங்கள் ஆகிய ஆறு தத்துவங்களினாலும்;

மதியாது ஆன – அறிய முடியாத; மாயோனே – ; மகத்துக்கும் – பெரியதற்கும் ; மகத்தே – பெரிய பொருளே; இனன் ஆதி – சூரியன் முதல் ; புழு வரையும் –; இருப்பாய் – ; இருக்கு ஆதி வேதங்கட்கு – இருக்கு முதலிய வேதங்களுக்கு; எட்டாய் – அடைய முடியாதவனே; பின்னமாகி – பிரிக்கப்படும் பொருளாகி; அபின்னமுமாய் – பிரிக்கப்படாத பொருளும் ஆகி; பேராது ஆகி – நீக்கமற்றதாய்; பேச்சு இறந்து – சொல்லால் விளக்க முடியாதவனாய்; பிறங்குகின்ற – விளங்குகின்ற; பிரானே – தலைவனே; கனமான – அதிகாரம் பெற்ற; அரக்கர் எலாம்; அடி அற்று ஏக – வேருடன் அழியுமாறு; கைப்பாணம் – அம்புகளை ; எடுத்து எய்த – தேர்ந்து எடுத்துச் செலுத்திய ; காரே – மேகம் போன்ற நிறத்தை உடையவனே; போற்றி – ;

*கருத்துரை* : இறைவன் உலகெங்கும் கலந்தவன். அதேநேரம் அவற்றைக் கடந்தவன்.

**84.** திரிபுடியாம் திமிரத்துக்கு அப்பால் நின்ற
திவாகரனே அடிபோற்றி திருக்கே போற்றி
அறிவுஅறியா மையும்ஆகி, அதீதமாகும்
அப்பனே, பூரணமாம் அருளே போற்றி
தறிஆகும் ஆகம்அதை அசைத்தல் செய்யும்
தயாபரனே அடிபோற்றி தமரே போற்றி
குறியாது குறித்துஅறியும் பெரியோர் உள்ளக்
கோகனதத்து உறைஅளியே குரவா போற்றி

*பதவுரை* : திரிபுடியாம் – அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு – என்பன மூன்றையும் வேறு பேறாக எண்ணும்; திமிரத்துக்கு – அறியாமைக்கு; அப்பால் நின்ற – தொடர்பு இல்லாமல் நின்ற; திவாகரனே – ஒளிமயமான சூரியனே; திருக்கே – அந்த அறியாமையாகவும் நின்றவனே; போற்றி – ; அறிவு அறியாமையும் ஆகி – ஞானமும் ஆகி, அஞ்ஞானமும் ஆகி; அந்தம் ஆகும் – ஞான வரம்பைக் கடந்தும் நின்ற; அப்பனே – தலைவனே; பூரணமாம் அருளே – முழுமையான அருள் குணமே; தறி ஆகும் – தறியில் ஊடும் பாவும் போல் இடைவிடாது இயங்கி; ஆகம் அதை – உடம்பை ; அசைத்தல் செய்யும் – அங்ஙனம் இயங்கச் செய்யும்; தயாபரனே– கருணை நிறைந்தவனே; அடி – உன் திருவடிகள்; போற்றி – ; தமரே – என் உறவே; போற்றி –; குறியாது – குறித்துச் சுட்டாமல் சுட்டி; (அதாவது) மெய்யுணர்வினால்; அறியும் – ; பெரியோர் – ஞானிகளின் ; உள்ளம் – சித்தமாகிய; கோகனதத்து – தாமரையில்; உறை – வாழும் ; அளியே – வண்டு போன்றவனே; குரவா – என் சிவகுருவே – ; போற்றி – ;

*கருத்துரை* : வேற்றுமைகளை அறியும் அறிவும் நீ; ஒன்றாய் அறியும் அறிவும் நீ. அறிவு கடந்தவனும் நீ.

85. அன்புஇலா மான்மருப்பை அடியோடு ஈர்த்தே
அன்பான வாரணத்தை அளிப்பாய் போற்றி
புன்புலால் வீசுகின்ற புரங்கள் தங்கும்
புல்லறிவுக்கு எட்டாத பொருளே போற்றி
முன்பனாய் மூன்றுலகும் புரக்கா நின்ற
முகுந்தனே அடிபோற்றி, முதல்வா போற்றி
தன்பெருமை அறிந்துணர்ந்தோர் சகாயா போற்றி
தனக்குஇணைஒன் றில்லாத தனுவே போற்றி.

*பதவுரை* : அன்பு இல்லா – ; மான் – மானினுடைய; மருப்பை – கொம்பை ; அடியோடு – மூலத்தோடு; ஈர்த்து – இழுத்துக் கொன்று; அன்பான– அன்புடைய; வாரணத்தை – கசேந்திரனுக்கு; அளிப்பாய் – கருணை செய்தாய். புன் புலால் – இழிவான மாமிசம்; வீசுகின்ற – நாற்றம் எடுக்கும்; புரங்கள் – உடம்புகளில்; தங்கும் – வாழும் சீவாத்மாக்களின்; புல்லறிவுக்கு – சிற்றறிவிற்கு; எட்டாத பொருளே – புரியாத பரம்பொருளே; முன்பனாய் – பேராற்றல் உடையவனாய்; மூன்று உலகும் – மேல், கீழ், நடு என்றும் மூன்று உலகங்களில் வாழும் உயிரினங்களையும்; புரக்கா நின்ற – காப்பாற்றும்; முகுந்தனே; அடிபோற்றி – ; முதல்வா –அவற்றுக்குத் தலைவா; போற்றி – ; தன் பெருமை – நான் 'ஆத்மன்' என்ற உண்மையை; அறிந்து –; ஞானாசிரியரின் வாயிலாக அறிந்து; உணர்ந்தோர் – தாமும் அனுபவித்து உணருபவர்களுக்கு; சகாயா – நண்பனே; தனக்கு இணை ஒன்றில்லாத – இணையற்ற; தனுவே – ஞான வடிவமே; போற்றி – ;

*கருத்துரை* : அன்புக்கு எளியாய் ; அறிவுக்கு எட்டாய். பிரமஞானம் உடையோர்க்கு உன் ஞானமேனி புலப்படும்.

86. அன்றுஆலில் துயின்றவனே அடிகள் போற்றி
ஐம்பத்தோர் அக்கரங்கட்கு அதீதா போற்றி
நன்றாலும் தீதாலும் நலியா தான
நாரணனே உனதுபத நளினம் போற்றி
பொன்றாத பிரமனுக்குத் தந்தை ஆகும்
புனிதனே, புயங்கஅணைத் துயின்றோய் போற்றி
என்தாதை அன்னையுடன் சுற்றம் ஆகும்
எழிலான சீதரனே, இறைவா போற்றி.

*பதிப்புரை* : அன்று – ஊழி இறுதிக் காலத்தில்; ஆலில் – வெள்ளத்தில் மிதந்த ஓர் ஆல் இலையில்; துயின்றவனே–யோகு துயில் அமர்ந்த பெருமானே; அடிகள் போற்றி – ; ஐம்பத்தோர் அக்கரங்கட்கு – ஐம்பத்தொரு வன்னங்களாலான மந்திரங்களுக்கு ; அதீதா – அப்பாற்பட்டும் நிற்பவனே; நன்றாலும் – புண்ணியங்களும் ; தீதாலும் பாவங்களும் ஆகிய இவற்றால்; நலியாதான; கட்டுப்படாத; நாரணனே – நாராயண வடிவமே; உனது – ; பத நளினம் – திருவடித் தாமரைகள்; போற்றி –; பொன்றாத –

அழியாத; பிரமனுக்கு – ; தந்தை ஆகும் –தந்தையான; புனிதனே – ; புயங்க அணை – பாம்புப் படுக்கையில் ; துயின்றோய் – ; போற்றி – ; என் தாதை – என் தந்தையும் ; அன்னையுடன்– தாயும் ; சுற்றம் ஆகும் – உறவினருமான; எழிலான – அழகிய ; சீதரனே – ; இறைவா – ; போற்றி – ;

*கருத்துரை* : பிரமமே தெய்வவடிவம் மேற்கொள்ளுகின்றது. ஆனால் வடிவம் எதுவும் நிலையற்றது. பிரமம் நிலையானது.

87. கல்லாத கயவர்உறு கூட்டம் தன்னில்
கலந்திருந்த எனைஅழைத்த கரமே போற்றி
செல்லாத மாயைஇருள் மயக்கம் எல்லாம்
சீரணிக்கத் திறம்தந்த திண்தோள் போற்றி
வெல்லாத பகைஉறவு வெல்வதற்கு
விழிக்கருணை தந்தஒரு விமலா போற்றி
மல்லாரும் அரவம்எனும் கொடியோன் தன்னை
மாயாது மாய்த்தஒரு வள்ளல் போற்றி.

*பதவுரை* : கல்லாத – நல்ல நூல்களை ஓதாத; கயவர் – கீழோர்; உறு – சேர்ந்த; கூட்டம் தன்னில்; கலந்திருந்த – விருப்பத்தோடு உறைந்த; என்னை – ; அழைத்த – மெய்ஞானம் பெற வா என்று தடுத்தாட் கொண்ட; கரமே – உன் செய்கை; போற்றி – ; செல்லாத – எளிதில் நீங்காத; மாயை இருள் – மாயை ஆகிய அறியாமையையும்; மயக்கம் எல்லாம் – அதனால் ஏற்பட்ட திரிபு உணர்வையும்; சீரணிக்க – பிரமத்தின் லீலை என்று உணர்ந்து கொண்டு, தெளிவு அடைய; திறம் – ஞானத்தை; தந்த – அளித்த; திண்தோள்– ஞான வீரம்; போற்றி; வெல்லாத – வெல்ல இயலாத; பகை, உறவு – ; (என்ற இரட்டைகளை) வெல்வதற்கு – வென்று, சமநிலை பெறுதற்கு; விழிக்கருணை – பார்வையால் கருணை அளித்த – ; விமலா போற்றி; மல் ஆரும் – போர் செய்வதில் வல்ல; அரவம் எனும் – பாம்பாகிய; ஒருவன் தன்னை– காளியன் உயிரினை; மாயாது மாய்த்த – ஒடுக்கிய; வள்ளல் – வள்ளலே ; போற்றி – ;

*கருத்துரை* : ஞான நெறியில் சென்று, உலக மாயையை ஒழிக்க வேண்டும்.

88. செல்வச் செருக்கில் திரமா அழுந்தினேன் ராம ராம – இது
தீர்வதுமில்லை திருவருள் அன்றியே ராம ராம
பல்வழிச் செல்லின் படர்மதம் ஏறுதே ராமராம – நின்
பார்வைஅது அன்றிப் பகர்மதம் தீராதே ராம ராம.

*பதவுரை* : செல்வச் செருக்கில் – செல்வம் உடையேன் என்ற கருவத்தில்; திர மா – நிலையாக; அழுந்தினேன் – ; நின் – உன்னுடைய; திருவருள் அன்றியே – திருவருள் துணை இல்லாமல்; இது – ; தீர்வதும் இல்லை – நீங்காது. பல்வழி – பல வகையான சமயங்களான வழியில்; செல்லின்– சென்றால்; படர் மதம் – பின் பற்றிய மதமே சிறந்தது; மற்றவை பொய் என்று கருதும் பொய்த்துணிவு; ஏறுதே – பெருகுகின்றது; படர் மதம் – இந்தக் கொள்கைக் கர்வம்; உன் பார்வையது – உனது கருணையான பார்வையினால் அன்றியே –அல்லாமல்; தீராது;

89. உற்பத்தி நாச உததி அழுந்தினேன் ராம ராம – இதற்கு
உன்அருள் அன்றி ஒருவருங் காணேனே ராம ராம
அற்பத்தில் ஆசை அனுதினம் கொண்டேனே ராம ராம – இந்த
ஆசைப் பிசாசுஉன் அருள்அன்றி நீங்காதே ராமராம.

*பதவுரை* : உற்பத்தி – பிறப்பு ; நாச – இறப்பு; உததி – (ஆகிய) கடலில்; அழுந்தினேன்– ஆழ்ந்து கிடக்கின்றேன்; இதற்கு – இதை நீந்திக் கரையேறுவதற்கு; உன் கருணை அன்றி ஒரு – உன் திருவருள் தவிர வேறு ஒரு;வங்கம் – கப்பலை ; காணேனே – ; அற்பத்தில் – சிறிய விஷயங்களில் ; அனு தினம் – நாள் தோறும்; ஆசை கொண்டேன் – ; இந்த ஆசைப்பிசாசு – இந்த ஆசை ஆகிய பேய் ; உன் அருள் அன்றி உன் திருவருள் இல்லாமல்; நீங்காதே – ;

90. அன்னை உதரத்து அவஸ்தைகள் பட்டேனே ராம ராம – இனி
ஆற்றேனே நீஅவை அற்று விடவேண்டும் ராம ராம
பின்ன, அபின்னப் பிணக்குஅதற்கு ஆளானேன் ராம ராம
இந்தப்
பின்னம் உனதுஅருள் அன்றிப் பிரியாதே ராம ராம.

*பதவுரை* : அன்னை – தாயின் –; உதரத்து – வயிற்றில்; அவஸ்தைகள் – பத்து மாதமும் துன்பங்கள் – ; பட்டேனே – ; இனி ஆற்றேனே – என்னால் பொறுக்கமுடியாது. நீ அவை – ; அற்று விடவேண்டும் – அகற்றி விட வேண்டும்; பின்ன – துண்டுபடுவது என்றும் ; அபின்ன – துண்டு ஆகாதது என்றும்; பிணக்கு – மாறுபட இருப்பதற்கு – ; ஆளானேன் –பழகி விட்டேன் – ; இந்த – ; பின்னம் – குணக்கேடு – ; உனது அருள் அன்றி – ; பிரியாதே – நீங்காதே.

91. நீங்காக் கருவிநிபங்கள் ஒழிந்தவே ராம ராம – உன்
நித்தியமான நிலையது அடைந்தால் ராம ராம
ஆங்காரம் என்னும் அலகை அகன்றதே ராம ராம – நின்
ஆதாரமான அவிழ்தம் அருந்தவே ராம ராம.

*பதவுரை* : உன் நித்தியமான – என்றும் ஒரு படித்தாயுள்ள உனது ; நிலை அது பிரம நிலையினை; அடைந்தால் – நான் அடைந்தால்; நீங்கா – எளிதில் நீங்காத; கருவி – தத்துவங்களாகிய; நிபங்கள் – காரணங்கள்; ஒழிந்தவே – நீங்கின; உன் –; ஆதாரமான – அடிப்படையான ; அவிழ்தம் – உணர்வு என்ற அமுதத்தை; அருந்தவே–; ஆங்காரம் – கருவம் என்னும் –; அலகை – பேய் ; அகன்றதே – ஒடிற்று;

92. உண்டே உறங்குவது உண்மையா நம்பினேன் ராம ராம – நின்
உண்மை அறிய, ஒழிந்து,அவை நீங்கின ராம ராம
பண்டே இருந்த பயங்கள் ஒழிந்தன ராம ராம – நின்
பாத மலரில் பணிந்த திடத்தினால் ராம ராம.

*பதவுரை* : உண்டே உறங்குவது – உண்பதும், உறங்குவதுமே; உண்மையா – வாழ்க்கை என்று; நம்பினேன் – ; நின் – உனது ; உண்மை – இருப்பினை ; அறிய – அறிந்த போது; அவை – ; நீங்கி ஒழிந்தன ; நின் – உனது ; பாத மலரில் – திருவடித் தாமரைகளில்; பணிந்த – வணங்கிச் சார்ந்தமையால் உண்டாகிய ; திடத்தினால் – மனவுறுதியினால்; பண்டே இருந்த – முன்பு தொடங்கி, இருந்து வந்த; பயங்கள்– பிறவி பற்றிய – அச்சமும் கவலையும்; ஒழிந்தன– அகன்றன.

*88 முதல் 92 வரை கருத்து :* இராமன் பிரம சொரூபம். அவரைப் பணிந்து திருவருள் பெற்றால் பிறவி நீங்கும்.

## சொரூப வணக்கம்

93. இந்த உலக சராசரங்கள்
யாவனிடமாத் தோன்றியிடும்?
இந்த உலக சராசரங்கள்
யாவன் இடமா விளங்கியிடும்?
இந்த உலக சராசரங்கள்
யாவன் இடமா அடங்கியிடும்?
அந்த மூல முதற்பொருளை
அகத்துளந் நாளும் வணங்கிடுவாம்.

*பதவுரை* : இந்த உலக – மண்ணுலகில் வாழும்; சராசரங்கள் – உயிரினங்கள்; யாவனிடமா – யாரை ஆதாரமாகக் கொண்டு; தோன்றியிடும் – உண்டாகும்?; இந்த உலக சராசரங்கள் – ; யாவன் இடமா – ; விளங்கியிடும்– சிறிது காலம் நிலை பெற்றிருக்கின்றன? இந்த உலக சராசரங்கள் – ; யாவனிடமா – ; அடங்கியிடும் – ஒடுங்கி நிற்கும்? ; அந்த – ; மூல முதற் பொருளை – பொருள் அனைத்திற்கும், செயலனைத்திற்கும் மூலமாகிய பிரமத்தை; எந்நாளும் – ; அகத்து – இதயமலரில் எழுந்தருளச் செய்து ; வணங்கிடுவாம் – வணங்குவோமாக.

*கருத்துரை* : யாவற்றுக்கும் மூலம் பிரமம். நாம் அவனது செயலின் விளைவு. அவனை வணங்குவதே, மூல வடிவை நாம் பெறுதற்குரிய வழி.

94. எண்ணற்கு அரிய சித்திரம்ஓர்
ஏக படத்தில் இருப்பதுபோல்
பண்ணற்கு அரிய சீவேச
உலகம் இருக்கும் பரவிசும்பே!
மண்ணைப் புனலை அனல்காலை
வானைத் தருசங் கற்பசத்தி
நண்ணிப் பொருந்து மூன்றுஅவத்தை
நாளும் விளக்கும் சின்மயமே.

*பதவுரை* : எண்ணற்கு அரிய – எண்ண முடியாத பொருள்களும் மதிக்க முடியாத அழகும் உடைய ; சித்திரம் – ; ஓர் ஏக படத்தில் – சிறந்து ஒரே திரைச் சீலையில்; இருப்பது போல் – ; பண்ணற்கு அரிய – படைத்தற்கு அரிய ; சீவ , ஈச உலகம் – ஜீவான்மாக்களும், அவர்கள் வணங்கும் கடவுள்களும் அடங்கிய உலகம்; இருக்கும் – தனக்கு ஆதாரமாகக் கொண்டு, சார்ந்திருக்கும்; பரவிசும்பே – மேலான ஆகாயமே; மண்ணை – ; புனலை – நீரை; அனல், காலை – தீயை, காற்றை; வானை – ஆகாயத்தை; தரு – படைக்கும்; சங்கற்ப சத்தி – நினைப்பு ஆகிய ஆற்றல்; நண்ணிப் பொருந்தும் – நெருங்கிப் பொருந்துகின்ற; மூன்று அவத்தை – இலயம், போகம், அதிகாரம் என்னும் மூன்று நிலைகளும்; நாளும் – எப்போதும் – விளக்கும் – ; சின்மயமே – ஞான நிறைவே.

*கருத்துரை* : உலகப் படைப்பிற்குச் சங்கற்பம் செய்பவன் நீ.

95. சுட்டும் அறிவு கெட்டசுக
சமன்ஆம் துரிய நிலைமேவி
இட்டத்து இருந்த தன்மயத்தோர்
இதயாம் பரத்தில் இலங்குஒளியே
எட்டுத் திசையோடு அண்டம் எலாம்
எங்கும் நிறைந்துஈது எல்லாமாய்த்
துட்டக் கருத்தில் தூரமதாய்த்
தூயோர்க்கு அணித்தாம் தொல்பொருளே.

*பதவுரை* : சுட்டும் அறிவு – இன்ன நிறம், இன்ன உரு, இத்துணை – என்பன முதலியவாகக் குறிப்பிட்டு அறியும் உலக அறிவு; கெட்ட – படராது இருக்கும்; சுக – உயிரின்பம் அளிக்கத் தக்கதும்; சமன் ஆம் – இன்ப, துன்பம், விருப்பு, வெறுப்பு – என்பன வாகிய இரண்டும் அற்று நடுவாக உள்ளதும் ஆகிய; துரியநிலை – துரியம் என்ற (விழிப்பும் உறக்கமும் அற்ற) நிலையை; மேவி – அடைந்து; இட்டத்து – தத்துவப் பிணைப்பு இன்றித் தற்சுதந்திரத்தோடு; இருந்த – வாழும்; தன்மயத்தோர் – ஆத்மானுபவம் பெற்றோரின்; இதய அம்பரத்தில் – சிதாகாயத்தில் (உயிர் அறிவு வெளியில்) இலங்கு திகழும்; ஒளியே – பெருவிளக்கமே; எட்டுத் திசையோடு – ; அண்டம் எலாம் – வானுலகம் எங்கும் – ; நிறைந்து – ; ஈது இவை ; எல்லாமாய் – ; துட்டக் கருத்தில் – பொருந்தாததாகிய உலகியல் அறிவுக்கு; தூரமதாய் – எட்டாத பொருளாய்; தூயோர்க்கு – உலகியலை அறியும் தத்துவங்களினின்று விடுபட்ட சுத்தநிலை அறிவாளருக்கு; அணித்து ஆம் – 'இதோ, இங்கே' என்னுமாறு, பக்கத்தில் உள்ளதான; தொல்பொருளே – சாவா, மூவாப் பழம் பொருளே.

*கருத்துரை* : உலக உணர்வு கடந்து, உயிருணர்வுக்கு விளங்குபவன் நீ.

96. இங்கே சரிக்கும் எறும்பு ஆதி
எண்அம்பு அகத்தோன் ஈறு இதயத்து

அங்கு அங்கு இருக்கும் தற்சாட்சி
ஆன அகண்ட பூரணமே
கங்கே இழுக்கும் வெறும்பிணம் போல்
கனகம், மனைவி கால்முளையோடு
இங்கே குடும்பச் சுமை இழுப்போர்
இதயத்து எட்டா இரும்பொருளே.



*பதவுரை* : இங்கே – மண்ணுலகில்; சரிக்கும் – வாழும்; எறும்பு ஆதி – எறும்பு முதல்; அம்பு அகத்தோன் ஈறு – பாற்கடலில் துயிலும் பரந்தாமன் வரை; எண் – எண்ணப்படுகின்ற; அங்கு அங்கு – உயிர்களிடமும் கடவுளரிடத்தும்; இருக்கும் – ; தற்சாட்சியான – சீவசாட்சியான; அகண்ட பூரணமே – அளவுகளால் வரையறைப்படுத்தப்படலாகாத முழு நிறைவே; கங்கு – கழுகு; இழுக்கும் – ; வெறும் பிணம் போல் – உயிர் அற்ற உடலைப் போல்; கனகம் – நிதி என்றும்; மனைவி – ; (என்றும்) ; இங்கே – மண்ணுலகில் ஏற்பட்ட; குடும்பச் சுமை – தொடர்புகளைத் தமது பற்றால், தமது பொறுப்பாக கருதி; இழுப்போர் – தாமே சுமந்து உழைப்போரின்; இதயத்து மனத்தில்; எட்டா – விளங்காத; இரும்பொருளே – பேரறிவுப் பொருளே.

*கருத்துரை* : அனைத்து உயிர்களின் உள்ளேயும் சாட்சியாக இருந்து, அவர்கட்கு நேர்வனவற்றையும், அவற்றின் விளைவையும் காண்பவன் நீ. அவ்வாறு இருக்க, உயிர்கள் அவற்றைத் தமது பொறுப்பு என்று எண்ணுவது, தம்மையும் உன்னையும் அறியாத அறியாமை அன்றோ?

97. எல்லாம் இறந்த நிலைஆகி
ஆனா எனது கற்பிதமாம்
எல்லாம் ஆகி, அல்லவும்ஆய்
இருந்து விளங்கும் இன்னமுதே
பொல்லேன் அவிவே கத்தாலே
புன்மை விடய மாக்கரைந்தே
அல்லற் படுவது உனக்குஅழகோ?
அத்தா, அண்ணா, ஆரணனே.

*பதவுரை* : அத்தா – எனக்குத் தந்தையே; அண்ணா – மூத்தோனே; ஆரணனே – வேதத்திற்கு உரிமை உடையவனே; எல்லாம் – உலகப் பொருள்கள், அவற்றை ஆளும் தத்துவங்கள் ஆகிய எல்லாவற்றையும்; இறந்த – கடந்த; நிலை ஆகி – நிலையில் இருக்கும் பரப்பிரமமாகி; எனது கற்பிதமாம் – நான் கற்பனை செய்து கொண்ட; எல்லாம் ஆகி – எல்லா உருவங்களுமாகி; அல்லவுமாய் – அவை அல்லாத பிறவுமாகி; இருந்து விளங்கும் – நிலவி, மாறாத உண்மைப் பொருளாய் விளங்கும் ; இன்னமுதே – உயிரில் இனிக்கும் அமுதம் போன்றவனே; பொல்லேன் – பொல்லாத எனது; அவிவேகத்தால் – பகுத்துணர்வின்மையால்; புன்மை விடயமா (க) – சிறிய விஷயங்களுக்காக; கரைந்து – கவலை கொண்டு; அல்லல் படுவது – நான் துன்புறுவது; (கண்டு இருத்தல்) உனக்கு அழகோ?

*கருத்துரை* : மிகப் பெரிய பொருள் நீ. உன்னைச் சேர்ந்த நான் அற்ப விடயங்களுக்காகத் துன்பப்படலாமா?

**98.** சித்தத்து இருக்கும் சிதாகாச
தேவ தேவே, தேவதையே
பத்துத் திசையும் பதினாலு
லோகம் எங்கும் படர்ஒளியே
முத்திக்கு அரசே ஆறாறின்
மூலப் பொருளே மோன சுகம்
புத்திக் கேதம் தவிர்த்துஅடிமை
பொருந்த அருள்வாய் புண்ணியனே.

*பதவுரை* : சித்தத்து இருக்கும் புண்ணியனே – என் சிந்தையே கோயிலாகக் கொண்ட; சிதாகாச – உயிரின் பேரறிவு வெளியில் விளங்குவதற்குரிய; தேவதேவே – மகாதேவா; தேவதையே – (அதே சமயம்) (எம் கண் காண) வழிபடு தெய்வமாகத் திகழ்பவனே; பத்துத் திசையும் – உலகம் முழுவதிலும்; பதினாலு – ; லோகம் – ; எங்கும் – ; படர் ஒளியே– பரவிக்கிடக்கும் அறிவு விளக்கமே; முத்திக்கு அரசே – பிரமுத்தி நாயகனே; ஆறாறின் – முப்பத்தாறு தத்துவங்களின் ; மூலப் பொருளே – ; அடிமை புத்திக் கேதம் – உனது அடிமையாகிய என் புத்தியின் குறைபாட்டை; தவிர்த்து – போக்கி; (நான்) மோன சுகம் – பேச்சற்ற துரிய நிலைச் சுகத்தை – ; பொருந்த – அடைய; அருள்வாய்–;

*கருத்துரை* : என் சிந்தையைத் திருத்திப் பிரம அனுபவத்தை அருள்க.

## அருள் இறை வணக்கம்

### (உகந்த தேசிக வணக்கம்)

**99.** சகம்தனிலே பிறந்துஇறந்து வீணாக
நாட்கழித்துத் தவித்த என்றன்
அகம்தனிலே இருக்கின்ற பரவடிவை
யான்அறிய அன்பு வைத்துச்
சுகம்தனிலே மேலான சுகம்பரம
சுகம்என்றே தோன்றக் காட்டும்
உகந்தகுரு தேசிகனை அனுதினமும்
இருதயத்தில் உட்கொள் வேனே;

*பதவுரை* : சுகம் தனிலே – மண்ணுலகில்; பிறந்து இறந்து – பலமுறை பிறந்தும் இறந்தும்; வீணாக – ; நாள் கழித்து – வாழ்நாளைப் போக்கி; பிறகு, துன்பங்களுக்கு இடையே, துணை இன்றித் தவித்த ; என்றன் – எனது ; அகம் தனிலே – ஜீவனின் உள்ளே; இருக்கின்ற – ; பர வடிவை – 'ஆத்மா' என்ற பிரமத்தை ; யான் அறிய – நான் உணரும்படி ; அன்பு வைத்து – என்னிடம் கருணை காட்டி; சுகம் தனிலே –

இன்பங்களுள்; மேலான – உயர்வான; சுகம் – இன்பம்; பரம சுகம் – பரமநிலை ஆகிய ஆத்மநிலையை உணரும் சுகமே ; என்று – ; தோன்றக் காட்டும் – தெளிவாக உணர்த்திய ; உகந்த குரு தேசிகனை – ; அனுதினமும் – எப்போதும்; இருதயத்தின்; உள் கொள்வேன் – உளமார நினைப்பேன்.

*கருத்துரை* : உலகியலில் துன்புற்ற எனக்கு ஆத்ம இன்பத்தை உணர்த்திய என் ஞான ஆசிரியரை (ஞானாசிரியர் உகந்தகுரு தேசிகர்) வணங்குகின்றேன்.

**100.** பொறியா றாலும் காண்புஅரிய
பொருளோய் உனது பதம்போற்றி
அறியா நின்றும் அறிந்திலனாய்
ஆனாய் உனது பதம்போற்றி
பிறியா, பிறியத்து அப்பாலாம்
பெரியோய் உனது பதம்போற்றி
சிறியேன் அறிவுக்கு அறிவான
சித்துஆம் உகந்தகுரு போற்றி.

*பதவுரை* : பொறி – அறி கருவிகள் ஆகிய; ஆறு ஆறாலும் – ஐம்பொறிகள், மனம் முதலிய முப்பத்தாறாலும்; காண்பு அரிய – உணர்வதற்கு அரிய; பொருளோய் – உண்மைப் பொருளே; உனது – ; பதம் – திருவடிகள்; போற்றி ; அறியா நின்றும் – தெய்வ உருவமாய் அறியப்பட்டும்; அறிந்திலனாய் – உண்மைச் சொரூபம் அறியப்படாதவனாய்; ஆனாய் – ; உனது – ; பதம் போற்றி – ; பிரியா – ஜீவான்மாவையும், படைக்கப்பட்ட பொருள்களை விட்டும் பிரியாதவனும்; பிரியத்து – அந்தகைய ஒட்டுறவுக்கு ; அப்பாலாம் – அப்பாற்பட்டவனும்; (ஆகிய) பெரியோய் – ; உனது பதம் போற்றி – ; சிறியேன் – அற்பனாகிய எனது ; அறிவுக்கு அறிவான – அறிவுக்கு அடிப்படையாகும் பேரறிவான; சித்தாம் – ஞானவடிவமாய் விளங்கும்; உகந்தகுரு – ; போற்றி.

*கருத்துரை* : ஞானவடிவமான குருபிரான் பிரம சொரூபம்.

**101.** பத்தி உடைய அமரர்பெறும்
பைம்பொன் னாட்டின் இனிதான
சித்தி விளங்கும் காவிரிசூழ்
செல்வப் பொருள்வை மாநகரோன்
புத்தி யிலனாம் எனதுபவம்
பொருள்அது ஆகக் கொண்டுஇனிய
அத்து விதத்தை அளித்தஉகந்
தானை வணங்கித் துதித்திடுவாம்.

*பதவுரை* : பத்தி உடைய – ; அமரர் – தேவர்கள் ; பெறும் – பெறுதற் குரியதான; பைம்பொன்னாட்டின் – பொன்னாட்டைக் காட்டிலும்; இனிது ஆன – இனிமை மிக்கதும்; சித்தி விளங்கும் – ஞான சித்திகள் எய்தப் பெறுவதும்; காவிரி சூழ் – காவிரியாற்றின்

கரையில் உள்ளதும்; (ஆகிய) பொருள்வை மாநகரோன் –அழகிய பொருள்வை என்னும் ஊரைச் சேர்ந்தவன்; புத்தியிலனாம் – அறிவற்ற; எனது – ; பவம் – தாழ்ந்த நிலையையும்; பொருளதாகப் – ஒரு பொருட்டாக ; கொண்டு – மதித்து ; இனிய – ; அத்துவிதத்தை –அத்வைத ஞானத்தை ; அளிந்த – தந்த ; உகந்தானை – உகந்த குரு தேசிகனை–; வணங்கித் துதித்திடுவாம் – ;

*கருத்துரை* : உகந்த குருதேசிகர் எனக்கு அத்துவித ஞானத்தை உபதேசித்தார்.

102. கடலே ஞான வேதாந்தக்
கரும்பே எனக்குஓர் அருந்துணையே
இடரே அருகு மாறுஎனக்குஓர்
இச்சை ஏதுஉன் கழல் அல்லாது?
உடலே பொருளே ஆவிஎனும்
உகந்தாய் மூன்றும் உனக்குஎன்றால்,
படரும் வினையை அகற்றிஅருள்
பரிபூர ணாஉன் பதம்போற்றி.

*பதவுரை* : கடலே – கருணைக் கடலே; ஞான வேதாந்த – வேதாந்த மெய்யுணர்வாகிய ; கரும்பு – கரும்பு போன்ற ஆனந்தத்தை அன்பருக்கு வழங்குபவனே; எனக்கு – ; ஓர் – ஒப்பற்ற; அருந்துணையே –அரிய துணைவனே; உகந்தாய் – உகந்த குரு தேசிகனே ; (எனது) உடல், பொருள், ஆவி எனும் மூன்றும் – ; உனக்கு – உனக்கே அர்ப்பணித்து விட்டமையால்; உன் கழல் அல்லால் – உனது திருவடிகளை அன்றி; இடரே அருகுமாறு – எனக்கு வரும் துன்பங்களை நீக்குவதற்கு ; எனக்கு ஓர் இச்சை ஏது?– வேறு யாரையும் நான் நாடேன்; பரிபூரணா – ; படரும் வினை – மேன் மேலும் கிளைத்து வளரும் என் வினைகளை; அகற்றி அருள்–நீக்கியருள்; பரிபூரணாஸ; உன் பதம் போற்றி.

*கருத்துரை* : உன்னைச் சரணடைந்தேன். என் துன்பம் நீக்கியருள்.

103. முத்துவெண் நகையார் சித்தம்அது ஒக்க
முயல்வதே கருமம்என்று எண்ணிப்
பித்தரின் மயங்கிப் பிறவியங் கடலில்
பீழையுற்று அழுந்துறு வேனைச்
சித்தம்அது ஒக்க, 'வா'–என அழைத்துத்
'திகழும்நீ பிரமம்' என்று அருளும்
உத்தம குருவே பொருள்வைமா நகர்வாழ்
உகந்ததே சிகசிகா மணியே.

*பதவுரை* : முத்து – முத்துப் போன்ற; வெண் நகையார் – வெண்மையான பல்வரிசையை உடைய பெண்களின்; சித்தம் அது ஒக்க – மனம் போல; முயல்வ தே – அவாது விருப்பத்தை நிறைவேற்றுவதே; கருமம் – வாழ்வின் குறிக்கோள் ; என்று – ; பித்தரின் – அறிவு திரிந்தவரைப் போல ; மயங்கி – எண்ணி – மாறுபாடாக எண்ணி;

(அதனால்) பிறவி அம் கடலில் – பிறப்பு என்ற அகன்ற கடலில்; பீழை உற்று – குற்றம் பொருந்தி ; அழுந்துறுவேனை – அழுந்தும் என்னை; சித்தம் அது ஒக்க – என் மேல் மனம் கொண்டு; 'வா' என அழைத்து – ; 'நீ திகழும் பிரமம்' – நீ உனக்குள் பிரமம் ஆவாய்' என்று; அருளும் – உபதேசித்தருளிய ; உத்தம குருவே – உயர்ந்த ஞானாசிரியனே; பொருள்வை மாநகர் வாழ் – ; உகந்த தேசிகன் – ; என்ற; தேசிக சிகாமணியே – ஞானசிரியத் தலைவனே!

*கருத்துரை* : உலகியலில் சென்ற என்னை அன்புடன் அழைத்துப் பிரம்மோபதேசம் செய்தாய்.

**104.** பிள்ளைகள் நூறு பிழைகள்செய் தாலும்
பெற்றவர் தனையரை முனிந்து
தள்ளுதல் உலகில் உண்டுகொல்? அடியேன்
தவற்றினைப் பொறுத்தருள் புரிவாய்
எள்உறும் இடமும் பிரிவிலாப் பொருளே
எந்தையே என்உயிர்த் துணையே
உள்ளுதற்கு அரிய பொருள்வைமா நகர்வாழ்
உகந்ததே சிகசிகா மணியே.

*பதவுரை* : எள் உறும் இடமும் – சிறிய எள் இருக்கும் இடத்திலும்; பிரிவு இலாப் பொருளே – நீங்காது நிலவும் பிரமமே; எந்தையே – என் தந்தையே; என் உயிர்த்துணையே – ; உள்ளுதற்கு – எண்ணுதற்கு ; அரிய – ; (சிறப்பினை உடைய) பொருள் வை மா நகர்வாழ் – ; உகந்த தேசிக சிகாமணியே – ; பிள்ளைகள் – தம் மக்கள்; நூறு பிழை செய்தாலும் – பல பிழைகள் ; செய்தாலும் – ; பெற்றவர் ; தனையரை – மக்களை; முனிந்து – சினந்து; தள்ளுதல் – ; உலகில் – ; உண்டு கொல் ? – உண்டா? இல்லை. (ஆதலால்) அடியேன் – உன் அடிமையாகிய எனது ; தவற்றினை – ; பொறுத்து அருள் – புரிவாய் ;

*கருத்துரை* : என் பிழைகளை மன்னித்து நன்னெறி காட்டுக.

**105.** ஏமநல் கிரியை வலம்செயும் கதிரோன்
எழுவதன் முன்னமே எழுந்து
சேமநீர் படிந்து செபித்துஉனைப் பரவும்
செனனமே எனக்குநீ தருவாய்
காமனை எரித்துக் காலனை உதைத்துக்
கஞ்சன்நற் சிரம்நகத்து அரிந்த
ஓம்எனும் பொருளே, பொருள்வைமா நகர்வாழ்
உகந்ததே சிகசிகா மணியே.

*பதவுரை* : ஏமநல் கிரியை – இமய மலையை; வலம் செய்யும் – வலமாக வரும் ; கதிரோன் – சூரியன் ; எழுவதன் – தோன்றுவதற்கு; முன்னமே – ; எழுந்து – துயில்

உணர்ந்து – ; சேமநீர் – நல்ல நீரில்; படிந்து – நீராடி; செபித்து – உன் திருப் பெயரை உருவேற்றி; உனை – ; பரவும் – வணங்கும் ; செனைமே – நல்லதோர்; பிறப்பை ; எனக்கு நீ தருவாய் – ; காமனை – மன்மதனை ; எரித்து – நெற்றிக் கண்ணால் எரித்து ; காலனை– எமனை ; உதைத்து – ; கஞ்சன் – தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனது ; நற்சிரம் – ஐந்தாவது தலையை ; நகத்து – நகத்தால் – ; அரிந்த – கிள்ளிய; ஓம் எனும் பொருளே; பிரணவப் பொருளே; பொருள்வை மா நகர் வாழ் – ; உகந்த தேசிக சிகாமணியே – ;

*கருத்து* : நீ சிவமே. எனக்கு உன்னை வணங்கும் பிறப்பை அருள்வாயாக.

**106.** உகந்தான் எனும்பே ரின்பஉரு
ஓர்ஆ கம்அதாய் எழுந்தருளிச்
சகம்தான் அறிய எனைஆண்ட
தாயே, வீர பத்திரப்பேர்
உகந்தே தரித்தும் ஓர்உருவம்
ஒருநா மங்கள் ஒன்றும்இலாது
அகம்தான், புறம்தான் கீழ்மேல்என்று
அறுதிக்கு அடங்கா அம்பரமே.

*பதவுரை* : உகந்தான் – ; எனும் – ; பேர் – திருப்பெயர் உடைய ; இன்பஉரு ஆனந்தப் பொருள்; ஓர் ஆகம் அது ஆய் – ஒரு மனிதவுருவுடன்; எழு ந்தருளி – தோன்றி; சகம்தான் – இந்த உலகத்தார்; அறிய – அறியும்படி; எனை – ; ஆண்ட – அடிமை கொண்டு அருளிய; தாயே; அன்னை போன்றவனே; வீரபத்திரப் பேர் – வீரபத்திரன் என்ற திருப்பெயரை; உகந்தே – விரும்பி ; தரித்தும் – மேற்கொண்டாலும்; ஓர் உருவம் – ஒரு வடிவம்; ஒரு நாமங்கள் – ஒரு பெயர் முதலியவை ; ஒன்றும் இலாது ; அகம் தான் – உள் என்றும்; புறம்தான் – வெளியே என்றும்; கீழ் மேல் என்றும் – ; கீழ் என்றும்; மேல் என்றும்; அறுதிக்கு – அளவுகளுக்கு; அடங்கா – உட்படாத ; அம்பரமே – அகண்ட வெளியே – ;

*கருத்துரை* : பெயரும் உருவமும் இருப்பினும் நீ பிரமம் ஆவாய்.

**107.** ஒன்றும் வேண்டா உலகுஆள
உண்மை மகுடம் தரித்துஅடியார்க்கு
என்றும் தம்மை மறைத்த இருள்
இரிய விளங்கும் திவாகரனே
நன்று தீதோடு யான்எனது
நாடும் நாம உருஅனைத்தும்
சென்றே அலைஆ திகள்போலச்
சேரும் சிவமாம் சாகரமே

*பதவுரை* : ஒன்றும் வேண்டா உலகு – எதையும் வேண்டாமை; என்னும் உலகை; (பிரம சொரூபம்) ஆள – ஆள்வதற்கு; உண்மை மகுடம் – உண்மை என்ற மகுடத்தைத் தாங்கி; அடியார்க்கு – ; என்றும் – எப்பொழுதும்; தம்மை மறைத்த – ; இருள் – அவிச்சை ஆகிய இருட்டு; இரிய – நீங்குமாறு; விளங்கும் – ; திவாகரனே – சூரியனே; நன்று – நன்மை; தீது – தீமை (என்பனவும்) யான், எனது – ; (என்ற) அகங்கார, மமகாரங்களும்; நாடும் – அடைவதற்கு ஏதுவாகும்; நாமம் – பெயர்; உரு – வடிவம்; அனைத்தும் – முதலிய எல்லாம்; அலை ஆதிகள் போல – அலைகள் முதலியன போல; சென்று சேரும் – புறப்பட்ட இடத்திலேயே சென்று கலக்கும்; சிவமாம் – ; சாகரமே – பெருங்கடலே ; .

*கருத்துரை* : அவிச்சையைப் போக்கும் பேர்றிவே! தோள்றுபவை எல்லாம் உன்னிடம் தோன்றி, உள்ளிடமே கலக்கின்றன.

108. காண்டற்கு அரிய சீவன்அணு
ஆகும் கரணா திகட்குஎல்லாம்
மாண்ட இந்தச் சூக்கஅணு;
மகத்துஇவ் அணுவுக்கு அணுஉருவே;
வேண்டிப் படியில் தொழும்தெய்வம்
விள்ளற்கு அரிய பேதம்;இவை
காண்டற்கு உரிய தெய்வம்அதைக்
காட்டும் தேவ தேவதையே.

*பதவுரை*: காண்டற்கு – காண்பதற்கு; அரிய – இயலாத; சீவன் – சீவாத்மா; அணு ஆகும் – ஓர் அணுப் போன்றது ஆகும்; கரண ஆதிகட்கு எல்லாம் – அனைத்துக் கருவி, கரணங்களையும் விட; மாண்ட– சிறந்ததாக; இந்த – ; சூக்க அணு – நுட்பமான அணு உள்ளது. மகத்து –பிரபஞ்சம் என்ற பிரகிருதி; இவ் அணுவுக்கு – இந்த அணுவுக்கு; அணு உருவே– அணு ஆகும்; படியில் – உலகில் மக்கள்; வேண்டி – வரங்கள் வேண்டி; தொழும் – வணங்கும்; தெய்வம் – தெய்வங்கள்; விள்ளற்கு அரிய பேதம் – எண்ணில் அடங்காதன; இவை – இந்த உண்மைகளை; காண்டற்கு உரிய – உணர்வதற்கு உரிய வழியாய் உள்ள; தெய்வம் அதை – பிரமத்தை; காட்டும் – ; தேவ தேவதையே – தெய்வம் போன்ற குருவே.

*கருத்துரை* : தோற்றம் பல ; உண்மை ஒன்றே. பிரபஞ்சம் தோற்றம்; பிரமம் உண்மை.

109. செய்வான், செய்விப் பவன்,செய்கை,
செய்யும் கருவி, தொழில் – ஐந்தும்
மெய்யாய் விளங்கும் பரமாக
மெய்யா உரைத்த மெய்உருவே
எய்யா எவைக்கும் மகத்தாக
இருந்த சுத்தம் தனைஅடக்கி
ஐயா அகண்ட பூரணமாய்
அடங்கா மகத்தோ மகத்துருவே.

*பதவுரை* : செய்வான் – ஒரு செயலைச் செய்யும் கருத்தா; செய்விப்பவன் – நிமித்த காரணமாக இருந்து, அதனைச் செய்விப்பவன்; செய்கை – செய்யப்படும் செயல்; செய்யும் கருவி – அதனைச் செய்வதற்கு உதவும் துணைக் காரணம்; தொழில் – செய்கையில் உள்ள தொழில் நுட்பம்; ஐந்தும் – ஆகிய ஐந்தும்; மெய்யாய் என்றும் உள்ள உண்மையாகிய; பரமாக – பிரமமே என்று; மெய்யா – நிதரிசனமாக விளங்குமாறு; உரைத்த – ; மெய் உருவே – உண்மையே வடிவமான குருவே; எய்யா – அறியப்படாத; எவைக்கும் – பொருள்களாக இருப்பினும், அவற்றினுக்கும்; மகத்தாக – பெரிதாக; இருந்த – ; சுத்தம் தனை – சுத்தம் என்ற பிரகிருதியை; அடக்கி – உள்ளடக்கி; அகண்ட பூரணமாய்; அடங்கா – தான் எதிலும் அடங்காத; மகதோ மகத் – மிகவும் பெரிய; உருவே – வடிவமே; ஐயா – எம் தலைவா!

*கருத்துரை* : வேறுபடும் தோற்றம் எல்லாம் பிரமமே. அது பெரிதினும் பெரிது.

**110.** துச்சக் குகையாம் ஐங்கோசத்
துன்ப உருவில் மறைந்திருந்த
புச்சப் பொருள்ஈது எனக் காட்டும்
புரணா னந்தப் பழம்பொருளே
அச்சப் பிறவி மரணம்எனும்
ஆழி கடக்க ஏழைதனக்கு
இச்சை இன்றி அருள்உருவாய்
எழுந்தே ஒளிரும் மாக்கலமே.

*பதவுரை* : துச்சம் – மிகவும் அற்பமான; குகையாம் – குகையைப் போல உள்ள; ஐங்கோசம் – ஐந்து உடம்புகளாக உள்ள; துன்ப உருவில் துன்பம் நிறைந்த பிறவியில்; மறைந்திருந்த – ; புச்சம் – வால் போன்ற; பொருள் ஈது – பொருள் இதுவே; என – என்று; காட்டும் – விளங்க உணர்த்திய; பூரண – முழு நிறைவான; ஆனந்த; ஆனந்தமான; பழம் பொருளே – என்றும் உள்ள பொருளே; அச்சம் – அச்சம் தருவனவாகிய; பிறவி, மரணம் எனும் – பிறப்பு, இறப்பு என்கின்ற; ஆழி – கடலை; கடக்க – கடப்பதற்கு; ஏழை தனக்கு அறிவிலிய ஆகிய எனக்கு; இச்சை இன்றி – என் விருப்பம் எதுவும் இல்லாமல் இருப்பினும் உன் கருணையினால்; அருள் உருவாய் – குரு என்ற அருள் வடிவமாக; எழுந்தே – எழுந்தருளி வந்து; ஒளிரும் – குரு பீடத்தில் விளங்கும்; மரக்கலமே – கப்பல் போன்றவனே;

*கருத்துரை* : விலங்குகட்கு வால் மறைந்திருந்து பின்பு தோன்றுவது. அதுபோல் உடம்பு பற்றிய உண்மை மறைந்துள்ளது. அதுவே பிரமம். அதை நீ உணர்த்திட, நான் அறிந்து பிறவியிலிருந்து நீங்கும் நெறியைப் பெற்றேன்.

**111.** ஏகப் பொருள்முப் பதம்ஆக்கி
இருமூன்று ஆக்கி ஒருமூன்றை
ஏகத் தள்ளி ஒருமூன்றை
ஏகம் ஆக்கும் என்மயமே
மோகத்து அழுத்தம் ஏழ்பூமி

முற்றும் கடந்து மோகம்அறும்
யோக நிலம்ஏழ் ஏறி,அதின்
உறுவாழ்வு அளிக்கும் கற்பகமே.

*பதவுரை* : ஏகப் பொருள் – பிரமம் என்ற ஒரு பொருளே; முப்பதம் ஆக்கி – சகம், தெய்வம், சீவன் என்ற மூன்று நிலைகளில் தோன்றி; இரு மூன்று ஆக்கி – அந்த மூன்றை மேலும் விரித்து, உலகம், உடம்பு, உருவுடையது, உரு இல்லாதது, உயிர், கூடஸ்தன் என்ற ஆறாகத் தோன்றச் செய்து; (வாழ்வித்து), (பிறகு உபதேசத்தில்) ஒரு மூன்றை – உலகம், உருவம் உடைய தெய்வம், உயிர் என்ற மூன்றை விலக்கி; ஒரு மூன்றை – எஞ்சியுள்ள ஆனந்தமய கோசம், உருவம் இல்லாத தெய்வம், கூடஸ்தன் என்ற மூன்றையும்; ஏகம் ஆக்கும் – பிரமமே என உணர்த்தும்; என் மயமே – என்னுள் நிறைந்தவனே; மோகத்து – மோகத்தில்; அழுத்தும் – உயிரை ஆழச் செய்யும் ; ஏழ் பூமி – ஏழு உலகங்களையும்; முற்றும் – முழுவதுமாக; கடந்து – ; மோகம் அறும் – மோகம் நீங்கப் பெறுவதாகிய; போக நிலம் – போகத் தானங்கள்; ஏழ் – ஏழும்; ஏறி – ; அதில் – அந்த நிலைகளில்; உறு – பெற்று – வரும்; இன்ப அனுபவங்களை அளிக்கும்; வாழ்வு அளிக்கும் கற்பகமே – கற்பக தருவைப் போன்றவனே.

*கருத்துரை* : பிரமமே படைப்பில் பலவாகத் தோன்றுகிறது. அதனோடு ஒன்றி நின்றால் இன்பம் எய்தலாம்.

**112.** தன்னைக் காணா அறிவாலே
சகத்தைப் பேத மாக்கண்டே
என்னது இதுயான் இவன்என்னும்
இடர்உற்று உழன்றேன் எம்கோவே
அன்ன மயக்கம் உன்அருளால்
அகன்றே சகம்என் கற்பிதமாம்
என்னை அன்றி வேறுஅன்றி
யானாக் கண்டேன் என்கண்ணே.

*பதவுரை* : தன்னை – ஆத்மாவை; காணா – உணராத ; அறிவாலே – அவிச்சையால் மறைக்கப்பட்ட அறிவின் காரணமாக; சகத்தை–உலகத்தை; பேதமா (க) என்னின் வேறு என உணர்ந்து; இது என்னது – இப்பொருள் என்னுடையது; யான் அவன் – யான் இந்தச் சீவன் ; என்னும் –என்று கொண்டு; இடர் உற்றேன் – துன்பம் அடைந்தேன்; எம் கோவே – எங்கள் தலைவா; என் கண்ணே – என் அறிவே; அன்ன மயக்கம் – அந்த மயக்கமானது; உன் அருளால் – ; (இன்று) அகன்று – நீங்கிடப் பெற்று; சகம் – உலகப் பொருள்களால் வரும் இன்ப துன்பங்கள்; என் கற்பிதம் ஆம் – நானே பிரமத்தின் மேல் கற்பனையாக ஏற்றியவை யாகும்; (என்றும்) என்னை அன்றி வேறு – ஆத்மா ஆகிய என்னின் வேறாக அல்லாமல்; யானாக் கண்டேன் – ஆத்மாவின் (பிரமத்தின்) தோற்றமாக இருப்பவை என்றும் உணர்ந்தேன்.

*கருத்துரை* : சீவாத்மாவும் பிரமத்தின் தோற்றம். உலகப் பொருள்களும் அதன் தோற்றம். அவ்வாறு இருக்க, அபிமானம் ஏன்?

113. இந்த உடலோடு ஆவிபொருள்
எல்லாம் மித்தை இவைவாங்கி
அந்தம் இல்லா உன்வடிவை
அடியேற்கு கருளும் தாதாவே
கந்த விடயம் ஆதிஐந்தும்
கைக்கொண்டு அருந்தி நீஇருக்க
எந்த மதியால் யான்புசித்தேன்
என்ன லாகும் இறையோனே?

*பதவுரை* : இறையோனே – ; கந்த விடயம் – புலன் உணர்வாகிய மணம்; ஆதி – முதலிய; ஐந்தும் – ஐந்து விடயங்களும் ; கைக்கொண்டு – வாங்கி; அருந்தும் – ; நீ இருக்க – ; எந்த மதியால் – என்ன சிந்தனை கொண்டு; யான் புசித்தேன் – நான் அனுபவித்தேன்; என்னலாகும் – என்று கூற முடியும்? இந்த உடலோடு – ; ஆவி – உயிரும்; பொருள் – பொருளும்; எல்லாம் – ; மித்தை – மாயை; இவை வாங்கி – இவற்றை உண்மை என்று எண்ணும் கருத்தை மாற்றி; அந்தம் – முடிவு; இல்லா – ; உன் வடிவம் – பிரம சொரூபத்தை; அடியேற்கு – அடியவனாகிய எனக்கு; அருளும் – அளிக்கும்; தாதாவே – வள்ளலே!

*கருத்துரை* : எல்லாம் பிரமத்தின் செயல். சீவனின் செயல் ஒன்றும் இல்லை. சீவான்மா தன்னைப் பிரமம் என்று உணர வேண்டும்.

114. ஆகாசாதி தேகாந்தம்
ஆன சகத்துன் கற்பிதமேல்
ஏக அறிவாம் உன்வடிவே
இவைக்கும் வடிவம் என்றாயே
மோகம் அறமுன் சொன்னவைகள்
முழுதும் நீயாய்த் தோன்றியிடின்
ஏகும்நீநான் ஈதுஎனலும்
எங்கே போத? தேவதையே!

*பதவுரை* : தேவதையே – என் தெய்வமே; ஆகாசம் – வானம்; ஆதி – முதலாக; தேக அந்தம் ஆன – உடம்பு வரை உள்ள; சகத்து – உலகம்; உன் – உனது; கற்பிதமேல் – சங்கற்பத்தால் படைக்கப்பட்டது என்றால்; ஏக அறிவாம் – தனித்த ஞான வடிவாகிய; உன் வடிவே – உனது வடிவமே; இவைக்கும் – இந்த உலகத்திற்கும்; வடிவம் – உண்மை சொரூபம்; என்றாயே – என்று உபதேசித்தாய்; முன் சொன்னவைகள் – இந்த உலகமும் மற்றவையும்; முழுதும் – ; நீயாய் –; தோன்றியிடின் – உண்மையாக மனத்துக்குத் தோன்றி விட்டால்; நீ, நான் எனலும் – நீ என்று பேசுவதும், நான் என்று பேசுவதும்; ஏகும் – மறையும்; ஈது எனலும் – இந்தப் பொருள் என்று ஒன்றைச் சுட்டிக் காட்டுவதும் சொல்வதும் ; எங்கே போத – போன இடம் எங்கே? (தெரியாது)

*கருத்துரை* : உலகமே பிரமத்தின் வடிவம் என்று உணர்ந்து கொண்டால் எல்லா வேற்றுமைகளும் மறைந்து விடும்.

115. தன்னை உணரும் உணர்வுஇன்றித்
தானும், பொய்யாம் கோசம்ஐந்தும்
பின்னம் இன்றி இருந்தபடி
பின்னும் அளிக்கும் பேரருளே
பொன்னம் கிரியும் அணுஉருவும்
பொதுக்காட் சியிலே சமநிலையாம்
என்னை யென்னால் எனக்கு அளித்தாய்
என்தாய் என்றன் உயிர்க்கு உயிரே.

*பதவுரை* : தன்னை உணரும் – நான் பிரமம் என்று உணர்கின்ற; உணர்வு இன்றி – கருத்து இல்லாமல்; தானும் – ; பொய்யாம் – பொய்யான தோற்றமாகிய; கோசம் ஐந்தும்– அன்னமய கோசம், பிராண மயகோசம், மனோமய கோசம், விஞ்ஞான மயகோசம், ஆனந்தமய கோசம் என்ற ஐந்து உடம்புகளும்; பின்னம் இன்றி இருந்தபடி – முன்னைய உருவத்திலிருந்து மாறுதல் இல்லாதபடி, இயல்பாக இருந்தவாறு; பின்னும்– இப்பொழுதும்; அளிக்கும் – காட்டித் தந்த; பேர் அருளே – பெரிய அருள் வடிவமே; பொன்னங்கிரியும்– இமயமலையும்; அணுஉருவும்– ஓர் அணுவும்; பொதுக் காட்சியிலே – அவற்றின் உள்ளே மறைந்து இருப்பது பிரமம் என்று உணர்ந்து கொண்டுபார்க்கும்போது; சமநிலையாம் – ஒத்தவையாகும். என்னை – ; என்னால் எனக்கு அளித்த – நீ உபதேசித்த ஞானத்தால் மீட்டுத் தந்த; என் தாய் – என்னுடைய தாயே ; என்றன் – ; உயிருக்கு உயிரே –;

*கருத்துரை* : நீ தந்த ஞானத்தால் என்னைப் பிரமம் என்று உணர்ந்தேன்.

116. ஆரா அருந்தல் பொருந்தல்இரண்டு
அருமை பெருமை எனப்புசிக்கும்
ஓராம் எனக்குஇவ் விரண்டோடும்
உடம்பும் சுமைஎன்று உரைத்தவனே
ஆரா இந்தப் பாரம்எனக்கு
ஆமோ? நான்உன் கற்பிதம்நீ
பார்ஆ திகட்கும் பரகர்த்தா
நீயே இவைக்கும் பகவானே.

*பதவுரை* : ஆரா – அனுபவித்துத் தீராத; அருந்தல் புலன் – விடயங்களை அனுபவித்தல்; பொருந்தல் – மகளிரைப் புணர்தல்; இரண்டு – ஆகிய இரண்டும்; அருமை பெருமை – அருமையும் பெருமையும் ஆகும் என்று ; புசிக்கும் – விடாது அனுபவிக்கும்; ஓர் ஆம் எனக்கு – சீவனாகிய எனக்கு; இவ்விரண்டோடு உடம்பும் – ; சுமை என்று உரைத்தவனே – வீண்பாரம் என்று உணர்த்தியவனே; ஆரா – பொருந்தாத; இந்தப் பாரம் – எனக்கு ஆமோ – எனக்குத் தகுமோ; நான் – ; உன் கற்பிதம் – உன்னால் – படைக்கப்பட்டவன் ; (எனக்கு சுதந்திரம் இல்லை) பார் ஆதிகட்கும் – மண்ணுலகத்துக்கும் மற்ற உலகங்களுக்கும் ; நீ – ; பரகர்த்தா– மேலான தலைவனாவாய்; நீயே யிவைக்கும் – ; பகவானே– கடவுளும் ஆவாய்.

*கருத்துரை* : உடம்பை எனது என்று நினைப்பதும் விடயங்களை அனுபவிப்பதும் வீணானவை. ஏனென்றால் இவற்றிற்குத் தலைவன் நீயே ஆவாய்.

117. கடம்போ லிருக்கும் உடம்போடு
கரணம் காணும் சுரியானேன்
அடங்கா அகண்ட சிவம்ஆனேன்
அந்தோ எல்லாம் ஆனேனே
அடங்கா மமதை அகங்காரம்
அகந்தை இருக்கும் ஆலயமாம்
கொடும்பா விகள்தம் நெறி அடியார்
கூடாது அகற்றும் குருமணியே.

*பதவுரை* : கடம் போல் – பானைபோல்; இருக்கும் – ; உடம்போடு – எனது உடம்பையும்; கரணம் – அகக்கருவி, புறக்கருவிகளையும்; காணும் – இச்சையின்றி வாளா பார்த்துக் கொண்டிருக்கும்; சுரியானேன் – சாட்சியாக மட்டும் இருக்கிறேன்; அடங்கா – அளவில் அடங்காத; அகண்ட சிவம் – ; ஆனேன் – ; அந்தோ எல்லாம் ஆனேனே – ; அடங்கா – குறையாத; மமதை – செருக்கும்; அகங்காரம் – தன் முனைப்பும் ; அகந்தை – தன் உணர்ச்சியும் ;இருக்கும் – ; ஆலயமாம் – இல்லமாகிய ; கொடும்பாவிகள் தம்நெறியை; அடியார் – உன் அன்பர்கள்; கூடாது – சேராமல்; அகற்றும் – நீக்கும்; குருமணியே – ;

*கருத்துரை* : சீவாத்மா வெறும் சாட்சியே; பாவிகள் அகந்தை கொள்வது வீண்.

118. எல்லாம் ஆகி அல்லவுமாய்
இருந்து விளங்கும் எம்இறையே
பொல்லேன் தனுவாம் சுமைசுமந்து
பொறுப்பது அரிது மிகஅரிது
கல்லா மனிதர் சம்பந்தம்
கடந்தே உன்னை அடைவதுஎன்றோ;
நல்லோர் அன்றி உயிர்க்குஉறுதி
நாடில் இலைஎன்று இன்றுஅறிந்தேன்.

*பதவுரை*: எல்லாம் ஆகி – எல்லாம் பொருள்களுமாகத் தோன்றி ; அல்லவும் ஆய் – அவை அல்லாத நிலையும் உடையவனாய்; இருந்து விளங்கும் – உண்மைப் பொருளாயுள்ள ; எம் இறையே – எமது தெய்வமே; பொல்லேன் – தீயவனாகிய நான்; தனுவாம் – உடம்பாகிய; சுமை –சுமையை – ; சுமந்து – ; பொறுப்பது – தாங்குவது ; அரிது இயலாதது; மிக அரிது – மிகவும் இயலாதது; கல்லா – படிக்காத; மனிதர் – ; சம்பந்தம் – தொடர்பை; கடந்து – விலக்கி; உன்னை – ; அடைவது ; என்றோ – ; நல்லோர் அன்றி – நல்லோரை அல்லாமல்; உயிர்க்கு – ; உறுதி – நன்மையை; நாடில் –ஆராய்ந்தால்; இலை – இல்லை; என்று இன்று அறிந்தேன்;

*கருத்துரை* : வேதாந்தம் கற்றவர்களின் சத்சங்கமே உயிர்க்கு நன்மை தருவதாகும்.

119. பஞ்சகோசம் கடந்துசிவ
பாரம் ஏறி அனுதினமும்
துஞ்சல் இல்லாப் பரமசுகம்
தோய்ந்தே இருக்கும் வாழ்நாளை
எஞ்சல் இல்லாப் பெரியோர்கள்
என்றும் அடைந்தார் அவர்அன்றி
நஞ்சை அமுதா அருந்திஇடும்
நானும் கரைஏ றுவதுஎன்றோ.

*பதவுரை* : பஞ்சகோசம் – எனது ஐந்து உடம்புகளை; கடந்து – வென்று; சிவபாரம் – சிவஉணர்வு; ஏறி – நிறையப்பெற்று; அனுதினமும் – நாள்தோறும்; துஞ்சல் – தூங்குதல்; இல்லா – இல்லாத; பரமசுகம் – மேலான இன்பத்தில்; தோய்ந்து – முழுகி; இருக்கும் –; வாழ்நாளை – வாழ்வை; எஞ்சல் – அறிவு குறைதல்; இல்லா – இல்லாத; பெரியோர்கள் – ; என்றும் அடைந்தார் – என்றும் நிலையாகக் கிடைக்கப் பெற்றார்; நஞ்சை – ; அமுதாக உணவாக; அருந்தி இடும் – பருகும் ; நானும் – ; கரைஏறுவது – பிறவியிலிருந்து வீடு பேறு அடைவது; என்றோ – எப்பொழுதோ?

*கருத்துரை* : சிவஉணர்வு பெற்ற பெரியோர்கள் வீடு பெற்றார்கள். இந்திரிய சுகத்தை அனுபவிக்கும் நான் வீடுபெற முடியுமோ?

120. துஷ்டர்களை நிக்கிரகம் பண்ண வேண்டித்
தூயோர்கட்கு அனுக்கிரகம் செய்ய வேண்டி
இஷ்டமுடனே தசாவ தார மாக
எடுத்ததுமுன் இன்னாளில் அடியேன் தன்னைச்
சிஷ்டன்எனும் படியாக்க நினைத்த போதே
செலமாலங்கட்டியதாய்த் திரண்ட தேபோல்
இஷ்டமுடன் பதினொன்றாம் அவதாரத்தை
யெடுத்தும்எனை யாண்டவா றென்னே யென்னே.

*பதவுரை* : துஷ்டர்களை – தீயவர்களை; நிக்கிரகம் பண்ண வேண்டி – அழிப்பதற்காகவும்; தூயோர்கட்கு – நல்லவர்களுக்கு; அனுக்கிரகம் செய்ய வேண்டி – அருள் வழங்குவதற்காகவும்; இஷ்டமுடனே – விருப்பத்தோடு; தசாவதாரமாக – பத்து அவதாரங்களை; எடுத்தது – நீ எடுத்தது; முன் – முற்காலத்தில்; இந்நாளில் – இக்காலத்தில்; அடியேன் தன்னை – ; சிஷ்டன்– நல்லவன்; எனும்படி ஆக்க – ; நினைத்த போதே; செலம் – தண்ணீர் ஆனது ; ஆலங்கட்டியதாய் – ஆலங்கட்டியாக ; திரண்டதே போல் – உருண்டு, உருவம் அடைந்ததைப்போல; இஷ்டமுடன் – விருப்பத்தோடு; பதினொன்றாம் அவதாரத்தை – ; எடுத்தும் – ; எனை – என்னை; ஆண்டவாறு – ஆட்கொண்டதன்மை ; என்னே என்னே – வியப்புக்கு உரியது ஆகும்.

*கருத்துரை* : திருமாலாக நிற்பவனே! நீ பத்து அவதாரம் எடுத்தது போல் இன்று என் குருவாகப் பதினோராவது அவதாரம் எடுத்து வந்து என்னை ஆட்கொண்டாய்.

121. உண்டான கருவியெனு மாராறுக்கும்
உன்னரிதாம் அதுநீயென்று உரைத்தோன் றன்னை
விண்டாலும் அவன்கருணை விளம்ப வொண்ணா
விண்டுவெனும் அருளுருவா விளங்கி வந்து
கொண்டானே குரம்பைமுதன் மூன்றை யும்தாம்
குவலயத்தில் எனதுதொழில் ஒன்றுங் காணேன்
பண்டான பழவினைக ளெல்லாம் சென்றே
பரமபதம் எனக்குவரும் படியா யிற்றே.

*பதவுரை* : உண்டான – படைப்பால் தோன்றிய; கருவியெனும் – தத்துவங்கள் ஆகிய ; ஆறாறுக்கும் – முப்பத்தாறைக் கொண்டும்; உன் அறிதாம் – நினைத்துப் பார்க்க இயலாத பொருளாகியவனும்; அது நீ என்று – நீ பிரமம் என்று; உரைத்தோன் தன்னை – உபதேசித்தவனுமாகிய குருவை; விண்டாலும் – விளக்கமாக எடுத்துச் சொன்னாலும்; அவன் கருணை – ; விளம்ப ஒண்ணா – சொல்ல முடியாது; விண்டு எனும் – திருமால் என்ற பெயருடன்; அருள் உருவா – அருள் வடிவமாக; விளங்கி வந்து – எழுந்தருளிவந்து; குரம்பை முதல் மூன்றையும் – உடல், பொருள் ஆவி என்ற மூன்றையும்; கொண்டானே – தனக்கு அர்ப்பணமாக ஏற்றுக் கொண்டான். (அன்றிலிருந்து) குவலயத்தில் – உலகத்தில்; எனது தொழில் – என்னுடைய செயலாக; ஒன்றும் காணேன் – ஒன்றையும் நான் உணரவில்லை; பண்டான பழவினைகள் – எனது சஞ்சிதவினைகள்; எல்லாம் – ; சென்றே – நீங்க ; எனக்கு – ; பரமபதம் – ; வரும்படி ஆயிற்றே – கிடைக்கும்படி வாய்த்தது.

*கருத்துரை* : குரு என்னை ஆட்கொண்டபின் எனது செயல் என ஒன்றையும் நான் எண்ணவில்லை. ஆதலால் எனக்கு வினை இல்லை. வீடுபேறும் வாய்க்கும்.

122. அற்பமாம் மதுவருந்தும் அவனே குற்றம்
அகுற்றமென வறியாது பிதற்றினக்காற்
பொற்புமிகும் உனதுபத்தி ரசம்புசிக்கும்
புன்மையனுக்கு எது நன்மை தீமையாகும்?
மற்புயனே அவ்வெறியிற் பிதற்றும் பாடல்
வகையேது? தொகையேது? வழியே தாகும்
சொற்பிழைகள் வந்தாலும் பொறுப்பதுஉன்றன்
சுதந்தரமே சுதன்வசனம் தந்தை போல.

*பதவுரை* : அற்பமாம் – தாழ்வானதாகிய; மது – கள்ளை ; அருந்தும் அவனே குடிப்பவனும் கூட; குற்றம், அகுற்றம் என – குற்றம் எது, குற்றமில்லாதது எது என்று; அறியாது – அறிவு தன்வசம் இல்லாமல்; பிதற்றினக்கால் – பிதற்றுகின்றபோது; பொற்புமிகும்; பண்புமிகுந்த ; உனது – ; பத்தி ரசம் – பத்திச்சுவையை ; புசிக்கும் –

அனுபவிக்கும்; புன்மையனுக்கு – கீழ்மையை உடைய எனக்கு ; எது – ; நன்மை – ; (என்றும்) தீமையாகும் – எது தீமை என்றும் தெரியாது. மல்புயனே – மற்போர் செய்கின்ற – தோள் வலிமை டையவனே; அவ்வெறியில் – அந்த வெறியோடு ; பிதற்றும் – நான் பிதற்றுகின்ற; பாடல் – பாடல்களுக்கு; வகையேது, தொகையேது – வகை தொகை இல்லை; வழியேது ஆகும் – மரபும் இல்லை; சொற்பிழைகள் – மேலும் அவற்றில் சொற்பிழைகள் வந்தாலும் –; பொறுப்பது – பொறுத்து ஏற்றுக் கொள்வது; உன்றன் – உன்னுடைய ; சுதந்தரமே – விருப்பமே ஆகும் ; (இது எதைப் போல என்றால்) சுதன் வசனம் – மகன் கூறியதை; தந்தை போல – தந்தை பொறுப்பதைப்போல.

*கருத்துரை* : கள் குடித்தவன் பிதற்றுவது போல, பக்தியில் மூழ்கிய நான் பிதற்றுவதை நீ ஏற்றுக் கொள்ள வேண்டும்.

123. இப்பாரில் உடல்எடுத்தே இந்நாள் மட்டும்
இவ்உடலே சத்தியமா எண்ணி நைந்தே
பொய்ப்பால்என் நெஞ்சம்எனும் வன்பே ஓடும்
புகலிடம்ஒன்று இல்லாமல் புலம்பும் நாளில்
கைப்பாலன் தனக்கு அன்னை கருணை போலக்
கடாட்சிப்பாய் எனத்துணிந்து கருதிப் பின்னும்
ஒப்புஆரும் இல்லாத உன்னைக் கிட்டி
உடல்ஆதி பந்தம்எலாம் ஒழிய வந்தேன்.

*பதவுரை* : இப்பாரில் – மண்ணுலகில்; உடல் எடுத்து – பிறந்து ; இந்நாள் மட்டும் – இன்று வரை; என் நெஞ்சம் எனும் – என் மனமாகிய; வன்பு – வலிமையுள்ள சக்தி ; பொய்ப்பால் – பொய்யையே சார்ந்து – ; ஓடும் – சிந்திக்கிறது; புகலிடம் ஒன்று இல்லாமல் – இதற்கு மாற்று வழியாக, நான் சென்று அடையும் இடம் ஒன்றும் கிடைக்காமல்; புலம்பும் நாளில் – நான் வருந்திய போது; அன்னை – தாய் ; கைப்பாலன் தனக்கு – தனது கைப்பிள்ளைக்கு; கருணை போல – கருணை காட்டுவது போல; கடாட்சிப்பாய் – என்னைக் கடைக் கண்ணால் பார்த்துக் கருணை புரிவாய் ; என – என்று ; துணிந்து கருதி – உறுதியாக நம்பி; பின்னும் – பிறகு ; ஆரும் ஒப்பு இல்லாத – இணையற்ற புகழை உடைய ; உன்னை – ; கிட்டி – சார்ந்து; உடல் ஆதி – உடம்பு முதலிய; பந்தம் எலாம் – தொடர்பு அனைத்தும் ; ஒழிய – நீங்குமென்று; வந்தேன் – அடைந்தேன்.

*கருத்துரை* : உன்னைச் சரணாக அடைந்தேன். எனக்கு அருள் புரிவாயாக.

124. அன்னைஉத ரத்துஇடையே அழுந்தும் துன்பம்
அதுநீங்கிப் பிறக்கும்போது அழுந்தும் துன்பம்
பின்னும்உடற் பிணியதனால் வருந்தும் துன்பம்
பேதமதி அதனாலே பிறக்கும் துன்பம்
மின்னவுடல் இறக்கும்போது அழுந்தும் துன்பம்
இத்தனையும் நீங்கஎனக்கு என்னோ என்னோ
என்னையும்ஓர் ஞானவடிவு ஆக்குவித்த
இறைவனடி நீடூழி வாழ்கவென்றே.

*பதவுரை* : அன்னை உதரத்து இடையே – தாயின் வயிற்றில்; அழுந்தும் – ஆழ்ந்து கிடந்த ; துன்பம் – துன்பமும்; அது நீங்கி – ; பிறக்கும் போது – ; அழுந்தும் துன்பம் – பெறும் துன்பமும் – ; பின்னும் – பிறந்த பிறகு; உடல் பிணியால் – உடம்புக்கு வந்த நோயால் ; வருந்தும் துன்பம் – அடைந்த துன்பமும்; பேதமதி அதனால் – வேறுபாட்டோடு எதையும் பார்க்கும் அறிவால்; பிறக்கும் – உண்டான; துன்பம் – துன்பமும்; இத்தனையும் – ;நீங்க – நீங்குமாறு; எனக்கு – எனக்கு நீ செய்த கருணை ; என்னோ என்னோ – எத்தகையது! என்னையும் – ; ஓர் ஞானவடிவு – ஞான வடிவமாக ; ஆக்குவித்த – ஆகச் செய்த; இறைவன் – குருவின்; அடி – திருவடி ; வென்று – வெற்றி பெற்று; வாழ்க – நீடூழி வாழ்க – ;

*கருத்துரை* : பிறவியால் எனக்கு வந்த எல்லாத் துன்பத்தையும் நீக்கி என்னை அறிவு வடிவமாக்கிய குரு வாழ்க.

125. ஆகம் தானா அழிந்தஎனை
அழுத்த உரித்தாம் மடமையினால்
பாகன் கரத்தில் அகப்பட்டுப்
பதைத்த இபம்போல் பதைப்பேனை
மோகம் தீர்ந்த உகந்தானும்
முதிர்ந்த கருணை யால்அழைத்து
ஏக அறிவுஉன் உருஎன்றே
இசைத்தான் அவனை வணங்கிடுவாம்.

*பதவுரை* : ஆகம் – உடம்பை; தானா – நானாகக் கருதி ; அழிந்த – துன்பத்தால் வருந்திய; எனை – என்னை; அழுத்த – முன்னேற விடாமல் அழுத்துவதற்கு ; உரித்தாம் – உரியதாக உள்ள ; மடமையினால் –அவிச்சையினால்; பாகன் – மாவுத்தனின்; கரத்தில் – கையில் ; அகப்பட்டு – ; பதைத்த – துன்புற்ற; இபம்போல் – யானையைப் போல்; பதைப்பேனை – துன்புற்ற என்னை; மோகம் – ஆசை; தீர்ந்த – இல்லாத; உகந்தானும் – உகந்தகுரு ; முதிர்ந்த – பழுத்த ; கருணையால் –; அழைத்து – ; ஏக அறிவு – பிரமம் என்ற ஞானவடிவமே; – உன் உரு –உன்னுடைய உண்மையான வடிவம்; என்று – ; இசைத்தான் – உபதேசித்தான். அவனை வணங்கிடுவாம் – ;

*கருத்துரை* : அவிச்சையால் துன்புற்ற எனக்குக் குருபிரான் பிரமஞானத்தை உபதேசித்தான்.

126. தடம்உயர் கடல்சூழ் பொருள்வைநன் னகரம்
தனில்மனுத் தேகமாய் விளங்கித்
திடமுடன் சுருதி சாஸ்திரவே தாந்தம்
சிந்தையில் அனுபவம் தெளிந்து
படிதனில் தனைவந்து அடுத்தவர்க்கு இரங்கிப்
பரமசற் குருவதாய் உணர்த்தி
அடியவர் அடிகட் கேஉகந் தாட்சி
அரன்பதி கயிலைவாழ்ந் தனனே.

*பதவுரை* : தடம்உயர் – பெரிய, உயர்ந்த; கடல் சூழ் – ; பொருள்வை நன்னகரம் தனில் –; மனுத்தேகமாய் – மனித உருவோடு; விளங்கி ; திடமுடன் – ; உறுதியாக ; சுருதி – வேதம் ; சாஸ்திரம் –; வேதாந்தம் – ; (இவற்றுடன்) சிந்தையில் – மனத்தில் ; அனுபவம் – ; தெளிந்து – படிதனில் – உலகத்தில் ; தனை வந்து அடுத்தவருக்கு– தன்னிடம் சரண் புகுந்த மாணவர்களுக்கு; இரங்கி – ; பரமசற்குருவதாய் – மேலான சிறந்த உருவாக இருந்து; உணர்த்தி – உபதேசம் செய்து; அடியவர் – அடியார்கள்; அடிகட்கே – தன்னுடைய திருவடிகளுக்கு; உகந்து – விருப்பத்துடன்; (வாழ) ஆட்சி – அருள் ஆட்சி செய்து; அரன்பதி – சிவனுடைய உலகமாகிய; கயிலை – கயிலையை ; (சேர்ந்து) வாழ்ந்தனனே.

*கருத்துரை* : உகந்த குரு மேலான குருவாக விளங்கி சிவபெருமான் வீற்றிருக்கும் கயிலையை அடைந்தார்.

127. ஆகநற் கனக மேனிபெற் றுடையர்
ஆவி சுற்றும்ஒரு பாவிகள்
ஆலம் ஒத்தவிழி மேரு ஒத்ததனம்
ஆசை ஒத்தவிலை கூறுவார்
மூக விர்த்திகொடு மூட ரத்னம்எனும்
மூட னானவனை வெல்லுவார்
மோகம் அற்றஉனை நினையும் அன்பரையும்
மூழ்கு மாறுசெய வல்லரோ
ஏக போகசுக ரூபன் ஆனஉனை
யானும் நம்பினவன் ஆதலால்
இன்னமங்கையர்கள் மையல் கொண்டுஉழல்வது
என்னபாவம் இது என்னவோ
வேகம் உற்றுவரு கோபன் ஏவுகணை
வெட்டி யட்டதுஒரு வீரனே
வேத ஆகம புராண ரூபம்எனும்
வீரபத்திர சுவாமியே.

*பதவுரை* : வேகம்உற்று – மிகவிரைவாக; வரும் – ; கோபன் – மன்மதன்; ஏவு – எய்த; கணை – மலர் அம்புகளை; வெட்டி –; அட்டது – வென்றவனாகிய ஒரு வீரனே; வேதம் – ; ஆகமம் – ; புராணம் – ; (ஆகியவற்றின்) ரூபம் எனும் – வடிவமான; வீரபத்திர சுவாமியே; நல்– சிறந்த ; கனகம் – தங்கம் போன்ற; மேனி – நிறம் வாய்ந்த; ஆகம் – உடம்பு; பெற்றுடையர் – பெற்றுள்ளவர்களின்; ஆவி – உயிரை; சுற்றும் – பிடித்துக்கொண்டு, (விடாத); ஒரு பாவிகள்– மிக்க பாவிகளும்; ஆலம் – நஞ்சை; ஒத்த – போன்ற; விழி – கண்ணையும்; மேரு ஒத்த தனம் – இமய மலையைப் போன்ற மார்பகங்களையும்; (உடைய வராய்) ஆசை ஒத்த – (தமது இன்பத்திற்குரிய ஆடவரின்) ஆசைக்குத் தகுந்தபடி; விலை கூறுவார் – பொருள் பறிப்பவரும்; மூகம் – பன்றி போன்ற; விருத்தி கொடு – உணவு உண்டு; மூடரத்நம் எனும் – அறிவிலிகளுக்குள்ளே

சிகாமணியாக உள்ள;மூடனானவனை – ; வெல்லுவார் – தம் வசப்படுத்துபவர்களும்; (ஆகிய) (விலைமாதர்) மோகம் அற்ற – ஆசையில்லாதவனாக; உனை; நினையும் – நினைக்கும்; அன்பரையும்; மூழ்குமாறு – தமது ஆசையில் அழுந்தும்படி; செயவல்லரோ – செய்யும் வல்லமை உள்ளவரா? ஏக போக சுகம் – நீயாகவே ஆகிவிடுதலாகிய இன்பமே ; ரூபனான– வடிவமான; உனை ; யானும் – ; நம்பினவன் ஆதலால் ; (நான்) இன்னும் – இன்னமும்; மங்கையர்கள் – மாதரின்மேல் ; மையல் – மோகம்; கொண்டு – ; உழல்வது – மனம் கழல்வது ; என்ன பாவம் – என்ன பாவத்தால் விளைந்தது?

*கருத்துரை* : உன்னை நினைப்பவரும் காமத்தின் வசப்படுபவர்களா? நான் அவ்வாறு அதன் வசப்படுவது, நான் செய்த பாவத்தின் விளைவு.

128. மானம் உற்றுவரு தாரம் மக்கள்மனை
மாடுநித்தமென எண்ணியே
மாளு சித்தம்உறை தீனம் உற்றமடம்
மாய்வது எப்பகல் அறிந்திலேன்
நானும் அற்றுஎனதும் அற்றலோடு அறமும்
நவிலு பாவம்அதும் அற்றுமேல்
நாடலுற்ற அறிவும் ஈனம் உற்றஅறி
யாமையும் அறுவது எந்தநாள்,
ஊனம் உற்றஉடல் பற்று துக்கசுகம்
ஒருவி யின்பமயம் ஆகியே
உள்ளம் என்னும்ஒரு கவலை யின்றிஒளிர்
யோகியே, கொடிய பாவியாம்
வேனில் மாரன்மிக வீசு பாணம்அதை
வெட்டி அட்ட ஒரு வீரனே
வேத ஆகம புராண ரூபம்எனும்
வீரபத்திர சுவாமியே.

*பதவுரை* : கொடிய பாவியாம் – ; வேனில் மாறன் – இளவேனில் பருவத்தைத் தனது அரசாட்சிக் காலமாகக் கொள்ளும் மன்மதன்; மிக வீசும்பாணம் – எய்யும் அதிகமான மலர் அம்புகளை; வெட்டி – ; அட்டது – வென்ற ; ஒரு வீரனே –; வேத ஆகம புராணரூபம் எனும் வீரபத்ர சுவாமியே – ; மானம் உற்று – பெருமையோடு; வரும் – என்னை அடைந்த; தாரம் – மனைவியும்; மக்கள் – மக்களும்; மனை – வீடும்; மாடும் – செல்வமும்; நித்தம் என – நிலையானவர் என்றும் நிலையானவை என்றும்; எண்ணியே – கருதி; மாளும் – துன்பத்தால் வருந்தும்; சித்தம் – மனத்தில் ; உறை – படிந்து இருக்கும்; தீனம் உற்ற – தாழ்வான; மடம் – அவிச்சை; மாய்வது – நீங்குவது ; எப்பகல் – எந்த நாளில் ; (என்று) அறிந்திலேன் – நான் அறியமாட்டேன்; நானும் அற்று; எனதும்; அற்றலோடு நீங்குவதுடன்; அறமும் – புண்ணியமும்; நவிலும் – சொல்லப்படும் – ; பாவம் அதும் – பாவமும்; அற்று – நீங்கப் பெற்று; மேல் – அதற்குப் பிறகு ; நாடல் உற்ற –

சிந்திக்கத் தொடங்கும் அறிவும்; ஈனம் உற்ற – இழிவான ; அறியாமையும்; அறுவது – நீங்கப் பெறுவது ; எந்த நாள் – ; ஊனம் உற்ற – குறைவான; உடல் – தேகாபிமானமும்; பற்று – பொருட்பற்றும்; துக்க சுகம் – துன்பம் இன்பம் ஆகியவற்றை அனுபவிக்கும் வேறு பாட்டு உணர்வும் ; ஒருவி–நீங்கப் பெற்று; இன்பம் ஆகியே – பேரின்ப நிறைவோடு; உள்ளம் என்னும் – மனம் என்ற; ஒரு கவலை – கவலைப்படும் கருவி; இன்றி – இல்லாமல் – ஒளிர் – ஒளி வீசும்; யோகியே.

*கருத்துரை* : நான் அவிச்சை கெடப்பெற்று, அறிவு, அறியாமை என்பனவும் நீங்கப் பெற்று இன்பம் அடைவது எப்பொழுது?

129. அஞ்சும்போய் ஆறும்போய் ஐம்பத்தோர் அக்கரம்போய்
விஞ்சுவெறும் பாழாகி விட்டேனே – நெஞ்சே!
அகம்தான் இருக்கும் அகல்திமிரம் போக்கும்
உகந்தானா; வேறு என்று உணர்.

*பதவுரை* : நெஞ்சே – ; அஞ்சும் – ஐந்து புலன்களும்; போய்அடங்கப் பெற்று; ஆறும் – காமம், கோபம், உலோபம், மோகம், மதம், பகைமை என்னும் ஆறு உட்பகையும்; போய்– நீங்கப் பெற்று; ஐம்பத்தாறு அக்கரம் – மொழி ; போய் – நீங்கப்பெற்று; விஞ்சு – மிகச் சிறந்த; வெறும் பாழ் – சூனியமாகவும்; அகந்தான் – எண்ணம் இருந்த; வேறு என்று உணர் – எல்லாம் வேறு வேறு என்று உணரும்; அகல் திமிரம் – நிறைந்த அவிச்சை என்ற இருள் ; போக்கும் – நீக்கிய ; உகந்தானா (க) – உகந்தகுருவாகவும் ; ஆகிவிட்டேன்– ;

*கருத்துரை* : புலன் கடந்து, மனம் கடந்து, சொல் கடந்து, அத்வைத நிலை அடைந்தேன்.

## ஆதியில் பஞ்சாக்கரம் அருள் செய்த குரு வணக்கம்

130. அஞ்சக் கரம்தன்னை எஞ்சாது சிந்திக்கு
மவர்கட்குஓர் அல்லல் இல்லை
அயனும் படைக்க நினையான் மறலி கிட்டுகிலன்
அடைய வேண்டுவதும் இல்லை
விஞ்சத் தனம்பூமி மைந்தரொடு சுற்றம்அகல்
வீடுதுணை என்ன வேண்டார்
வீணான ஆறாறும் எண்ணார்கள், சொன்னாலும்
மேல்என்று சித்தம் வையார்
மிஞ்சுற்ற இந்தஉப தேசம் தனைப்பெற்றோர்
வெகுகாலம் வாழ்ந்திருப்பார்
மெய்யனே துய்யனே அய்யனே அப்பனே
வேதாந்த மோன குருவே

மஞ்சுபதி ககனம்என நிறையும் சிதாகாச
வடிவமே, எமது குருவே
வணிகர்குல ஒஷதிகள் தழையஉப தேசமழை
மாறாது பொழியு முகிலே.

*பதவுரை* : மெய்யனே – உண்மையின் வடிவமே; துய்யனே – தூய்மையானவனே அய்யனே – தலைவனே ; அப்பனே –; என் தந்தையே; வேதாந்த – வேதாந்தத்தை உபதேசிக்கும்; மோனகுருவே – மவுன நிலையிலிருக்கும் குருபிரானே; மஞ்சு – மேகம் ; பதி – உலாவுகின்ற; ககனம் என – ஆகாயம் போல; நிறையும் – நிறைவான; சிதாகாச வடிவமே – உயிர் அறிவு வெளியே ; எமது குருவே – ; வணிகர் குல – வணிகர் குலமாகிய; ஓஷதிகள் – கடல்கள்; தழைய – நலம் பெறும்படி; உபதேசமழை ; உபதேசமாகிய மழையை; மாறாது – எப்பொழுதும்; பொழியும் – சொரியும்; முகிலே – மேகமே; அஞ்சு அக்கரம் தன்னை – திருஐந்து எழுத்தை ; எஞ்சாது – எண்ணிக்கையில் குறையாமல்; சிந்திக்கும்– செபிக்கும்; அவர்கட்கு – ; ஓர் அல்லல் இல்லை – ஒருதுன்பமும் இல்லை ; அயனும் – (அவர்களை) பிரமனும் ; படைக்க நினையான்– மீண்டும் பிறக்கச் செய்ய எண்ணமாட்டான்; மறலி – எமன்; கிட்டுகிலன் – அவர்களை நெருங்க மாட்டான் ; அடையவேண்டுவதும் – அவர்கள் இவ்வுலகில் பெறவேண்டிய பொருள்; இல்லை – ஒன்றும் இல்லை; தனம் – செல்வம்; மிஞ்ச – அதிகமாக வேண்டும் என்றும்; பூமி – நிலம்; மைந்தரோடு – ; சுற்றம் – உறவினரும் – ; அகல் வீடு – பெரிய வீடும்; துணையென்ன வேண்டார் – தமக்குத் துணையாக இருக்கும் என்று எண்ணமாட்டார்கள்; வீணான – பயனற்ற ; ஆறாறும் – முப்பத்தாறு தத்துவங்களையும்; எண்ணார் – சார்ந்து இருக்க மாட்டார்; சொன்னாலும் – அவற்றை பற்றிப் பிறர் கூறினாலும்; மேல் என்று – அவை சிறந்தன என்று ; சித்தம் வையார் – மனம் பற்ற மாட்டார்கள்; மிஞ்சுற்ற – உயர்வான; இந்த உபதேசம் தனைப் பெற்றோர் –; வெகுகாலம் வாழ்ந்து இருப்பார் – ;

*கருத்துரை* : திருவைந்து எழுத்தை நினைப்பவர்கள் துன்புறார்; பிறவார்; இறவார்.

131. நீங்காத அஞ்ஞான திமிரம் கழன்றுஓட
நிகழ்கின்ற பஞ்சாக்கர
நிலையான கிரணம் தரித்துவந்து உதவலால்
நின்மலக் கனலி எனலாம்
தேங்காத தெளிவுதரு நால்வேத ஆறங்கத்
திரளும் தெரித்த அதனால்
சித்துருவ சீதரன் உயிர்கட்கு இரங்கிவரும்
சின்மய வியாசர் எனலாம்
போங்காலம் வருகாலம் நிகழ்காலம் மூன்றையும்
புந்தியில் உணர்ந்த அதனால்
பொற்புடைய தற்பிரம சிற்சொரூப ஆனந்த
பொருஅரிய சுக முனிவனாம்

வாங்காத ஆங்கார தந்திக்குஓர் அரியாகி
வந்தருளு ஞான குருவே
வணிகர்குல வோஷதிகள் தழையஉப தேசமழை
மாறாது பொழியும் முகிலே.

*பதவுரை*: நீங்காத – ; அஞ்ஞான – அறியாமை என்னும் ; திமிரம் – இருள்; கழன்று ஓட – நீங்கி ஓடுமாறு; நிகழ்கின்ற – விளங்குகின்ற; பஞ்சாக்கர – திருவைந்தெழுத் தாகிய; நிலையான; – கிரணம் – ஒளிக்கதிர்களை; தரித்து – பூண்டு; வந்து – எழுந்தருளி; உதவலால் – உதவுவதால்; நின்மல – தூய்மையான; கனலி – சூர்யனைப் போன்றவன் என்று சொல்லக் கூடியவனும்; தேங்காத – தயங்கி நில்லாமைக்கு ஏதுவாகிய; தெளிவுதரு – ஞானத்தைத் தரும்; நால்வேத, ஆறு அங்கத் திரளும் – வேதாகமங்களின் சாரத்தை; தெரிந்த அதனால்– உணர்ந்த காரணத்தால்; சித்துருவ – ஞான வடிவாகிய; சீதரன் – நாராயணமூர்த்தி; உயிர்கட்கு – ; இரங்கி – ; வரும் – வந்து அவதாரம் செய்த; சின்மய – அறிவு நிறைந்த; வியாசர் எனலாம் –வியாசரே என்று கூறத் தக்கவனும்; போம் காலம் – இறந்த காலம்; வருகாலம் – எதிர்காலம்; நிகழ் காலம் – ; (என்ற) மூன்றையும்; புத்தியில் – புத்தியில்; உணர்ந்த அதனால் – உணர்ந்த காரணத்தால்; பொற்பு உடைய – பொலிவு பெற்ற; தற்பிரம – தானே பிரமம் ஆகின்ற; சிற் சொரூப – ஞானமே வடிவாகிய; ஆனந்த – பேரானந்தம் உடைய; பொரு அரிய – தனக்கு உவமை இல்லாத; சுக முனிவனாம் – சுக முனிவனே என்று சொல்லக் கூடியவனும்; வாங்காத– யாராலும் களைய முடியாத ஆங்கார – செருக்கு என்ற; தந்திக்கு – யானையை அடக்கும்; ஓர் அரி ஆகி – ஒரு சிங்கமாகி; வந்தருளும் – எழுந்தருளிய; ஞான குருவே – ; வணிகர் குல ஒஷதிகள் தழைய உபதேச மழை மாறாது பொழியும் முகிலே – ;

*கருத்துரை* : குருவே; நீர் ஞான சூரியன்; வியாச மகாமுனிவரையும், சுகமுனிவரையும் போன்றவர்.

**132.** அண்டம்க டந்துநிறை ஈசனே பரதத்வம்
ஆகும் என்ற உறுதி உளதால்
அற்பபல சமயங்கள் நேதிசெய்து ஒருவன்உளன்
ஆம்என்னும் லோக குருவாம்;
வண்டமிழ் தெரிந்துபல பாமாலை அர்த்தங்கள்
வல்லையின் அறிந்து கொளலால்
மந்தமா ருதமூல கிரியினில் உவந்தருளும்
மாசில்குறு முனிவன் ஆகும்;
பண்டுவரு காயத்ரி அல்லுபகல் நீங்காது
பகர்தலால் பனவர் பதியாம்;
பாழான மாயைதரும் யான்எனல் தவிர்ந்தசிவ
பத்திஉள சித்துருவமே
வண்டுமது உண்டுஉறையும் முண்டகத் தெரியல்புனை
மாதவா, போத குருவே,

வணிகர்குல ஒஷதிகள் தழையஉப தேசமழை
மாறாது பொழியுமுகிலே.

*பதவுரை* : அண்டம் – உலகங்களை ; கடந்து – ; நிறை – எங்கும் நிறைந்த ஈசனே – பிரமமே; பரதத்துவம் – மேலான மெய்ப் பொருள்; ஆகும் – ; என்று – ; உறுதி உளதால் – திடமான கொள்கை உள்ள காரணத்தால்; அற்ப – சிறிய ; பல சமயங்கள் – பலசமயங்களை; நேதி; செய்து – மறுத்து; ஒருவன் உளனாம் – ஒரே கடவுள் தான் உலகத்துக்கு உண்டு; என்னும் – என்று கூறுவதால் ; லோக குருவாம் – உலகத்திற்கே நீ குருவாகும்; வண்டமிழ் – வளப்பமான தமிழை; தெரிந்து – உணர்ந்து ; பல பாமாலை – பல செய்யுள் நூல்களையும் ; அர்த்தங்கள் – விளக்கங்களையும்; வல்லையின் – நன்றாக; அறிந்து கொளலால் – மக்கள் அறிந்து கொள்ளும்படி செய்ததால்; மந்தமாருதம் – தென்றல் காற்று; மூலகிரி – பிறக்கும் மூலமாகிய பொதிய மலையில்; உவந்து அருளும் – மகிழ்ச்சியாக வாழும்; மாசுஇல் – குற்றமில்லாத; குறுமுனிவன் ஆகும் – அகத்தியமுனிவன் ஆகும்; பண்டு – மிகப் பழைய காலத்தில்; வரு – முனிவர்களுக்குகிடைத்த; காயத்திரி – காயத்திரி மந்திரத்தை; அல்லு பகல் – இரவும் பகலும்; நீங்காது – விடாமல்; பகர்தலால் – சொல்லுவதால்; பனவர் – அந்தணர்களுக்கு; பதியாம் – ; தலைவனாகும்; பாழான – ; மாயை – ; தரும் – உண்டாக்கிய; யான் எனல் – நான் என்ற எண்ணத்தை; தவிர்த்த – நீக்கிய; சிவபக்தி – ; உள – கொண்ட; சித்து உருவமே – அறிவு வடிவமே; வண்டு – ; மது – தேனை ; உண்டு – பருகி; உறையும் – வாழும்; முண்டக – தாமரையின் ; தெரியல் – மாலையை; புனை – அணிந்த ; மாதவா – முனிவனே; போத குருவே – மெய்யுணர்வைத் தரும் குருவே; வணிகர்குல வோஷதிகள் தழைய உபதேச மழை மாறாது பொழியு முகிலே.

*கருத்துரை* : ஒரே கடவுள் என்று கூறுவதால் நீ உலக குரு. தமிழ் நூல்களை இயற்றுவதால் அகத்திய முனிவன். காயத்திரியை நாள் தோறும் செபிப்பதால் அந்தண உத்தமன்.

133. தாரார்கள் ஓர்கணம், தருகடிகை தள்ளார்கள்
சந்ததமும் வந்த பிணியைச்
சலியாது வாங்கிஅனு பவியார்கள் என்றன்உயிர்
தனுவிட்டு அகன்ற பொழுது
வாரார்கள் துணையாக நீராளமாய் உருகி
வந்திடுவர் போல அழுவர்
வந்தாலும் நடையற்ற பிணமோடு கூடியே
மயானவரை வந்ததாலோ
தாராள மாகநான் அவர்கள்உறவு என்பதும்
சதாகாலம் என்னை அவர்கள்
சார்வாக எண்ணினதும் இப்படி முடிந்ததால்
சரண்உனை அன்றி உளதோ?
வாராதும் வாராது வருவதுவும் வந்ததுஎனும்
மதிதந்து அளிப்பது என்றோ

வணிகர் குல வோஷதிகள் தழையஉப தேசமழை
மாறாது பொழியுமுகிலே.

*பதவுரை* : ஒர் கணம் – தமது வாழ்நாளில் ஒரு நொடியையும்; தாரார்கள் எனக்குத் தர இசையார்; தரு கடிகை – எனது வாழ்நாளிலிருந்து ஒரு நாழிகை நேரத்தை; தள்ளார்கள் –குறைக்கவும் மாட்டார்; சந்ததமும் – எனக்கு நாளும்; வந்த – ; பிணியை – ; சலியாது – மனம் சலிக்காமல்; வாங்கி – தாம் வாங்கி; அனுபவியார்கள் – ; என்றன் உயிர் – ; தனு விட்டு – உடம்பை விட்டு; அகன்ற பொழுது – நீங்கிய பொழுது; துணையாக – என் உயிருடன் தாமும் உயிரை விட்டு, உடனாக; வாரார்கள் – வரமாட்டார்; (ஆனால்) வந்திடுவர் போல் – உடன் வருபவர் போல; நீராளமாய் – கண்ணீர் பெருக்கி; உருகி – நெஞ்சம் உருகி; அழுவர் – ; வந்தாலும் – ; நடையற்ற பிணமோடு – செயலற்ற பிணத்தோடு; கூடி – ; மயானம் வரை – ; வந்தது – வந்ததுதான்; நான் – ; தாராளமாக – ; அவர்கள் – ; உறவு என்பதும் – எனக்கு உறவு என்று எண்ணியதும் ; அவர்கள்; சதாகாலம் – எப்போதும்; என்னை – ; சார்வாக – துணையாக; எண்ணினதும – ; இப்படி முடிந்தது; (ஆதலால்) உனை அன்றி – உன்னை அல்லாமல், சரணம் – வேறு கதி; உளதோ உண்டோ? வாராதும் – நமக்குக் கிடைக்காதது என்று விதி இருந்தால்; வாராது – அது கிடைக்காது; வருவது – நமக்கு விதியினால் கிடைக்க இருந்தது; வந்தது – கிடைத்தது; எனும் – என்ற; மதி – ஞானத்தை; தந்து – நீ அளித்து; அளிப்பது என்று – என்னைக் காப்பது என்றோ? – ; வணிகர் குல ஓஷதிகள் தழைய உபதேச மழை மாறாது பொழியும் முகிலே.

*கருத்துரை* : மனிதர் உறவு அல்லர்; இறைவனே நல்லுறவு.

134. சுத்தல க்ஷியமான சத்தாகி, ஏகமாய்ச்,
சொல்லரிய சின்மயத்தில்
தோன்றும்நின் மலசத்தி சகசீவ பரமதாய்த்
தோன்றும்அதில் நானாவிதப்
பெத்தமுறு பாவனையில் இற்றைவரை வீணாய்
பிறந்துஇறந்து எய்த்துவிட்டேன்
பெறல்அரிய உன்கருணை பெற்றுநா னாவிதப்
பிராந்தியது தீர்வது என்றோ?
புத்தமே, முத்தமே, சத்யமே, ஆனந்த
போதமே, பொன்னுலகுநேர்
புகழும் திருப்புனவை வாசனே, அடியர்துதி
பொன்றாத பரம குருவே
மத்தனேன் எனதுமதி நின்பாத வனசத்தில்
வைத்திடுவது எந்த நாளோ
வணிகர்குல வோஷதிகள் தழையஉப தேசமழை
மாறாது பொழியுமுகிலே.

*பதவுரை* : சித்தலக்ஷியமான – தத்துவ வேறுபாடுகள், மாயை, அவிச்சை முதலியவைகள் இல்லாத சுத்த நிலையிலுள்ள குறிக்கோளாகிய ; சத்தாகி – உண்மைப் பொருளாக; ஏகமாய் – ஒரே பொருளாய்; சொல் அரிய – சொற்களால் சொல்லிக் காட்ட முடியாத; சின்மயத்தில் – ஞானநிறைவில்; தோன்றும் – தோன்றக் கூடியதாகிய; நின்மல – தூய்மையான சக்தி – ஆற்றல்; சக சீவபரமதாய் – பிரமத்தோடு ஒரே காலத்தில் நிலவக் கூடிய சீவான்மா ஆகிய ஒரு பிரமமாய்; தோன்றும் அதில் – அதனிடத்தில் தோன்றுவதாகிய; நானாவித – பல வகையான; பெத்தம் உறு – ஆன்மாவைக் கட்டக் கூடியதான; பாவனையில் – பொய்யான எனது கற்பனையில்; இற்றை வரை – இன்று வரைக்கும் மயங்கி வினைகளைச் சேர்த்து; வீணாய் – பயனற்ற முறையில்; பிறந்து இறந்து – பிறந்தும் இறந்தும் உழன்று; எய்த்துவிட்டேன்– களைத்துவிட்டேன்; பெறல் அரிய–எளிதாகப் பெறமுடியாத; உன் கருணை; பெற்று; நானா வித – பல வகையான–; பிராந்தி அது – மயக்கம்; தீருவது என்றோ – தீர்வது எப்பொழுது; புத்தமே – என்றைக்கும் புதிய உண்மையே; முத்தமே – முத்துப் போலச் சிறந்தவனே; சத்தியமே – அழியாத பொருளே; ஆனந்த போதமே – ஆனந்தத்தைத் தரக்கூடிய மெய்யுணர்வே; பொன் உலகு – தேவலோகத்துக்கு ; நேர் – இணையாக வைத்து –; புகழும் – புகழப்படும்; திருப்புனவை – திருப்புனல்வாயிலை ; வாசனே – வாழும் இடமாகக் கொண்டவனே; அடியர் – அன்பர்கள்; துதி – போற்றும்; பொன்றாத – அழியாத; பரம குருவே – மேலான குருவே; மத்தனேன் – மயங்கியவனாகிய; எனது –; மதி – அறிவை ; நின்பாத வனசத்தில் – உன்னுடைய திருவடித்தாமரையில்; வைத்திடுவது எந்த நாளோ –; வணிகர் குல வோஷதிகள் தழைய உபதேசமழை மாறாது பொழியு முகிலே–;

*கருத்துரை* : பரப்பிரமத்தின் தோற்றமே சீவப் பிரமம். அவற்றை வேறு வேறு என்று நினைப்பவர்களுக்குச் சீவனைஒட்டிப் பல கற்பனைகள் தோன்றும். அந்தக் கற்பனை நீங்கினால் வீடு பேறு கிடைக்கும்.

135. ஓயாத ஏழ்கடலும் ஈராறு சூரியரும்
ஒருசண்ட வாய்வும் ஒருகால்
உலகத்தில் வந்துஉறினும் அணுவும் கலங்காத
உறுதிஉள மேரு எனலாம்
மாயாது வளர்கின்ற சிட்டால்நி ரந்தர
மதிக்க அரிய கெம்பீரமாம்
மனதுற்று நிற்றலால் எப்போதும் நிறைகின்ற
வாரியெனல் ஆகும் மாதோ
காயாத சீதமுடன் வெம்மைஅது இரண்டையும்
கணியாது இருந்த அதனால்
கனவடிவு பெற்றுள்ள முண்டகக் கண்ணன்இரு
கனமான பாரியெனலாம்
மாயாத செல்வமதை என்றனக்கு அருள்புரிய
வந்தருளும் மோன குருவே

வணிகர் குலவோஷதிகள் தழையஉப தேசமழை
மாறாது பொழியு முகிலே.

*பதவுரை* : ஓயாத – அலைகள் இடைவிடாமல் மோதும்; ஏழ் கடலும் – ஏழு கடல்களும்; ஈர் ஆறு சூரியரும் – பன்னிரண்டு சூரியர்களும்; ஒரு சண்ட வாயுவும் – ஒப்பற்ற வாயு தேவனும்; ஒரு கால் – ஒரே சமயத்தில்; உலகத்தில் –; வந்து உறினும் – வந்து சேர்ந்தாலும்; அணுவும் – அணுவளவும்; கலங்காத – சலனம் அடையாத; உறுதி உள – உறுதியை உடைய;மேரு எனலாம்– இமயமலை என்று உம்மைக் கூறலாம்; மாயாது – அழியாமல் ; வளர்கின்ற – ; சிட்டால் – சிட்ட குணத்தால் (நற்பண்புகளால்); மதிக்க அரிய – இன்ன உயர்வு என்று கணிக்க முடியாததும்; நிரந்தரம் – நிலையானதுமான; கெம்பீரமாம் – பெருமிதப் பொருளாவீர்; மனதுற்று நிற்றலால்– எம் சிந்தையில் பொருந்தி, அடங்கி வீற்றிருப்பதால்; நிறைகின்ற – கரைக்குள் அடங்கும்; வாரி – கடல்; எனலாம் – எனப்படுவீர்; காயாத – மாணவரைச் சினந்து கொள்ளாத; சீதமுடன் – குளிர்ந்த (கருணை) குணத்துடன்; வெம்மை அது – தவத்தால் வந்த வெப்பம்; (ஆக) இரண்டையும், உடையவராயிருந்தும்; (இவற்றை) கணியாது – கவனத்தில் கொள்ளாமல்; இருந்த அதனால் – ; கன வடிவு பெற்றுள்ள– சகளமான வடிவம் மேற் கொண்டுள்ள; முண்டகக் கண்ணன் – செந்தாமரைக் கண்ணன் ஆகிய கிருஷ்ண பகவானின்; இரு இரண்டு; கனமான – பெருமையை உடைய; பாரி – மனைவியர்; (நம்மை வைத்து ஆளும் தன்மை) உமக்கு உள்ளது; எனலாம்; மாயாத – அழியாத; செல்வம் அதை – பிரம ஞானமாகிய செல்வத்தை; என் தனக்கு – ; அருள் புரிய – வழங்குவதற்கு; வந்தருளும் மோன குருவே – ; வணிகர் குல ஒஷதிகள் தழைய உபதேச மழை மாறாது பொழியும் முகிலே – ;

*கருத்துரை* : நீர் எவ்வகையாலும் சலனம் அற்ற சித்தம் உடையீர். உயர் பண்பின் இருப்பிடம்; அடக்கத்தின் வடிவம். உலகத்தை ஆளுதற் பொருட்டு, கருணையையும், கடுமையையும் இச்சையின்றி ஆள்வீர்.

136. அல்லலானதுஇலாக் குபேரன் தனத்திலும்
அதிகநிதி நீங்குபொழுதும்
ஆகாத பொய்யுரைகள் சொல்லா திருத்தலால்
அயோத்திநகர் அதிபன் எனலாம்
தொல்லைவினை ரூபமாய் வருபஞ்ச கோசநகர்
தூளாய்த் தகர்த்த அதனால்
சொல்லரிய ஞானமத யானைஎன்று யாவரும்
துதித்துப் புகழ்ந்து சொலலாம்
நல்லசிசு, பொல்லாத சேய்என்று தாயும்இரு
நாட்டம் தவிர்ந்து அருள்வபோல்
நாடும்உலகு உயிரைநீ சமமாய் அளித்தலால்
நன்மை உறும் அன்னை எனலாம்
வல்லைஎனது உடல்,ஆவி நிதிநான் அளித்திலேன்
வலியஏற்று ஆண்ட குருவே,

வணிகர் குல ஓஷதிகள் தழையஉப தேசமழை
மாறாது பொழியு முகிலே.

*பதவுரை* : அல்லலானது – துன்பம்; இலா – இல்லாது; குபேரன் – குபேரனது; தனத்திலும் – செல்வத்தை விட; அதிக நிதி – அதிகமான செல்வம்; நீங்கு பொழுதும் – நீங்கும் சமயத்திலும்; ஆகாத – வீணான; பொய் உரைகள் சொல்லாதிருத்தலால் – ; அயோத்தி நகர் அதிபன்– அயோத்தி வேந்தனாகிய இராமன்; எனலாம் – என்று உன்னைச் சொல்லலாம்; தொல்லை வினை ரூபமாய் – பழவினைகளின் விளைவாக; வரு – கிடைத்த ; பஞ்சகோசம் – ஐந்து உடலாகிய; நகர் – நகரை; தகர்த்த அதனால் – விரைந்து அழித்தமையால்; சொல்லரிய– புகழ்வதற்கு அரிய; ஞான மதயானை – ஞானமாகிய மதநீரை உடைய யானை; என்று – ; யாவரும் – ; துதித்துப் புகழ்ந்து சொல்லாம் – போற்றிப் புகழ்ந்து கூறலாம்; நல்ல சிசு – நல்ல குழந்தை என்றும்; பொல்லாத – ; சேய் என்று – குழந்தை என்றும்; தாய் – ; இரு நாட்டம் – இரண்டு வகையாகப் பார்க்கும் நோக்கம்; தவிர்ந்து – நீங்கி; அருள்வ போல் – இருவருக்குமே கருணை காட்டுவது போல்; நாடும் – ; உலகு உயிரை – உலகில் உள்ள உயிர்கட்கு; நீ – ; சமமாய் – ; அளித்தலால் – கருணை செய்து வருவதால் ; (உன்னை) நன்மை உறும் – நன்மை செய்யும்; அன்னை – ; எனலாம் – என்று கூறலாம்; எனது உடல் – ; ஆவி – உயிர் ; நிதி – செல்வம்; (இவை எல்லாவற்றையும் ;) நான் – ; வல்லை – விரைந்து; அளித்திலேன் – உனக்கு அர்ப்பணிக்க வில்லை; (ஆனால் நீயே) ; வலிய – வலிந்து வந்து; ஏற்று – இவற்றைப் பெற்றுக் கொண்டு; ஆண்ட – என்னை ஆட்கொண்ட; குருவே – ; வணிகர் குல ஓஷதிகள் தழைய உபதேச மழை மாறாது பொழியும் முகிலே – ;

*கருத்துரை* : நீ இன்ப துன்பங்களைச் சமமாகப் பார்ப்பவன். தேகப்பற்று இல்லாதவன். எல்லோருக்கும் கருணை காட்டுபவன்.

137. ஆசைப் பெரும்புணரி காமக் களஞ்சிய
ஆங்கார பீடம் நீங்கா
அஞ்ஞான ஆலயம் பொய்யினுக்கு ஓர்புற்று
அகந்தைக்குஓர் சூழல்ஆகும்
காசுற்ற கோபாக்கினிக்கு இனிய காட்டமாம்
கடுலோபன் வாழும் மனையாம்
கருதின்மிகும் இழிவுடைய மற்சரன் முதற் பெயர்கள்
காதலோடு உறையும் நகராம்
பேசுற்ற இவ்வகைக்கு இடமாய் இருந்துநான்
பெற்றபேர் இன்னம் வேண்டாம்
பேசரிய முத்திக்கு வித்தாகும் உன்கருணை
பெற்றுப் பிழைப்பது என்றோ?
வாசம்உறும் முண்டகத்து உறைபவன் பொல்லாத
மறலியிடம் விட்டிடாதே

வணிகர்குல வோஷதிகள்தழையஉப தேசமழை
மாறாது பொழியும் முகிலே.

*பதவுரை* : என் உடல்; ஆசைப் பெரும் புணரி – ஆசைக்கடல்; காமக்களஞ்சியம் – காம எண்ணம் நிறைய உள்ள பண்டக சாலை; ஆங்காரபீடம் – செருக்கின் இருப்பிடம்; நீங்கா – விலகாத; அஞ்ஞான ஆலயம் – அஞ்ஞாணத்தின் இல்லம்; பொய்யினுக்கு – ; ஓர் புற்று – ஓர் புற்று இடம்; அகந்தைக்கு – தன் முனைப்புக்கு; ஓர் சூழலாகும் – ஏற்ற ஒரு சூழ்நிலையாகும்; காசு உற்ற – குற்றம் உள்ள; கோபாக்கினிக்கு – கோபமாகிய நெருப்புக்கு; இனிய – ஏற்ற; காட்டமாம் – விறகு ஆகும்; கடுலோபன் – மிக்க கருமித்தனம்; வாழும் – உள்ள; மனையாம் – இருப்பிடமாம்; கருதின் – சிந்தித்தால்; மிகும் இழிவுடைய; மற்சரம் – பொறாமை; முதல் பெயர்கள் – முதலிய குணங்கள்; காதலோடு உறையும் – விரும்பி வாழும்; நகராம் – இருப்பிடமாம்; பேசுற்ற – சொல்லப்பட்ட; இவ்வகைக்கு இடமாயிருந்து நான் – ; பெற்றபோ் – அடைந்த இகழ்ச்சி; இன்னம் வேண்டாம் – ; பேசரிய – சொல்லுக்கு அடங்காத; முத்திக்கு – ; வித்தாகும் – காரணமாகும்; உன் கருணை பெற்று பிழைப்பது என்றோ –; வாசம் உறும் – மணம்மிக்க; முண்டகத்து – தாமரை மலரில்; உறைபவன் – வீற்றிருக்கும் பிரமன்; பொல்லாத – ; மறலி – எமன்; ஆகியோரிடம் ; விட்டிடாதே – என்னை விடாதே; வணிகர்குல ஓஷதிகள் தழைய உபதேச மழை மாறாது பொழியும் முகிலே – ;

*கருத்துரை* : என் பிறப்பை அறுத்து, முந்தி யருள்.

138. சின்மய விலாசராம் பரமபதி நாதரைச்
சிந்தித்து இருக்கும் முறையால்
சித்தமுதல் ஆறுஇந் தியங்களும் அடக்கலால்,
திருவாத வூரர் எனலாம்
பொன்மயமது ஆனஉரு மின்னார்கள் சாலமது
பொன்றத் தொலைந்த அதனால்
புகழ்உடைய கங்கையின் சுதன்ஆகும் அநிசமும்
புகழவரும் சேனாபதி
என்பெயர் தரித்தலால், இருள்மலம் அறுத்தலால்
இருசூரன் ஆதி அசுரர்
எள்துணையும் மிச்சம்அற வெட்டும்ஒரு வேல்உடைய
எழிலான கந்தன் எனலாம்
வன்பணிகள் புரிபவர்கள் ஆறாறும் உள்ளதால்
வருமுருகன் ஆகும்ஐயா
வணிகர் குல ஓஷதிகள் தழையஉப தேசமழை
மாறாது பொழியும் முகிலே.

*பதவுரை* : சின்மய விலாசராம் – ஞான நிறைவின் விளக்கமாக உள்ள; பரம பதி – மேலான தலைவரான; நாதரை – இறைவனை; சிந்தித்து இருக்கும் முறையால் – எப்பொழுதும் எண்ணியவாறு இருக்கும் காரணத்தாலும்; சித்தம் முதல் – அந்தக் கரணத்துடன் உள்ள; ஆறு இந்தியங்களும் – ஆறு பொறிகளையும்; அடக்கலால் – அடக்கிய காரணத்தாலும்; திருவாதவூரர் – மாணிக்க வாசகர்; எனலாம் – என்று உன்னைச் சொல்லலாம்; பொன்மயம் அது ஆன– செந்நிறமான; உரு – வடிவத்தை உடைய; மின்னார்கள் – பெண்களுடைய; சாலம் அது – தந்திரங்கள்; பொன்ற – அழியுமாறு; தொலைத்த – நீக்கிய; அதனால் – காரணத்தால்; புகழ் உடைய ; கங்கையின் சுதன் ஆகும் – கங்கையின் மகனாகிய பீஷ்மனாவாய். அநிசமும் – நித்தமுமான சீவர்களும்; புகழவரு – போற்றுகின்ற; சேனாபதி – ; என் பெயர் – என்ற பெயரை; தரித்தலால் –; இருள்மலம் – அவிச்சையாகிய அழுக்கை; அறுத்தலால் – அழித்ததால்; இருசூரன்– சூரபதுமன் என்ற அசுரன்; ஆதி – முதலிய; அசுரர் – ; எள் துணையும் – சிறிதும்; மிச்சம் அற – ; வெட்டும் ஒருவேலுடைய–; எழிலான கந்தன் எனலாம் – ; வன்பணிகள் – ஏவலை; புரிபவர்கள் – ; ஆறாறும் – முப்பத்தாறு தத்துவங்களும்; உள்ளதால் – ; வருமுருகன் ஆகும் ஐயா – முருகனைப் போன்ற தலைவனே; வணிகர் குல வோஷதிகள் தழைய உபதேசமழை மாறாது பொழியுமுகிலே.

*கருத்துரை* : நீ மாணிக்க வாசகரையும் முருகனையும் போன்றவன்.

**139.** பந்தம்உறு தொந்தவினை சிந்தனையில் எண்ணாத
பரமபதம் ஆனகதியைப்
பகர்கின்ற உயிர்கள்நிதம் அடையஅருள்
பார்வதி சமேதர் எனலாம்
இந்தஉயிர் மிடிஅகல வந்தகுரு சுவாமிஉன்
இருபாத நிதி அருளலால்
இருவான அரசுபுகழ் வரமான பதம்உதவும்
எழில் ஆரணத்தன் எனலாம்
தந்தவினை வழிநின்று துன்பம்உறும் எம்மனோர்
சனியாத அமுதம் அயிலச்
சந்ததமும் வந்துஉதவு கின்றதால் ஈர்ங்கிரண
சந்திரன் எனப்புகலலாம்
வந்துபிற வாதவகை அடியனுக்கு அருள்புரியும்
வள்ளலே பரம குருவே
வணிகர் குல வோஷதிகள் தழையஉப தேசமழை
மாறாது பொழியுமுகிலே.

*பதவுரை* : பந்தமுறு – கட்டிப் போடுகின்ற; தொந்த – தொடர்பாகிய; வினை – வினைகளை; சிந்தனையில் எண்ணாத – ; பரமபதமான – மேலான நிலையாகிய; கதியை – ; பகர்கின்ற – சொல்லப்படுகின்ற; உயிர்கள் – ; நிதம் அடைய – எப்பொழுதும் அடையும்படி; அருள் புரிதலால் –; பார்வதி சமேதர் எனலாம் – உன்னைச் சதாசிவ மூர்த்தி என்று கூறலாம்; இந்த உயிர் – ; மிடி அகல – அறியாமையாகிய வறுமை நீங்கும்படி ;

வந்த குருசுவாமி – ; (ஆகிய) உன் இருபாதம் நிதி – உன் திருவடிகளாகிய செல்வத்தை; அருளலால் – தருவதால் ; இரு – பெரிய; வான அரசு – தேவேந்திரன்; புகழ் – போற்றும்; வரமான – சிறந்த ; பதம் – உலகத்தை (சத்திய லோகத்தை) உதவும் – அளிக்கின்ற; எழில் – உயர்வுடைய; ஆரணத்தன் – பிரமன்; எனலாம் – என்று உன்னைச் சொல்லலாம்; தந்தவினை – யாமே உண்டாக்கிக் கொண்ட கன்மத்தின்; வழிநின்று – காரணத்தால் பிறந்து; துன்பம் உறும் – ; எம்மனோர் – நாங்கள்; சனியாத – மீண்டும் பிறவாத படிக்கு; அமுதம் – ஞான உபதேசமாகிய அமுதத்தை; அயில – பருகும்படி; சந்ததமும் – என்றும்; வந்து உதவுகின்றதால் – வந்து தோன்றி உதவுகின்ற காரணத்தால்; ஈர்ங்கிரண – குளிர்ந்த கதிர்களை உடைய; சந்திரன் – ; எனப்புகலலாம் – என்று உன்னைச் சொல்லலாம்; வந்து பிறவாதவகை அடியனுக்கு அருள்புரியும் வள்ளலே; பரம குருவே வணிகர் குல வோஷதிகள் தழைய உபதேச மழை மாறாது பொழியு முகிலே.

*கருத்துரை* : நீ சதாசிவமூர்த்தியையும் பிரம தேவனையும் சந்திரனையும் ஒத்தவன்.

## முத்தி நிச்சயம்

140. அறிவான் அறிபொருளோடு ஆம்உணர்வும் பொன்றிக்
குறியாவையும் மாய்ந்து குன்றில் – பிரியாது
நித்தம் பரசுகமாய் நிற்பதுவே முத்திஅதற்கு
அர்த்தம்இது சொன்னேன் அறி.

பதவுரை : அறிவான் – அறிபவனும்; அறிபொருளோடு –அறியப்படுகின்ற பொருளுடன்; ஆம் உணர்வும் – அறிவும்; (என்ற மூன்றும் திரிபுடி ஆகும். இவை) மாய்ந்து குன்றில் – வேறுபாடு இல்லாமல் ஒன்றானால்; பிறியாது – விட்டு நீங்காமல்; நித்தம் – என்றும்; பரசுகமாய் – மேலான ஆனந்த வடிவாய்; நிற்பதுவே – ; முத்தி – பரமுத்தி ஆகும்; அதற்கு – ; அர்த்தம் – விளக்கம்; இது – இதுவே; சொன்னேன் அறி.

*கருத்துரை* : திரிபுடி உணர்வு மாய்வதே முத்தி.

141. நித்திரையும் சாக்கிரமும் நீண்மறப்புஎண் ணத்தாலாம்
அத்தனையும் தோன்றாது அகத்துஅடக்கி – சித்திரம்போல்
என்றுஇருப்பது அன்றுமுத்தி எய்தும்இது வேசுகமாம்
நன்றுஇதுவே அர்த்தம்என நாடு.

*பதவுரை* : நித்திரையும் – தூக்கமும்; சாக்கிரமும் – விழிப்பும்; நீள் மறப்பு எண்ணத்தால் ஆம் – நீண்டதும் என்றும் உள்ளதுமாகிய, மறப்பு, மீண்டும் நினைத்தல் என்பனவற்றால் உண்டாவனவாகும்; அத்தனையும் – அவையாவும்; தோன்றாது – ; அகத்து – ஆன்ம உணர்வில்; அடக்கி – ; சித்திரம் போல் – ; (அசையாமல், சலனம் இன்றி) என்று இருப்பது – என்று இருக்கின்றோமோ; அன்று – ; முத்து எய்தும் – வீடுபேறு வந்து சேரும். இதுவே சுகமாம் – ; நன்று இதுவே அர்த்தம் – இதுவே பொருத்தமான விளக்கம்; என நாடு – என்று அறிந்து அதை அடைவதற்கு முயல்வாயாக.

*கருத்துரை* : துரிய நிலையை அடைவதே முத்தி.

142. காண்பானும் காண்பவையைக் காணுமிடத்து ஏகமதாய்
பூண்பனவால் வாதனையும் பூண்டிடுமே – வீண்பயிலும்
வாசனையை சித்தத்தில் வையாதது முத்தி
ஆசுஇல்இதற்கு அர்த்தம்இதே யாம்.

*பதவுரை*: காண்பானும் – ஒரு பொருளைப் பார்ப்பவன்; காண்பவையை – பார்க்கும் பொருள்களை; காணும் இடத்து – பார்க்கும் நேரத்தில்; ஏகம் அதாய் – வேறு எதையும் சிந்திக்காமல் அந்த பொருளைப் பற்றி; பூண்பனவால் – தன் மனத்தில் விருப்பு, வெறுப்பு, அந்தப் பொருளை தான் செய்ய வேண்டிய விதம், அதனால் வரும் சாதக, பாதகங்கள் முதலியவற்றைச் சிந்தனையில் மேற்கொள்வதால்; வாதனையும் பூண்டிடுமே – வினையாகிய வாசனை உண்டாகிவிடும்; (ஆகையால்) வீண்பயிலும் – முத்தி அடைவதற்கு எந்த வகையிலும் பயன்படாத; வாசனையை – ; சித்தத்தில் – ; வையாதது – சேர்க்காமல் இருப்பது; முத்தி – முத்தி அடைவதற்கு ஏதுவாம்; ஆசு இல் – குற்றமில்லாத; இதற்கு – வீடுபேறு என்பதற்கு; அர்த்தம் இதே ஆம் – ;

*கருத்துரை* : விருப்பு, வெறுப்பு, சிந்தனை ஆகியவற்றாலும் சித்தத்தில் வாசனை சேரும். வாசனை முழுதும் நீங்கப் பெறுவதே வீடுபேறு.

143. உட்புறம்பால் யான்எனதுஎன்று உற்று வரும்அவற்றை
நட்புற்று நாள்தோறும் நைந்துநைந்தே – எய்ப்புஉற்றுப்
போகாமல் எப்பொழுதும் பூரணமா மன்னமுத்தி
ஆகாதோ அர்த்தமிதே ஆம்.

*பதவுரை* : உள் – மனத்தில் நினைவாகவும்; புறம்பால் – வெளியே விடயமாகவும்; உற்று வரும் – எதிர்ப்படுகின்ற; அவற்றை – ; யான் எனது என்று – நான் என்று எண்ணும் அகப்பற்றைக் கொண்டும் எனது என்று எண்ணும் புறப்பற்றைக் கொண்டும் ; நட்பு உற்று – விருப்பம் கொண்டு; (அவற்றை அடைவதற்காக) நாள் தோறும் – ஒவ்வொரு நாளும்; (முயன்று, அது கிடைக்காமையால்) நைந்து நைந்து – மிகவும் வருந்தி; எய்ப்பு உற்று – களைத்து; போகாமல் –; எப்பொழுதும் – ; பூரணமாம் – நிறைவான பிரமப் பொருளாக; மன்ன – நிலைபெற்று இருக்க; (அது) முத்தி ஆகாதோ – ; அர்த்தம் இதே ஆம் – ;

*கருத்துரை* : விடய அபிமானத்தால் வருந்தாமல், எப்பொருளையும் வேண்டாமல் எப்போதும் முழு நிறைவில் இருப்பதான பேருணர்வுடன் இருப்பது முத்தி.

144. உள்ளசுகம் ஈதுஎன்று உணரஅறி யாதமனக்
கள்ளலினால் இவ்விடயக் காங்கிசையும் – மெள்ளமெள்ள
வந்ததே இவ்விடய வாஞ்சை இறக்கமுத்தி
சிந்தை இதே அர்த்தம்எனச் சேர்.

*பதவுரை* : உள்ளசுகம் – உயிரானது அடைவதற்கு உரிய ஆனந்தம் ; ஈது – இவ் வாழ்க்கையில் இப்பொழுது கிடைக்கின்ற பிரமஞானத்தால் உண்டாகும் பேருணர்வே; என்று – ; உணர அறியாத – உணர்ந்து கொள்ளத் தெரியாத; மனக்கள்ளலினால் –

மனத்தின் வஞ்சனையான விருப்பு வெறுப்புக்களால்; இவ்விடய – உலகப் பொருட் பற்றாகிய; காங்கிசையும் – விருப்பமும்; மெள்ளமெள்ள வந்ததே – என்னை அறியாமல் என் உள்ளத்தில் இடம் பெற்று விட்டது; இவ்விடய வாஞ்சை – இந்தப் பொருட் பற்றானது; இறக்க – நீங்க; முத்தி – ; கிடைக்கும்; சிந்தை இதே – இதையே சிந்தனையில்; அர்த்தம் என; சேர் – கருதுவாயாக.

*கருத்துரை* : பொருட் பற்று நீங்கினால் முத்தி கிடைக்கும்.

## தெய்வ நிச்சயம்

145. சுட்டும்இடத்து உண்டுஎனலாய்ச் சுட்டுஅற்றால் இல்லாத
துடடமனச் சஞ்சலத்தில் தோயாமல் – எட்டஅரிதாய்
எவ்வுருவும் எங்கும்இரும் பொருளாய் நின்றதுஎதோ
அவ்வறிவே தெய்வம்என லாம்.

*பதவுரை* : மனமானது; சுட்டும் இடத்து – ஒரு பொருளின் அடையாளங்களைச் சொல்லும் போது; உண்டு – அவற்றைக் கொண்டு அந்தப் பொருளை உணரும்; (ஆனால்) சுட்டு அற்றால் – ஒரு பொருளுக்கு அடையாளமே சொல்லமுடியாது என்றால்; இல்லாத – அந்த மனம் அந்த பொருளை உணராது ; துட்டமன – இந்த தீய மனத்தின்; சஞ்சலத்தில் – சலனத்தில் (செயற்பாட்டில்) தோயாமல் – சம்பந்தப் படாமல்; அதற்கு அப்பால்; எட்ட அரிதாய் – நெருங்க முடியாததாய்; எவ்வுருவும் – எந்த வடிவத்திலேயும்; எங்கும் எல்லா இடத்திலும்; இரும்பொருளாய் – மறைந்து இருக்கும் பெரிய பொருளாக ; நின்றது எதோ – நின்றபொருள் எதுவோ; அவ்வறிவே – அந்த ஞானவடிவான உண்மைப் பொருளே; தெய்வம் எனலாம் – ;

*கருத்துரை* : தெய்வம் மனத்துக்கு எட்டாதது. எல்லாப் பொருளிலும் அது இருக்கிறது. அதைப் பேருணர்வால் உணர வேண்டும்.

146. காண்பனவால் உண்டுஎனலாய்க் காண்பதுஅற்றால் இல்லாத
வீண்பயிலும் மாயை விதிரித்தமதாய் – மாண்புடைய
முப்பாழ் கடந்த முதற்பாழாம் மூலம்எதோ
அப்பொருளே தெய்வம்என லாம்.

*பதவுரை*: காண்பனவால் – காண்கின்ற காரணத்தால்; உண்டு எனலாய்– உண்டு என்று சொல்லக் கூடியதாய்; காண்பது அற்றால் – காணாமல் இருந்தால்; இல்லாத – இல்லாமல் போகின்ற பொருளாய்; மாயை விதிரித்தமாய் – மாயையை நடுங்கச் செய்வதாய் உள்ளதும்; மாண்புடைய – சிறப்புடையதும்; முப்பாழ் – நனவு, கனவு, ஆழ்துயில் என்ற மூன்று பாழையும்; கடந்த – ; முதற் பாழாம் – தான் வடிவு, அளவு, குணம், செயலற்றுதுமான; மூலம் எதோ – ; அப்பொருளே தெய்வம் எனலாம் – அந்தப் பொருளையே தெய்வம் என்று கூறலாம்.

*கருத்துரை* : தெய்வம் மாயையைக் கடந்தது, உணர்வுநிலைகளைக் கடந்தது.




## மனத்திற்கு அறிவுறுத்தல்

147. நன்றுகளும் தீதுகளும் நமது இடத்தில் இல்லை
நமது இடத்தில் உண்டான நினைவதனால் உண்டு
நன்றுகளும் தீதுகளும் நினைவு இறந்தால் இல்லை
நமது மயம் வெறும் பாழாம்; நாடிஅது ஆவாய்
நன்றுகளும் தீதுகளும் நினைவு மயம் ஆகும்
நமதுமயம் நினைவாகும் நாடி உணருங்கால்
நன்றுகளும் தீதுகளும் இன்றி நிறைகின்ற
நமது மயம் எல்லாமா நாடிஅது ஆவாய்

*பதவுரை* : நன்றுகளும் தீதுகளும் – நன்மை தீமை என்பவையெல்லாம்; நமது இடத்தில் – ஆத்மாவுக்கு; இல்லை; நமது இடத்தில் உண்டான – ஜீவாத்மாவின்; நினைவு அதனால் உண்டு – வாசனை ஆகிய நினைவுகாரணமாக அந்த ஜீவாத்மாவால் உண்டு என்று கொள்ளப்படும்; நினைவு இறந்தால் – அந்த வாசனை அழிந்தால்; நன்றுகளும் தீதுகளும் இல்லை; நமது மயம் – ஆத்மாவின் நிலை; வெறும் பாழாம் – குறித்துக் கூறமுடியாததும் அளவு காண முடியாததும் ஆன, ஞான பூரணவடிவமாகும்; ஆகையால்; நாடி – அதை ஞான மார்க்கத்தால் விசாரித்து, பேர் உணவால் உணர்ந்து; அது ஆவாய் – அதுவாகவே நீ ஆவாயாக; நன்றுகளும் தீதுகளும் – நன்மைகளும், தீமைகளும்; நினைவுமயம் ஆகும் – ஜீவாத்மாவின் நினைவோடு நின்று விடும்; ஜீவாத்ம அபிமானம் நீங்கினால் அவை நீங்கிவிடும்; நமது மயம் நமது உண்மையான நிலை என்றும் எப்பொழுதும் எதையும் ஒருபடித்து ஆக உணரும் பிரக்ஞை ஆகும்; ஆகவே நமது மயம் எல்லாமா – எல்லாப் பொருளிலும் ஆத்மாவாக நாம் வியாபித்து இருக்கிறோம் என்று; நாடி – ஞானயோகத்தில் உணர்ந்து; அது ஆவாய்;

*கருத்துரை* : ஜீவாத்மா நினைவை ஒழித்து பரமாத்மா என்ற பேருணர்வை பெற்றால் நன்மை தீமை இல்லை.

148. அம்மா இகம்இதுவே பரம்இதுஎன்று அனவரதம்
தம்மால் மிகநொந்தே உமிகுத்திச் – சலியாதே
கைம்மாறு அறும்உடலை தினம்காக்கக் கரையாதே
சும்மா இருசுகமே வரும்தொடர்ந்தாய் இலைமனமே.

*பதவுரை* : மனமே – மனமே; இகம் இதுவே – இங்கு இருப்பது இகம் என்றும்; இது பரம் என்று – இது மறுமை என்றும்; வேறுபடுத்தி; அனவரதம் – எப்பொழுதும்; தம்மால் – தமது அறியாமையால்; மிக நொந்தே – மிகவும் வருந்தி; உமி குத்தி – உமியைக் குத்தி; சலியாதே – சலித்துப் போகாமல்; கைம்மாறு அறும் – பிரதி உபகாரம் இல்லாதபடிக்கு; உடலை – ; தினம் காக்க – காப்பதற்காக நாள்தோறும்; கரையாதே – கவலைப்படாதே; சும்மா இரு – மனச்சலனம் இல்லாமல் இருப்பாயாக; சுகமே வரும் – அதனால் ஆனந்தம் உண்டாகும்; (ஆனால்) தொடர்ந்தாய் இலை – இந்த வழியை நீ பின்பற்ற வில்லை.





*கருத்துரை* : எதனாலும் மனச்சலனம் இல்லாமல் இருந்தால் ஆனந்தம் உண்டாகும்.

149. வேண்டாதே கண்டஎல்லாம் வேண்டினால் பந்தம்உனைத்
தீண்டாதோ சென்மவினை தீர்ந்திடுமோ – மாண்டாலும்
தீரா வியாதிஉனைச் சிக்கிஆ ளாக்கிவிடும்
பாராய் தவிரும் படி.

*பதவுரை* : வேண்டாதே – தேவைஇன்றி ; கண்ட எல்லாம் – கண்ணால் கண்ட பொருள்களை எல்லாம்; வேண்டினால் – விரும்பினால்; உனை – ; பந்தம் – கன்மபந்தம்; தீண்டாதோ – பிடியாதா? சென்மவினை – பிறப்பை உண்டாக்கும் அந்த வினை; தீர்ந்திடுமோ – பிறந்து அனுபவித்தால் அன்றித் தீருமோ?; மாண்டாலும் – நீ இறந்தாலும் ; தீரா வியாதி – அந்த வினையின் மீதம் தீராத நோயாகும்; (அது) உனைச் சிக்கி ஆளாக்கிவிடும் – பிறவியில் சிக்கச் செய்து அடிமைப்படுத்திவிடும்; ஆதலால்; தவிரும்படி –அதுபோன்ற கன்மம் சேராமல் இருக்கும்படி; பாராய் – கவனமாக இரு.

*கருத்துரை* : பொருளை விரும்பும் விருப்பம் வினையை உண்டாக்கிப் பிறப்பைத் தரும்.

150. அச்சுஎல்லாம் பொய்என்று அறிந்தால் அதில்ஒருவன்
துச்சம்அற நன்மைஅறச் சொன்னாலும் – அச்சொல்லும்
பொய்யோ? அதுமெய்யோ? போதமில்லா நெஞ்சமே!
ஐயோ இதில்நோவார் ஆர்.

*பதவுரை* : அச்சு – ஜீவாத்மாக்கள்; பொய் என்று – பொய்யான தோற்றமே என்று; அறிந்தால் – ஞானமார்க்கமாக அறிந்து கொண்டால்; அதில் – அந்த ஜீவாத்மாவைப் பற்றி; துச்சம் அற – தாழ்வில்லாமல்; நன்மைகளை; அறச் சொன்னாலும் – முழுமையாகச் சொன்னாலும்; அச் சொல்லும் – ; பொய்யோ – பொய்யாகுமா; அது மெய்யோ – அல்லது அது மெய்யாகுமா? பொய்யே ஆகும்; போதமில்லா – வேதாந்த ஞான உணர்வு இல்லாத; நெஞ்சமே – ; ஐயோ –; இதில் – இந்தச் செய்தியில்; நோவார் – துன்பப்படாதவர்கள்; ஆர் – யார்?

*கருத்துரை* : உயிர் என்ற ஒருபொருளே இல்லை; அது பொய் என்று பேருணர்வால் உணர்ந்தால், அந்த உயிரைப் பற்றிச் சொல்லும் நன்மையான செய்தியும் கூடப் பொய் தான். இதை அறியாமல் பலர் துன்பப்படுகிறார்கள்.

151. அத்தியந்தா பாவம்ஆகும் இழிகோசம் ஐந்தும்
புத்தியினால் நித்தியமாய் பொற்புஉறல்போல் – புத்தியினால்
இல்லாதாய் நீங்காதோ? ஏழைமன மேஇதனில்
புல்லாது இருந்தவனோ பொய்?

*பதவுரை* : ஏழை மனமே – அறிவில்லாத நெஞ்சமே; அத்தியந்தா பாவம் ஆகும் – ஆத்மாவோடு மிக ஒற்றுமையாக உள்ளது எனத் தோன்றும்; இழி கோசம் ஐந்தும் – பொய்யான உடல்கள் ஐந்தும்; புத்தியினால் – உயிரின் அவிச்சை வயப்பட்டு மயங்கிய அறிவினால்; நித்தியமாய் – என்றும் அழியாத பொருள்களாக; பொற்புறல்போல் – பொலிவுடன் தோன்றுவதைப்போல்; புத்தியினால் – அவிச்சை நீங்கப் பெற்ற அறிவினால் விசாரிக்கும் இடத்து; இல்லாதாய் – உண்மையில் இல்லாததாக; நீங்காதோ அகலாவோ? இதனில் – இந்த மாயையில்; புல்லாது – பொருந்தாமல்; இருந்தவனோ – இருப்பவனாகிய பிரமமோ; பொய் – பொய்யான பொருள் ஆவான்? ஆகமாட்டான்.

*கருத்துரை* : அவிச்சை வயப்பட்ட புத்தி பொய்ப் பொருள்களை உண்மை என்று கற்பனை செய்து கொள்கிறது; அதே சமயம் உண்மைப் பொருளான பிரமத்தை, அதற்கு உருவம் இல்லாமையால், பொய் என்கிறது. அவிச்சை நீங்கினால் இந்த மயக்கம் நீங்கும்.

## பொதுவாகக் கூறியது

152. விண்ஆதி பூதம்எலாம் சிவமே ஆகும்
மெய்உருவும் பொய்உருவும் சிவமே ஆகும்
கண்ஆன வேதம்எலாம் சிவமே ஆகும்
கருதுகின்ற நினைவெல்லாம் சிவமே ஆகும்
எண்இறந்த பேதம்எலாம் சிவமே ஆகும்
இப்படியே தினம்தோறும் காண்பானாகில்
பெண்ஆணாம்அலியாகும் பேதம் இன்றிப்
பிரமமயம் ஆதல்திண்ணம் பேதம் இன்றே.

*பதவுரை* : விண் ஆதி – ஆகாயம் முதலிய; பூதம் எலாம் – ஐம்பூதங்களும்; சிவமே ஆகும் – உண்மையில், சிவமே ஆகும்; மெய் உருவும் – உண்மையான வடிவமும்; பொய் உருவும் – ; சிவமே ஆகும்; கண் ஆன – அறிவு நூல் ஆகிய; வேதம் எலாம் – ; சிவமே ஆகும் –; கருதுகின்ற –; நினைவு எல்லாம் – சீவாத்மாவின் பிரக்ஞை என்பது; சிவமே ஆகும்; எண் இறந்த – அளவு கடந்த; பேதம் எல்லாம் – வகைகளை உடைய உலகப் பொருள்கள் யாவும்; சிவமே ஆகும்; இப்படியே தினந்தோறும் காண்பான் ஆகில் –; பெண், ஆண், அலி ஆகும் – ; பேதம் இன்றி – வேறுபாடு இல்லாமல் அனைத்தும் ; பிரம மயம் –; ஆதல் – ; திண்ணம் – உறுதி ஆகும் ; பேதம் இன்றே – பிரமத்திலிருந்து வேறான பொருள் ஒன்றும் இல்லை;

*கருத்துரை* : அனைத்தும் பிரமமே.

153. அகவிருத்தி தனில்உண்டாம் சீவ னுக்கே
அதிட்டானம் ஞானவடிவு அல்ல என்றால்,

அகவிருத்தி தான்நிதமா ஆகும் போதே
அவன்,எனதுஎன்று, யாதொன்றை அறிய வொண்ணா
அகவிருத்தி செனித்த இடம் அகண்ட மாகும்
அல்லஎனில், அவைசெனித்த வடிவம் ஆகா;
அகவிருத்தி செனித்தவடிவு ஆதலாலே
அதிட்டானம் தனில்அடங்கும் ஐயம் இன்றே

பதவுரை : அக விருத்தி தனில் – பிரமத்தின் சங்கற்பத்தால்; உண்டாம் – பிறப்பு எடுக்கின்ற; சீவனுக்கு – உயிருக்கு; அதிட்டானம் – காரணம்; ஞான வடிவு – ; அல்ல என்றால் – ; அகவிருத்திதான் – சங்கற்பமானது; நிதமா ஆகும் போதே –; அவன் எனது என்று – யான் எனது என்று; யாது ஒன்றை – எதையும்; அறிய ஒண்ணா – அறிய முடியாது; அகவிருத்தி – சங்கற்பம்; செனித்த இடம் – தோன்றிய இடம்; அகண்டம் ஆகும் – ; அல்ல எனில் – அப்படி இல்லையேல்; அவை – உயிர்கள்; செனித்த – பிறந்த; வடிவம் ஆகா வடிவமாகத் தோன்ற மாட்டா; அகவிருத்தி – சங்கற்பத்தில் உண்டான உயிர்; செனித்த வடிவு – உலகத்தில் பிறந்து ஒரு ஜீவராசியாக; ஆதலாலே – தோன்றுவதால்; அதிட்டானம் தனில் – வடிவம் இல்லாத காரணத்தில், அதாவது பிரமத்தில்; அடங்கும் – ; ஐயம் இன்றே – இதற்குச் சந்தேகம் இல்லை.

*கருத்துரை* : சீவனுக்கு அறிவு இருப்பதால் அது அறிவுமயமாகிய பிரமத்தின் சங்கற்பமே. உயிர்கள் பலவடிவங்கள் உடையனவாகப் பிறப்பதால் அவற்றின் மூலகாரணமாகிய பிரமம் அளவுக்கு உட்பட்ட எந்த வடிவும் உடையது ஆகாது. சீவன் ஒருபிறவி வடிவத்தோடு தோன்றுவதால் அது பிறப்பு இல்லாத பிரமத்தில் அடங்குவதே ஆகும்.

**154.** சீறும் புயங்கம் சினம்மிகுத்தது என்றுஅறிந்து
பாறுறும் மெய்யோர் பயமான – வாறுஅதுபோல்
ஆங்கார வீணர் அருகே அறிவுடையோர்
தாங்காமல் சொல்லார் தகும்.

*பதவுரை* : சீறும் – ; புயங்கம் – பாம்பு; சினம் – கோபம்; மிகுத்தது – மிகுதியும் உடையது; என்று அறிந்து – ; பால் துறும் – அதன் பக்கம் எட்டிப் பார்க்கும்; மெய்யோர் – மக்கள்; பயமானவாறு அது போல் – அஞ்சுவதைப் போல; அறிவுடையோர் – ; ஆங்காரம்– செருக்குக் கொண்ட; வீணர் – தீயவர்களின்; அருகே – ; தாங்காமல் – தயங்கி நில்லாமல்; தகும் – அறிவுரை ஏதும்; சொல்லார் – ;

*கருத்துரை* : செருக்குடையோருக்கு அறிவுரை கூறுதல், கூறுபவர்க்கே தீமை விளைவிக்கும்.

155. எண்ணிப் பலபொருளை ஈட்டினோன் ஆனாலும்
மண்ணில் பெரியோனாய் வாழ்ந்தாலும் – விண்அதிலே
மூடா விழிஉடையோர் ஆனாலும் முத்தியினைக்
கூடார்கட்கு ஆளாக் குறி.

*பதவுரை* : எண்ணிப் பல பொருளை – மிகுதியான செல்வத்தை; ஈட்டினோன் ஆனாலும் – சேர்த்தவனாயினும்; மண்ணில் – உலகில்; பெரியோனாய் – புகழ் உடையவனாய்; வாழ்ந்தாலும் –; விண் அதிலே – தேவலோக வாழ்க்கையைப் பெறுவதற்காக வேண்டி; மூடா விழி உடையோர் ஆனாலும் – கண் உறங்காமல் யாகம், புண்ணியம் முதலியவற்றைச் செய்பவராயினும்; (அவர்கள் யாவரும்); முத்தியினை – ; கூடார்கட்கு – சேரத் தகுதி இல்லாதவர்க்கு; ஆளா – சான்றாவார் என்று; குறி – அறிவாயாக.

*கருத்துரை* : மண்ணுலகப் பெரு வாழ்வு முத்தியைத் தராது. பிரம ஞானமே முத்தி தரும்.

156. சாதிக்கு இழுக்குஎன்றும் தன்குலத்துக்கு ஈனம்என்றும்
பேதிக்கும் மூடனே பேசக்கேள் – ஆதிக்கே
இல்லாத சாதிக்கு இருப்பிடம்ஈது என்றுஉரைத்தால்,
நல்லார் அதைநாடு வார்.

*பதவுரை* : சாதிக்கு இழுக்கு – இது எம் சாதிக்குத் தாழ்வு தருவது; என்றும் – ; தன் குலத்திற்கு – ; ஈனம் – பழி தருவது; என்றும் – ; பேதிக்கும் – சாதி வேறுபாடு செய்யும்; மூடனே – ; பேசக் கேள் – ; நான் ஒன்று கூறுகின்றேன், கேட்பாயாக; ஆதிக்கே – பழைய காலத்திற்கும் பழைய தொடக்கத்தில்; இல்லாத – ; சாதிக்கு –; இருப்பிடம் ஈது – ஆதாரம் என்ன; என்று உரைத்தால் – என்று நீ கூறினால்; நல்லார் – நல்லவர் ; அதை – சாதியை; நாடுவார் – விரும்புவர்.

*கருத்துரை* : சாதி, குலம் என்ற பிரிவுகள் தத்துவ ஆதாரம் இல்லாதவை.

157. தன்மயமாம் சத்தி தான்நினைக்க நாமஉரு
மின்மயம்போல் தோன்றி விளிந்திடுமே – என்மயமே
ஆமே அவைஎல்லாம் ஆனால் யான்எனதும்
போமே, சிவமயமாய்ப் போம்.

பதவுரை : தன் மயமாம் – பிரமத்தின்; சத்தி – ; தான் நினைக்க – சங்கற்பித்தவுடன்; நாம, உரு – உலகங்கள், அவற்றில் பல்வேறு உயிர்கள், பொருள்கள் ஆகியவற்றின் பெயரும், வடிவங்களும்; தோன்றி – உண்டாகி; மின் மயம் போல் – மின்னலைப் போல; விளிந்திடுமே – மறைந்துவிடும்; அவை எல்லாம் –; என்மயமே ஆமே – நானும் பிரமத்தின் தோற்றம்; எனக்குள் இருக்கும் பிரக்ஞை பிரமம் ஆதலால், என்னிடம்

உள்ளவையே என்ற பேருணர்வு ஏற்பட்டால்; யான் எனதும் – யான் என்ற அகப்பற்றும், எனது என்ற புறப்பற்றும்; போமே – நீங்கும்; சிவமயமாய்ப் போம் – சிவமாய் விடும்.

*கருத்துரை* : பிரமத்தின் சக்தியால் உண்டாகும் சங்கற்பத்தினால் தோன்றும் உலகப் படைப்பு நிலையில்லாமல் நீங்கும். அவற்றுக்கும் சீவனுக்கும் அடிப்படையில், ஒரே உண்மைப் பொருளாக உள்ளது பிரமம் – சிவம்.

**158.** ஆதிநடு அந்தத்து அழியாது இருந்ததுஎந்தச்
சோதி?அன்றோ ஐந்தாம் தொழில்செய்யும் – தீதுஇல்அவை
ஏர்ஆர் எனதுமயம் என்றுஅறிந்தால் எத்தொழிலும்
ஆரார்; சிவமயமே ஆம்.

*பதவுரை* : ஆதி – படைப்பிற்கு முன்பும்; நடு – இடைப்பட்ட காலத்திலும்; அந்தத்து – படைப்புப் பொருள்கள் அழிந்த பின்பும்; அழியாது – ; இருந்தது எந்தச் சோதி? இருப்பது எந்தப் பேரறிவு?; அன்றோ – அந்தப் பேரறிவு அல்லவா; ஐந்தாம் தொழில் – ஐந்தொழில்களை; செய்யும் – ; தீதில் அவை – தீமையில்லாத அந்தப் படைப்புப் பொருள்கள்; ஏரார் – அழகு படைத்த; எனது – ஆத்மாவின்; மயம் ; என்று அறிந்தால்; எத்தொழிலும் – எந்தத் தொழிலையும்; ஆரார் – செய்து, கன்மத்தைச் சேர்த்து, அதனால் ஐந்தொழிலுக்கு உட்படார்; சிவமயமே ஆம் – சிவமாகி நிற்பர்.

*கருத்துரை* : பிரமத்தின் சங்கற்பத்தால் தான் ஐந்தொழில்கள் நடைபெறுகின்றன. உலகப் பொருள்கள் பிரம்ம மயம்; ஜீவனும் பிரம்ம மயம் என்று உணர்ந்தால் வினைகள் சேரா.

**159.** தீதுநலம் பாவம்அறம் சேதனமாம் சின்மயமே
சேதம்அற நின்று தினம்புரியும் – ஆதலினால்
இவ்வுருவம் என்மயமே என்றுஉணரில் இந்நான்கும்
அவ்வுருவம் ஆம்சிவமே ஆம்.

*பதவுரை* : தீது நலம் – தீமையும் நன்மையும்; பாவம் அறம் – பாவமும் புண்ணியமும்; (ஆகிய நான்கையும்) சேதனமாம் – அறிவாகிய; சின்மயமே – ஞானப்பொருளான பிரமமே; சேதம் அற – குறைவு இன்றி; நின்று – ; தினம் புரியும் – நாள்தோறும் செய்து வருகிறது; ஆதலினால் – ; (இது நாள் வரை மேற் சொன்ன நான்கையும், தனது செயலாகச் செய்து வரும் சீவன்) இவ்வுருவம் – உலகம், உலகப் பொருள்கள் ஆகியவற்றின் வடிவம்; என்மயமே – உண்மையில், தன்னுள் இருக்கும் ஆத்மாவின் (பிரமத்தின்) மயமே; என்று – ; உணரில் – உணர்ந்து கொண்டால்; இந்நான்கும் – இந்நான்கு செயல்களும்; அவ் உருவமாம் – அந்த ஆத்மாவின் செயல்களே ஆகிவிடும்; சிவமே ஆம் – சீவனும் சிவமாகும்.

*கருத்துரை* : நம்முள் இருக்கும் பிரம்மமே பொருள்களிலும் உள்ளது என்று உணர்ந்தால் செயல்களெல்லாம் பிரமத்தின் செயல்கள் ஆகிவிடும்.

**160.** கும்பிடவோ மேல்இல்லை கும்பிடவோ கீழ்இல்லை
கும்பிட்டு நீங்கக் குறையில்லை – கும்பிடும்பேர்
ஆரோ அறியேன்யான் ஆகாகா ஒகோகோ
சீரேதும் இல்லை சிவம்.

*பதவுரை* : கும்பிடவோ மேலில்லை, கீழ் இல்லை – (தெய்வத்தைக் கும்பிடுக என்றால்) தெய்வம் கும்பிடுபவனின் வேறானதும், உயர்ந்ததும் அன்று; சீவன் தாழ்ந்ததும் அன்று; (ஆத்மா தான், இவ்விரண்டு பேராகவும் தோன்றுகின்றது) கும்பிட்டு – கும்பிடுவதால், நீங்க– நீங்குவதற்குரிய; குறை இல்லை – சீவனிடம் ஒரு குறையுமில்லை; கும்பிடும்பேர் – கும்பிடும் செயலைச் செய்பவர்; ஆரோ – யார் என்று; யான் அறியேன் – எனக்குத் தெரியவில்லை ; (உண்மையில் இருப்பது ஒன்றே) (அது) சீர் ஏதும் இல்லை சிவம் – அந்தப் பொருள் புகழ்மொழி எதனாலும் சிறப்பித்துச் சொல்லமுடியாத, வடிவற்ற, அளவற்ற, குணம் அற்ற, செயல் அற்ற, எங்கும் வேறு நிற்பதே அறியாத அகண்டாகார சிவம் ஆகும்.

*கருத்துரை* : உள்ளது ஒன்றே யென்றால் கும்பிடுவது யார்? கும்பிடப்படுவது யார்? கும்பிட்டு வரும் பயன் என்ன? ஒன்றும் இல்லை.

**161.** செய்யும் தவமும் திரயோக நிட்டைகளும்
செய்யும் உபதேசம் திரபூசை – ஐயம்அறச்
சொல்வேன் சுதந்தரனை யன்றி, உலகுஎன்பது
இல்என்று உணரும்இ தே.

*பதவுரை* : செய்யும் – செய்வதற்கு உரிய; தவமும் –; திர – உறுதியான; யோகம் – யோகமும்; நிட்டைகளும் – தியானமும் சமாதியும் ; செய்யும் உபதேசம் – குருசெய்யும் உபதேசமும்; திர– உறுதியான; பூசை – வழிபாடுகளும்; (எவை என்று கேட்டால்) சுதந்தரனை அன்றி – எதனாலும் கட்டுப்படாமல் தன்மயமாக இருக்கும் பிரமத்தை அல்லாமல்; உலகு என்பது – கண்ணுக்குத் தோன்றும் பலவகைக் காட்சிகளை உடைய உலகம்; இல் – உண்மையில் இல்லை; அதுவெறும் பொய்த் தோற்றமே; என்று; உணரும் இதே – உணர்ந்து கொள்ளும் செயலே ஆகும்; ஐயம் அற சொல்வேன் – இதைச் சந்தேகமில்லாமல் கூறுகிறேன்.

*கருத்துரை* : பிரமம் உண்மை; உலகம் பொய்.

**162.** தெய்வ வடிவுஅறிந்துஅத் தேவதையைப் பூசைபண்ணித்
தெய்வ வடிவாம் திறம்கேளீர் – ஐயம்இல்நூல்

உள்ளவையே என்ற பேருணர்வு ஏற்பட்டால்; யான் எனதும் – யான் என்ற அகப்பற்றும், எனது என்ற புறப்பற்றும்; போமே – நீங்கும்; சிவமயமாய்ப் போம் – சிவமாய் விடும்.

*கருத்துரை* : பிரமத்தின் சக்தியால் உண்டாகும் சங்கற்பத்தினால் தோன்றும் உலகப் படைப்பு நிலையில்லாமல் நீங்கும். அவற்றுக்கும் சீவனுக்கும் அடிப்படையில், ஒரே உண்மைப் பொருளாக உள்ளது பிரமம் – சிவம்.

**158.** **ஆதிநடு அந்தத்து அழியாது இருந்ததுஎந்தச்**
**சோதி?அன்றோ ஐந்தாம் தொழில்செய்யும் – தீதுஇல்அவை**
**ஏர்ஆர் எனதுமயம் என்றுஅறிந்தால் எத்தொழிலும்**
**ஆரார்; சிவமயமே ஆம்.**

*பதவுரை* : ஆதி – படைப்பிற்கு முன்பும்; நடு – இடைப்பட்ட காலத்திலும்; அந்தத்து – படைப்புப் பொருள்கள் அழிந்த பின்பும்; அழியாது – ; இருந்தது எந்தச் சோதி? இருப்பது எந்தப் பேரறிவு?; அன்றோ – அந்தப் பேரறிவு அல்லவா; ஐந்தாம் தொழில் – ஐந்தொழில்களை; செய்யும் – ; தீதில் அவை – தீமையில்லாத அந்தப் படைப்புப் பொருள்கள்; ஏரார் – அழகு படைத்த; எனது – ஆத்மாவின்; மயம் ; என்று அறிந்தால்; எத்தொழிலும் – எந்தத் தொழிலையும்; ஆரார் – செய்து, கன்மத்தைச் சேர்த்து, அதனால் ஐந்தொழிலுக்கு உட்படார்; சிவமயமே ஆம் – சிவமாகி நிற்பர்.

*கருத்துரை* : பிரமத்தின் சங்கற்பத்தால் தான் ஐந்தொழில்கள் நடைபெறுகின்றன. உலகப் பொருள்கள் பிரம்ம மயம்; ஜீவனும் பிரம்ம மயம் என்று உணர்ந்தால் வினைகள் சேரா.

**159.** **தீதுநலம் பாவம்அறம் சேதனமாம் சின்மயமே**
**சேதம்அற நின்று தினம்புரியும் – ஆதலினால்**
**இவ்வுருவம் என்மயமே என்றுஉணரில் இந்நான்கும்**
**அவ்வுருவம் ஆம்சிவமே ஆம்.**

*பதவுரை* : தீது நலம் – தீமையும் நன்மையும்; பாவம் அறம் – பாவமும் புண்ணியமும்; (ஆகிய நான்கையும்) சேதனமாம் – அறிவாகிய; சின்மயமே – ஞானப்பொருளான பிரமமே; சேதம் அற – குறைவு இன்றி; நின்று – ; தினம் புரியும் – நாள்தோறும் செய்து வருகிறது; ஆதலினால் – ; (இது நாள் வரை மேற் சொன்ன நான்கையும், தனது செயலாகச் செய்து வரும் சீவன்) இவ்வுருவம் – உலகம், உலகப் பொருள்கள் ஆகியவற்றின் வடிவம்; என்மயமே – உண்மையில், தன்னுள் இருக்கும் ஆத்மாவின் (பிரமத்தின்) மயமே; என்று – ; உணரில் – உணர்ந்து கொண்டால்; இந்நான்கும் – இந்நான்கு செயல்களும்; அவ் உருவமாம் – அந்த ஆத்மாவின் செயல்களே ஆகிவிடும்; சிவமே ஆம் – சீவனும் சிவமாகும்.

*கருத்துரை* : நம்முள் இருக்கும் பிரம்மமே பொருள்களிலும் உள்ளது என்று உணர்ந்தால் செயல்களெல்லாம் பிரமத்தின் செயல்கள் ஆகிவிடும்.

**160.** கும்பிடவோ மேல்இல்லை கும்பிடவோ கீழ்இல்லை
கும்பிட்டு நீங்கக் குறையில்லை – கும்பிடும்பேர்
ஆரோ அறியேன்யான் ஆகாகா ஓகோகோ
சீரேதும் இல்லை சிவம்.

*பதவுரை* : கும்பிடவோ மேலில்லை, கீழ் இல்லை – (தெய்வத்தைக் கும்பிடுக என்றால்) தெய்வம் கும்பிடுபவனின் வேறானதும், உயர்ந்ததும் அன்று; சீவன் தாழ்ந்ததும் அன்று; (ஆத்மா தான், இவ்விரண்டு பேராகவும் தோன்றுகின்றது) கும்பிட்டு – கும்பிடுவதால், நீங்க– நீங்குவதற்குரிய; குறை இல்லை – சீவனிடம் ஒரு குறையுமில்லை; கும்பிடும்பேர் – கும்பிடும் செயலைச் செய்பவர்; ஆரோ – யார் என்று; யான் அறியேன் – எனக்குத் தெரியவில்லை ; (உண்மையில் இருப்பது ஒன்றே) (அது) சீர் ஏதும் இல்லை சிவம் – அந்தப் பொருள் புகழ்மொழி எதனாலும் சிறப்பித்துச் சொல்லமுடியாத, வடிவற்ற, அளவற்ற, குணம் அற்ற, செயல் அற்ற, எங்கும் வேறு நிற்பதே அறியாத அகண்டாகார சிவம் ஆகும்.

*கருத்துரை* : உள்ளது ஒன்றே யென்றால் கும்பிடுவது யார்? கும்பிடப்படுவது யார்? கும்பிட்டு வரும் பயன் என்ன? ஒன்றும் இல்லை.

**161.** செய்யும் தவமும் திரயோக நிட்டைகளும்
செய்யும் உபதேசம் திரபூசை – ஐயம்அறச்
சொல்வேன் சுதந்தரனை யன்றி, உலகுஎன்பது
இல்என்று உணரும்இ தே.

*பதவுரை* : செய்யும் – செய்வதற்கு உரிய; தவமும் –; திர – உறுதியான; யோகம் – யோகமும்; நிட்டைகளும் – தியானமும் சமாதியும் ; செய்யும் உபதேசம் – குருசெய்யும் உபதேசமும்; திர– உறுதியான; பூசை – வழிபாடுகளும்; (எவை என்று கேட்டால்) சுதந்தரனை அன்றி – எதனாலும் கட்டுப்படாமல் தன்மயமாக இருக்கும் பிரமத்தை அல்லாமல்; உலகு என்பது – கண்ணுக்குத் தோன்றும் பலவகைக் காட்சிகளை உடைய உலகம்; இல் – உண்மையில் இல்லை; அதுவெறும் பொய்த் தோற்றமே; என்று; உணரும் இதே – உணர்ந்து கொள்ளும் செயலே ஆகும்; ஐயம் அற சொல்வேன் – இதைச் சந்தேகமில்லாமல் கூறுகிறேன்.

*கருத்துரை* : பிரமம் உண்மை; உலகம் பொய்.

**162.** தெய்வ வடிவுஅறிந்துஅத் தேவதையைப் பூசைபண்ணித்
தெய்வ வடிவாம் திறம்கேளீர் – ஐயம்இல்நூல்

சற்குருவால் தான்உணர்தல், சந்ததமும் சிந்தித்தல்,
நிற்கும்அது வான நிலை.

*பதவுரை* : தெய்வ வடிவு – தெய்வத்தின் உருவத்தை ; அறிந்து – ; அத்தேவதையை – ; பூஜை பண்ணி – ; தெய்வ வடிவாம் – தெய்வ வடிவம் பெறும் தன்மையை; கேளீர் – ; சொல்வேன்; கேட்பீராக; ஐயம் இல் நூல் – வேதாந்த நூலைச் சந்தேகம் அற; சற்குருவால் – நன்கு ஞானா சிரியனிடம்; உணர்தல் – கேட்டு உணர்வதும்; சந்ததமும் – எந் நாளும்; சிந்தித்தல் – அதைச் சிந்திப்பதும்; நிற்கும் அது ஆன நிலை – ஞானமயமாகவே நிற்றலுமே யாகும்.

*கருத்துரை* : ஞானயோகமே சிறந்த வழிபாட்டு நெறியாகும்.

163. ஐஞ்ஞூற்று வீசர் அடியிணையைச் சேர்ந்தஉனக்கு
எஞ்ஞான்றும் நெஞ்சே இடர்உண்டோ? பைஞ்ஞாகம்
தாங்கும் புவிவிளங்கச் சஞ்சரிக்கும் பானுகண்ட
தூங்கிமம் போகாதோ சொல்.

*பதவுரை* : நெஞ்சே – ; ஐஞ்ஞூற்று வீசர் – ; அடியிணையை – திருவடிகளை; சேர்ந்த உனக்கு – ; எஞ்ஞான்றும் – எப்பொழுதும்; இடர் உண்டோ – துன்பம் நேருமோ? நேராது; பைஞ் ஞாகம் – பாம்பாகிய ஆதிசேடன் ; தாங்கும் – ; புவி – உலகம்; விளங்க – ஒளிபெற; சஞ்சரிக்கும் – வானில் செல்லும் ; பானு – சூரியன்; கண்ட ; தூங்கு – செறிந்த ; இமம் – இருள்; போகாதோ? சொல் – ;

*கருத்துரை* : சூரியன் இருக்க இருள் இல்லை. ஐந்நூற்றீசன் துணை இருக்கத் துன்பம் இல்லை.

164. ஈயக் கதிராம் இலக்கணமும் இன்குறளும்
ஆயப் பொருளா அறைந்தாலும் – நோய்அகலாது
உன்னை மறந்த ஒருதுரிய பூமியிலே
மன்னி இருக்க மதி.

*பதவுரை* : ஈயக் கதிராட் – ஈயத்தைக் காய்ச்சிச் செவியிற் பாய்ச்சினாற் போன்ற கடினமான இலக்கணமும்; இன் குறளும் – இனிய திருக்குறளும்; ஆய – ஆய்வதற்கு உரிய; பொருளா – நல்லுரைகளாக; அறைந்தாலும் – கூறினாலும்; (அவற்றை ஆராய்வதால்) நோய் அகலாது – பிறவிப் பிணி தீராது; உன்னை ; மறந்த – மறந்திருக்கும்; ஒரு துரிய பூமியிலே ஒப்பற்ற துரிய உணர்வு நிலையைப் பெற்று; (அதில்); மன்னியிருக்க – நிலை பெற்று இருக்க; மதி – கருதுவாயாக;

*கருத்துரை* : அபர ஞானத்தால் பயனில்லை. துரிய உணர்வு நிலையில் நின்று பரஞானம் பெறுக.

## புத்திக்கு அறிவுறுத்தற் கண்ணி

பஞ்சவித விடயம் பாங்காய்ப் பரம்புசிக்க
நெஞ்சேநீ நான்எனவே நிச்சயிப்பது என்ன மதி. 1

*பதவுரை* : நெஞ்சே – மனமே; பரம் – பரம் பொருளாகிய பிரமம் உன்னுள் இருந்து; பஞ்சவித – ஐந்து வகையாக உள்ள; விடயம் – இந்திரிய விஷயங்களை; பாங்காய் – முறையாக; புசிக்க – அனுபவிக்கையில்; நீ நான் எனவே – இங்கு உள்ள உயிர்கள் நீ அனுபவித்தாய் என்றும் நான் அனுபவித்தேன் என்றும்; நிச்சயிப்பது – உறுதியாக நம்புவது; என்ன மதி – என்ன அறிவுடைமையாகும்.

*கருத்துரை* : புலன்களை நுகர்வது ஆத்மாவே; உயிர்கள் அல்ல.

அஞ்சுவித விடயம் ஆரும் அறிவாயிருக்கப்
பஞ்சவித மாகப் பார்த்துஉழல்வது என்ன மதி. 2

பதவுரை : அஞ்சுவித விடயம் – ஐம்புலன்களை; ஆரும் – அனுபவிக்கும் பொருள்; அறிவாய் இருக்க – ஞானவடிவாகிய பிரமமாய் இருக்கையில்; பஞ்ச விதமாக – அவற்றைத் தருபவை ஐந்து பொறிகள் என்று; பார்த்து – கருதி; உழல்வது – துன்பப்படுவது; என்ன மதி.

*கருத்துரை* : புலன்கள் ஐந்து ஆயினும் அவற்றை அனுபவிக்கும் ஆத்மா ஒன்றே.

காண்பவனைக் காணாது காண்பவையைக் கண்டுஉழன்று
வீண்கால மாக விழற்குஇறைப்பது என்ன மதி. 3

*பதவுரை* : காண்பவனை – காண்பவன் ஆகிய ஆத்மாவை; காணாது – ஞான நெறியில் உணராமல்; காண்பவையை – உலகப் பொருள்களாகிய விடயங்களைப் பொறிகளாலும்; மனத்தாலும் அனுபவித்து, அல்லது அனுபவிக்க ஆசை கொண்டு; உழன்று – துன்புற்று; காலம் வீண் ஆக – காலம் வீணாகக் கழிய; விழற்கு இறைப்பது – மேட்டுத் தரையில் தண்ணீர் பாய்ச்சுதல்; என்ன மதி ? – ;

*கருத்துரை* : அறிபவன் பிரமம். அவனை உணர்தல் முத்தி தரும். அதை விட்டு, அறியப்படும் பொருளை விரும்பி வருந்துவதால் என்ன பயன்?

ஈசன் வடிவமே எட்டுஉருவும் என்றுஉணர்ந்து
பாசம் தவிர்ந்துஒழியப் பாராதது என்ன மதி. 4

*பதவுரை* : எட்டு உருவும் – ஐம்பூதங்களும், சூரியனும், சந்திரனும், இயமானனும் ; ஈசன் வடிவமே – பிரமத்தின் வடிவமே; என்று உணர்ந்து – ; பாச ம் – பற்றுக்கள்; தவிர – நீங்கும்படி ; பாராதது – நடந்து கொள்ளாதது ; என்ன மதி? – ;

*கருத்துரை* : அடிப்டைப் பொருள்கள் அனைத்தும் இறைவனின் வடிவமே என்று உணர்ந்தால் பற்றுத் தோன்றாது.

காரியரூ பங்கள்எல்லாம் காரணமாக் காணாமல்
நாரிமனை என்னதுஎன நாடவந்தது என்ன மதி. 5

*பதவுரை* : காரிய ரூபங்கள் – காரியமாய உண்டான பொருள்கள்; எல்லாம் – ; காரணமா – அவற்றின் காரணமாகிய பிரமத்தில் அடங்கும் ஆதலால், அவற்றில் பிரமத்தை; காணாமல் – உணராமல்; நாரி – மனைவிக்கு உரிமையாகிய; மனை – வீட்டை; என்னது என – என்னுடை யது என்று; நாட – நாடும்படி; வந்தது – தோன்றியது; என்ன மதி.

*கருத்துரை* : பொருள்களெல்லாம் அவற்றின் காரணமாகிய பிரமமே. அதை உணராமல் பொருளின் மீது பற்று வைப்பது அறியாமை.

சும்மா தனிஇருக்குந் தூய்தாந் துரியமதில்
அம்மா தினமிருப்ப தாகாதது என்ன மதி. 6

*பதவுரை* : சும்மா – தன் செயல் என்று எதுவும் அற்று, செயல் தொடர்பாக யாதொரு மனச்சலனமும் இல்லாமல்; தனி இருக்கும் – தத்துவங்களின் தொடர்பு இல்லாமல் ஆத்மா மாத்திரமாக இருக்கும்; தூயதாம் – தூய்மை ஆன; துரியம் அதில் – துரிய உணர்வுடன்; தினம் இருப்பது – ; ஆகாதது – சாத்தியமில்லாமல் போனது; என்ன மதி.

*கருத்துரை* : செயல் எதுவும் ஆத்மாவினுடையதாகும். ஆதலால் செயலுக்கு உதவும் தத்துவங்களைப் பற்றிய மனச்சலனம் இல்லாமல் ஆத்ம உணர்வோடு இருப்பதே அறிவுடைமை.

எவ்வுருவு நாடி யிராக வெகுளியறத்
தவ்வலறச் சிவமாய்ச் சார்ந்தறியாது என்ன மதி 7

*பதவுரை* : எவ்வுருவும் – காணப்படும் உருவத்தையெல்லாம்; நாடி – ஞானம் மார்க்கத்தால் ஆராய்ந்து; இராக, வெகுளி – விருப்பும் வெறுப்பும்; அற – இல்லாமல்; தவ்வல் அற – அது தப்பிப்போகாதபடி (அது வேறு என்று எண்ணாதபடி) சிவமாய் – சிவம் என்றே பார்த்து; சார்ந்து அறியாது – அதை சிந்தையில் சேர்க்காதது; என்னமதி.

*கருத்துரை* : உயர்ந்ததும் தாழ்ந்ததும் ஆகிய எல்லாப் பொருளும் சிவமே. அவற்றைப் பற்றி நாம் விருப்பு வெறுப்புக் கொள்ள இடம் இல்லை.

நானெனவும் நீயெனவும் நாடல் உடலைக் குறித்தே
ஞானமயம் ஒன்றெனவே நாடாதது என்ன மதி 8

*பதவுரை* : நான் எனவும் – ; நீ எனவும் – ; நாடல் – வேறு வேறுகருதுவது; உடலைக் குறித்தே – உடம்புகள் வேறாக இருப்பதால் தான்; (இவ் இருவர் உள்ளேயும் இருக்கும்) ஞானமயம் – அறிவு என்ற மூலவடிவம்; ஒன்று – ஒன்றே தான்; எனவே – ; நாடாதது – உணர்ந்து அறியாதது என்னமதி – ;

*கருத்துரை* : ஜீவர்களுக்கு உடல்கள் தான் வேறு. உள்ளிருக்கும் ஆத்மா ஒன்று தான்.

பொய்யைப் பொருளாகப் புன்மதியாற் கண்டதுபோல்
மெய்யுணர்ந்து அத்துவிதம் வேண்டாதது என்ன மதி. 9

*பதவுரை* : பொய்யை – பொய்யான உலகப் பொருள்களின் தோற்றங்களை; பொருளாக – உண்மையென்று; புன்மதியால் – அற்பபுத்தியால்; கண்டது போல் – எண்ணியதைப்போல்; மெய்யை உணர்ந்து – உண்மையைத் தெரிந்து; அத்துவிதம் – ஒன்றாக ஆவதை; வேண்டாதது – விரும்பாதது; என்னமதி.

*கருத்துரை* : பொய்யை உணர்ந்தது போல் மெய்யையும் உணர்ந்து அத்வைத நிலையை விரும்புக.

எப்பொழுதுந் தன்னையன்றி யாதுவந்தது யாதுஒழிந்தது
அப்படியே எண்ணி அமையாதது என்ன மதி. 10

*பதவுரை* : எப்பொழுதும் – ; தன்னை அன்றி – பிரமத்தை உணர்ந்திருப்பதுடன்; (உலக நிகழ்வுகளுள்) யாது வந்தது – எது வந்தது ; யாது ஒழிந்தது – எது நீங்கியது; அப்படியே எண்ணி – என்ற அளவில் அறிந்து, சாட்சியாக மட்டும் இருந்து; அமையாதது – அறிதலுக்கு வரம்பு அமைக்காதது; என்ன மதி –

*கருத்துரை* : நம் சிந்தனை படர்வது பிரமத்தைப் பற்றி மட்டுமே இருக்க வேண்டும். உலக விடயங்களைச் சிந்திக்காமல், சாட்சி மாத்திரமாக இருக்க வேண்டும்.

மாயா இருளிரவில் வந்தகனா விட்டுஒழிந்து
நீயாம் நிலைதனிலே நில்லாதது என்ன மதி. 11

*பதவுரை* : மாயா – மாயை ஆகிய; இருள் இரவிலே – இருள் நிறைந்த இரவு போன்ற வாழ்வில்; வந்த – ; கனா – கனவு போன்ற உலகியல் பந்தங்கள்; விட்டு ஒழிந்து – விட்டு நீங்கி; நீயாம் – ஆத்மாவாகவே நிற்கும்; நிலை தனிலே – துரிய உணர்வு நிலையில்; நில்லாதது என்ன மதி – ;

*கருத்துரை* : மாயையால் உண்டான பந்தம் ஒழிந்து, ஆத்மாவாக (உன் சொந்த – நிலையில்) நில்.

முன்னடங்கும் வாதனைகள் முற்றுந் தவிராமே 12
இன்னமினந் தாங்கி இரங்குவதும் என்ன மதி.

*பதவுரை* : முன் – பல பிறவிகளுக்கு முன்பு தொடங்கி; அடங்கும் – பதிவாகியுள்ள; வாதனைகள் – வாசனைகள்; முற்றும் – முழுதுமாக; தவிராமே – நீங்கப் பெறாமல்; இன்னம், இனம் தாங்கி – இன்னமும் அவற்றை உணர்வில் சுமந்து; இரங்குவது – வருந்துவது; என்ன மதி – ;

ஆகாத வாதனையால் அல்லல் தினம் பட்டுஉழன்று 13
ஓகோ இனந்தவிராது உழலும்மதி என்ன மதி.

*பதவுரை* : ஆகாத – முத்திக்குப் பயன்படாத; வாதனையால் – வாசனைகளால் – வாசனைகளால்; தினம் – நாளும்; அல்லல் – துன்பம்; பட்டு – அடைந்து; உழன்றும் – வருந்தியும்; இன்னம் – இன்னமும்; தலிராது – அவற்றை நீக்கிக் கொள்ளாது; உழலும் மதி – துன்புறும் அறிவு; என்ன மதி –

*12, 13 – கருத்துரை* : வாசனைகளால் துன்பம் வரும். அவற்றை நீக்கிக் கொள்ள முயலவேண்டும்.

பேதம்உறு புந்திதனைப் பேதித்து அகற்றாமல் 14
ஆகமயல் கொண்டுஅதுவாய் ஆகும்மதி என்னமதி.

பொல்லாக் கயவர் புகும்வழியில் செல்லாமல் 15
நல்லோர் அடங்கும்இடம் நாடாதது என்ன மதி.

*பதவுரை* : பொல்லாக் கயவர் – ; புகும் வழியில் – செல்லும் உலகியல் வழிகளில்; செல்லாமல் – ; நல்லோர் – ஞானிகள்; அடங்கும் – சித்த விருத்தி இன்றி மௌனம் அடையும்; இடம் – சூழ்நிலையை; நாடாதது – தேடி அமையாமலிருப்பது; என்னமதி –

*கருத்துரை* : உலகியல் சித்த விருத்தி உடையது. அதை அடக்கி மௌன நிலை பெறவேண்டும்.

கற்பிதத்தை மெய்யாகக் கண்டுகண்டு துன்பம்உறாது 16
அற்புதமாம் சின்மயம் நீ ஆகாதது என்ன மதி.

*பதவுரை* : கற்பிதத்தை – உன் கற்பனையில் தோன்றும் இன்ப துன்பங்கள் முதலிய உணர்வுகளை; மெய்யாக – உண்மையாக; கண்டு கண்டு – மீண்டும் மீண்டும் உணர்ந்து ; அற்புதமாம் – உலகியலுக்கு அப்பாற் பட்ட மிகப் புதுமையாகிய; சின்மயம் – பேரறிவு வடிவு ஆகிய பிரமமே ; நீ – நீ என்று அறிந்து ; ஆகாதது – அதுவே ஆகாமலிருப்பது; என்ன மதி –;

*கருத்துரை* : அவிச்சை வயப்பட்ட உனது கற்பனையில் துன்பம் உறாமல், நீ பிரமம் என்பதை அறிக.

சுட்டுஅற்ற வெட்டவெளி தோயாமல் நாமஉரு
சுட்டி அனுதினமும் துன்பம்உறல் என்னமதி. 17

*பதவுரை* : சுட்டு அற்ற – சுட்டிக் காட்ட முடியாத; வெட்டவெளி – வெறும் ஞான விசாலத்தை; தோயாமல் – சார்ந்து நில்லாமல்; நாம – பெயருடையனவும்; உரு – வடிவம் உடையனவும் (ஆகிய பொருள்களை) சுட்டி – அறிந்து விரும்பி; அனுதினமும் – ஒவ்வொரு நாளும்; துன்பம் உறல் – துன்பமடைவது; என்ன மதி.

*கருத்துரை* : அகண்டாகார பிரமத்தை உணராமல் பொருள்களை விரும்பித் துன்பம் அடைவது ஏன்?

நிற்க நிறுத்த நிலையாத நீசமனத்
துற்சங்கம் நீங்கி சுகம்ஆகாது என்னமதி. 18

*பதவுரை* : நிற்க – நிலையாக நிற்கும்படி; நிறுத்த – பிடித்து நிறுத்தவும்; நிலை யாத – ஒரு பொருளைப் பற்றி மாறாமல் சிந்திக்கும் தன்மை இல்லாத; நீசமனம் – இழிவான மனத்தோடு கூடி இருக்கும்; துற் சங்கம் – தீய நட்பில் இருந்து; நீங்கி – ; சுகம் ஆகாதது – ; என்ன மதி.

*கருத்துரை* : இடைவிடாது மாறும் மனத்தை விலக்கி ஆத்மாவின் வடிவமாகிச் சுகம் அடைய வேண்டும்.

தட்டத் தடுக்கத் தடைபடா நீசமனத்
துட்டப் பிசாசோடும் தோயுமதி என்னமதி. 19

*பதவுரை* : தட்ட, தடுக்க – அசையாமல் நிற்கும்படி தடுத்து நிறுத்தவும்; தடைபடா – தடையை மீறி ஓடுகின்ற ; நீசமனம் – இழிவான மனமாகிய; துட்டப்பிசாசோடு – ; தோயும் மதி – சார்ந்து இருக்கும் அறிவு; என்ன மதி.

*கருத்துரை* : மனத்தோடு சேர்ந்து அறிவும் நிலை இல்லாமல் கெடுகிறது.

கட்டப் பிடிக்கக் கடந்துஓடும் ஈனமனச்
சுட்டுஅகற்றித் தற்பதத்தைத் தோயாதது என்னமதி. 20

*பதவுரை* : கட்ட – கட்டிப் போடவும்; பிடிக்க – பிடித்து நிறுத்தவும்; (அதில் அடங்காமல்) கடந்து ஓடும் – மீறி ஓடுகின்ற; ஈனமனம் – தாழ்வான மனமாகிய; சுட்டு அகற்றி – எதையும் அடையாளம் கொண்டே உணரக்கூடிய நிலைமையை நீக்கி; தற்பதத்தை – எதையும் சாராமல் தானே நிற்கும் பிரமநிலையை; தோயாதது – சாராதது; என்ன மதி.

*கருத்துரை* : அளவு குறித்து அறியும் பொருள் எல்லாம் அழியக் கூடியது. அலவில்லாத பிரமமே அழியாதது.

நிர்க்குணனே முக்கணனாய் நின்றுசகம் காட்டியட்டு
நிர்குணனாய் நிற்பதுஎன நில்லாதது என்னமதி. 21

*பதவுரை*: நிர் குணனே – குணம் அற்ற பிரமமே; (அருட் குணத்தை மேற் கொண்டு) முக்கணனாய் – மூன்று கண்களை உடைய சிவபெருமானாக; சகம் – உலகத்தை; காட்டி ஜீவாத்மாக்களுக்குத் தோன்றும் தோற்றமாகக் காட்டி; அட்டு – அந்த ஜீவாத்மாக்கள் ஞானம் பெற்ற நிலையில் அந்தத் தோற்றத்தை விலக்கி; நிர்குணனாய் – மீண்டும் குணமற்றவனாய்; நிற்பது என – நிற்பது போல; நில்லாதது – நீயும் உலக விவகாரத்துக்கு மட்டும் தத்துவங்களைப் பயன்படுத்தி, உன் சொந்த விஷயத்தில் தத்துவத் தொடர்பில்லாத தனி ஆத்மாவாய்; நில்லாதது; என்ன மதி

கருத்துரை : நிர் குணபிரமம் சகுணப் பிரமமாய் நின்று காரிடம் செய்து மீண்டும் தன் நிலையை அடைகிறது. அது போல ஜீவாத்மாவும் செய்ய வேண்டும்.

சந்ததமும் சின்மயமாய்த் தான்இருந்தால் தொந்தவினை
வந்துஉறுமோ என்று மதியாது என்னமதி. 22

*பதவுரை* : சந்ததமும் – எப்பொழுதும்; சின்மயமாய் – ஞான நிறைவாய்; தானிருந்தால் – ; தொந்தவினை – கட்டக் கூடிய வினைகள்; வந்து உறுமோ – வந்து சேருமோ; என்று மதியாதது – ; என்ன மதி.

*கருத்துரை* : ஞான வடிவத்தை வினைகள் பற்ற மாட்டா.

கண்டஎல்லாம் பொய்ஆகக் கண்டிருந்தும் காண்பவையை
உண்டுஎனவே பற்றி உழலும் மதி என்னமதி. 23

*பதவுரை* : கண்ட எல்லாம் – உலகில் கண்டவை எல்லாம்; பொய்யாக – நிலைத்து நில்லாமல் மறைந்து விடுவதை; கண்டிருந்தும் – பார்த்து இருந்தும்; (அதனால் அறிவு பெறாமல்) காண்பவையை இப்பொழுது காணப்படுவனவற்றை; உண்டு எனவே – நிலையாக இருக்கும் என்று கருதி; பற்றி – அவற்றில் பற்றுவைத்து ; உழலும் மதி – வருந்துகின்ற அறியாமை; என்ன மதி.

*கருத்துரை* : உலகம் நிலையாதது. அதில் பற்று வையாதே.

## நெஞ்சோடு இரங்கல்

### காப்பு

165. மேலாம் துரியநிலம் விட்டுவிட யத்துஉழன்று
நாலா விதஅரந்தை நண்ணி, நண்ணி – மாலாகி

நின்றமனத் தோடுஇரங்கும் நீதி தனைஇதயம்
துன்றிஉறை ஐங்கரனே சொல்.

*பதவுரை* : இதயம் – என் இதயத்தில் ; துன்றி – சேர்ந்து; உறை – வாழும் ; ஐங்கரனே – விநாயகப் பெருமானே; (நான்) மேலாம் – உயர்ந்த தாகிய; துரிய நிலம் – துரிய உணர்வு நிலையை; விட்டு – ; விடயத்து – உலக விடங்களில் ; உழன்று – புலன்களால் சென்று விழுந்து வருந்தி; நாலா வித – பல வகையான; அரந்தை – துன்பத்தை; நண்ணி நண்ணி – மீண்டும் மீண்டும் அடைந்து ; மால் ஆகி – மயங்கி ; நின்ற மனத்தோடு – ; இரங்கும் – வருந்தும்; நீதி தனை – தன்மையை; சொல் – நீ முன் நின்று கூறியருள்வாயாக;

*கருத்துரை* : துரிய உணர்வுடன் பிரமத்தை உணர்தல் ஆனந்தம். அதை விட்டுப், பொருட்பற்றுக் கொள்ளுதல் துன்பம். இதுபற்றி நெஞ்சினோடு வருந்திக் கூறும் இப்பகுதிக்கு விநாயகப் பெருமான் துணை நிற்பாராக.

166. மஞ்சுஊரும் மஞ்சன்மகன் தனுவின் ஊறுஉற்ற
நஞ்சுஆரும் கண்டத்து நக்கனிடம் – எஞ்சாது
புல்லி இருந்தருளும் பூரணிநெஞ் சோடுஇரங்கல்
சொல்லும்என்றன் நாஇருந்து சொல்.

*பதவுரை* : மஞ்சு ஊரும் – மேகத்தை ஒத்த; மஞ்சன் – மைந்தனாம் திருமாலின்; மகன் – மகனாகிய மன்மதனின்; தனுவின் – கரும்பு வில்லால்; ஊறு உள்ள – எய்யப் பெற்ற; நஞ்சு – ஆலகாலவிடம்; ஆரும் நிறைந்த; கண்டத்து – கழுத்தை உடைய ; நக்கனிடம் – திசைகளை அடையாகக் கொண்ட சிவபெருமானது; இடம் – இடப்பக்கத்தில்; எஞ்சாது – நீங்காது; புல்லி – பொருந்தி ; இருந்தருளும் – ; பூரணி – உமாதேவியே; நெஞ்சோடு இரங்கல் – ; (என்ற இப்பகுதியை) சொல்லும் – ; என்றன் நா – என்னுடைய நாவில்; இருந்து – நீ வீற்றிருந்து; சொல் – இதனைச் சொல்வாயாக;

*கருத்துரை* : 'நெஞ்சோடிரங்கல்' என்ற செய்யுளைச் சொல்லும் எனக்கு உமாதேவி காப்பாவாள்.

## வெண் செந்துறை

சீரார் கழனித் திருநெல்லை அம்மைபதம்
சாராமல் என்னோ, சனித்து இறந்தாய் நெஞ்சகமே. 1

பதவுரை : நெஞ்சகமே – எனது சீவனே; சீர் ஆர் – புகழ் மிக்க; கழனி – கழனி வாயில் நகரில் உறையும்; திருநெல்லை அம்மை – ; பதம் – திருவடியை; சாராமல் – அடையாமல்; சனித்து – பிறந்து பிறந்து; இறந்தாய் – ;

*கருத்துரை* : தெய்வத்தைச் சாராமல் பிறப்பு நீங்காது.

இதுவே சிவம்என்றும் ஈது மனம்என்றும்
அதனால் விளங்கில்,உனக்கு அறிவுஎங்கே நெஞ்சகமே? 2

*பதவுரை* : நெஞ்சகமே – ; இதுவே சிவம் என்றும் – ; ஈது மனம் என்றும் இது மனத்தால் விளைந்த கற்பனை என்றும்; அதனால் – அந்தச் சிவத்தாலேயே (அந்தப் பிரமம் என்றுஅறிவதாலேயே) விளங்கில் – தெளிவாகப் புரியும் என்றால்; உனக்கு அறிவு – உன்னுடைய அறிவு என்பது; எங்கே – தனியாக உள்ளதா?

*கருத்துரை* : மயங்குவது மனம். அறிவது சிவம். நீயாக இருந்து அறிவது சிவமே.

பன்னாளும் காண்பவற்றைப் பற்றிநொந்து நைந்திருப்பது
எந்நாள் தொலைத்து,அறிவாய் என்றுஇருப்பாய் நெஞ்சகமே. 3

*பதவுரை* : நெஞ்சகமே –; காண்பவற்றைப் பற்றி – காணப்படும் பொருள்களிடம் பற்றுக் கொண்டு, அவற்றைப் பற்றியே; பன்னாளும் – பற்பல நாட்களும்; நொந்து – மனம் வருந்தி; நைந்து இருப்பது – கவலைப்பட்டுக் கொண்டிருக்கும் இயல்பை ; எந்நாள் – எந்த நாளில்; தொலைத்து – விட்டு; என்று – என்றைக்கு; அறிவாய் – அறிவே மயமாக இருப்பாய் – ;

*கருத்துரை* : காணப்படுபவை உருவம். அவை நிலை அல்ல; காண்பவன் நீ. நீ பிரமம். உன்னை உணர்ந்து இரு.

எந்நாளும் இன்பநிலை ஈதுஎன்று அறிந்திருந்தும்
பன்னாளும் துன்பப் படலாமோ நெஞ்சகமே. 4

*பதவுரை* : எந்நாளும் – எப்போதும்; இன்ப நிலை – இன்பமாக இருக்கும் நிலை; ஈது – இன்னது; என்று – ; அறிந்திருந்தும் – ; பன்னாளும் – பற்பல நாளாகவே; துன்பப் படலாமோ?

*கருத்துரை* : பிரம ஞானம் இன்பம், அதை மறந்தால் துன்பம்.

அச்சம் தவிர்ந்தநிலை யாம்அதனைச் சேராமல்,
துச்ச வினைபுரியத் துணிந்தனையே நெஞ்சகமே. 5

*பதவுரை* : நெஞ்சகமே – ; அச்சம் – வினையைப் பற்றிய பயம்; தவிர்ந்த – நீங்கிய; நிலையாம் – உண்மை நிலையாகிய; அதனை – பிரமத்தை; சேராமல் – சார்ந்து நில்லாமல்; துச்ச வினை – கீழான உலகியல் செயல்களை; புரிய – செய்ய; துணிந்தனையே கருதிவிட்டனையே, இது என்ன?

*கருத்துரை*: எல்லாம் செய்பவன் பிரமம். அதை உணராமல், நீ செய்வதாக எண்ணி, கன்மங்களைச் சேர்ந்துக் கொள்வது அறியாமை.

தன்மயம்ஈது என்றுஉணர்ந்தும் தான்அதுவாய் நில்லாமல்,
இன்னம் இடர்அடைவது என்னமதி நெஞ்சகமே. 6

*பதவுரை*: நெஞ்சகமே – ; ஈது – இந்தச் சீவன்; தன் மயம் – உண்மையில் பிரமம்; என்று உணர்ந்தும் – என்று நீ அறிந்து கொண்டிருந்தும் கூட; தான் – நீ ; அதுவாய் – அந்தப் பிரமமாய், நில்லாமல் – ; இன்னம் – இன்னமும்; இடர் அடைவது – துன்பம் உறுவது; என்ன மதி –அறிவுடைமை ஆகுமா?

*கருத்துரை* : சீவன் பிரம்ம மயமே – என்று அறிந்த அறிவு, பிரமமாய் நிற்றலில் கைகூட வேண்டும்.

ஈதுஎனது, யான்இவன்என்று எண்ணிஎண்ணி ஏழையர்போல்
தீதுஅடைந்தால் சீதளமும் சேருமதோ நெஞ்சகமே. 7

*பதவுரை* : நெஞ்சகமே – ; ஈது – இந்தப் பொருள்; எனது – ; இவன் – இந்தச் சீவன்; யான் – ; என்று; எண்ணி எண்ணி – எப்போதும் கருதி; ஏழையர் போல் – மூடரைப் போல; தீது அடைந்தால் – தீமையை அடையப் பெற்றால்; சீதளமும் – இறைவனது குளிர்ந்த அருளும்; சேருமோ – உனக்குக் கிடைக்குமோ? கிடைக்காது.

*கருத்துரை* : அத்வைத பாவனையே கருணை எய்துவிக்கும்.

பாச அடவிதனைப் பற்றிப் பயம்அடைந்தால்
மாசு தவிர்ந்தவெளி மன்னல்உண்டோ நெஞ்சகமே. 8

*பதவுரை* : நெஞ்சகமே – ; பாச அடவிதனை உலக பாசமாகிய காட்டை; பற்றி – பிடித்துக் கொண்டு; பயம் அடைந்தால் – அதைப் பற்றி அச்சம் கொண்டிருந்தால்; மாசு – குற்றம்; தவிர்ந்த – நீங்கிய; வெளி – ஞானமாகிய அகண்டாகார வெளியில்; மன்னல் – நிலை பெற்றிருத்தல் என்பது; உண்டோ – வாய்க்குமா? வாய்க்காது.

*கருத்துரை* : பாசம் உள்ள வரை அவிச்சை நீங்காது. அவிச்சை நீங்கினாலே பிரமநிலையை அடையலாம்.

வாசனைகள் யாதும்இலா மன்னுதுரி யம்தனிலே
தேசுபெற நிற்கத் திகைப்புஏனோ நெஞ்சகமே. 9

*பதவுரை* : நெஞ்சகமே – ; வாசனைகள் – மனப்பதிவுகள் ; யாதும் – ஒன்றும்; இலா – இல்லாத; மன்னு துரியம் தனிலே – நிலையான துரிய உணர்வு நிலையைப் பெற்று; தேசு பெற – ஞானமயமாக; நிற்க – நிற்பதற்கு; திகைப்பு – திகைப்பது; ஏன் – ?

*கருத்துரை* : துரிய உணர்வு அறிவு; ஆனந்தம்.

சங்கற்ப சாலம் தவிர்ந்தசம பாவனையில்
தங்கிப் பரமசுகம் சார்வதுஎன்றோ நெஞ்சகமே. 10

*பதவுரை* : சங்கற்பம் 'நான் செய்வேன்' என்று விரும்புவதாகிய; சாலம் – பொய்ச் செயல்; தவிர்ந்த – நீங்கிவிட்ட; சம பாவனையில் –இன்ப, துன்பங்களைச் சமமாக நோக்கும் உணர்வுடன்; தங்கி – நிலைத்திருந்து; பரமசுகம் – மேலான ஆனந்தத்தை; சார்வது அடைவது; என்று – ?

*கருத்துரை* : செய்பவன் சீவன் அல்ல; பிரமம். ஆதலால் சீவன் இன்ப, துன்பம் கொள்ள வேண்டுவதில்லை.

பாராமல் பார்க்கும் பரமவிழி பெற்றிருந்தால்
ஊரேது பேரேது உலகுஏது நெஞ்சகமே. 11

*பதவுரை* : நெஞ்சகமே – ; பாராமல் பார்க்கும் – கண்களால் பார்க்காமல் உயிர் உணர்வால் உணர்ந்து கொள்ளும்; பரமவிழி – துரிய உணர்வு; பெற்று – ; இருந்தால் – நம் செயலற்று இருந்தால்; ஊர் ஏது – நாம் சொந்த ஊர் என்று அபிமானம் கொள்ளுவதற்கு ஊர் எங்கே இருக்கிறது? பேர் ஏது – நாம் அடையவேண்டிய புகழ் என்ன இருக்கிறது? உலகு ஏது – உலகம் என்ற இடம் எங்கே இருக்கிறது? (இவை எல்லாம் பொய்யாய்ப் போகும். இவற்றின் பின்னே உண்மையான பொருளாகிய பரமமே தோன்றும்.)

*கருத்துரை* : துரிய உணர்வு பெற்றால், பொய் மறையும்; மெய் தோன்றும்.

இந்தப் பெரும்பிரமா காரநிலை எய்தாமல்
தொந்தப் பிராந்திநிதம் தோய்ந்தனையே நெஞ்சகமே 12

*பதவுரை* : நெஞ்சகமே – ; இந்த – ; பெரும் – எல்லாவற்றையும் தழுவிய; பிரம ஆகார நிலை – பிரமத்தின் வடிவத்தை; எய்தாமல் – அடையாமல்; தொந்த – கட்டுப்படுத்தக் கூடிய; பிராந்தி – மயக்கத்தை; நிதம் – நாள்தோறும்; தோய்ந்தனையே – அடைந்தாயே; அது ஏன்?

*கருத்துரை* : பிரமம் ஞான வடிவமாகும். அதை அடையாமல் மயக்கத்தில் ஆழ்வது ஏன்?

மோகாதி காரியங்கள் முற்றும் இறந்தபதத்து
ஓகோகோ சேராது உழல்கின்றாய் நெஞ்சகமே. 13

*பதவுரை* : நெஞ்சகமே – ; மோகஆதி – ஆசைமுதலான; காரியங்கள் – மாயா காரியங்கள்; முற்றும் – முழுதும்; இறந்த – கடந்த ; பதத்து – பிரமநிலையில்; சேராது – ; உழல்கின்றாய் – வருந்துகின்றாய். இது ஏன்?

*கருத்துரை* : மாயையைக் கடந்த பிரமத்தைச் சேர்வதே முறை.

ஐம்பொறியும் ஐம்புலனும் ஆறி அடங்கும்இடம்
நம்பிநம்பி நீஅடையும் நாள்என்றோ நெஞ்சகமே. 14

*பதவுரை :* ஐம்பொறியும் – ஐந்து இந்திரியங்களும் ; ஐம்புலனும் – ஐந்து உணர்வுகளும் ; ஆறி – விஷயங்களைச் சென்று பற்றாமல் ; அடங்கும் இடம் – செயலற்று இருக்கும் உணர்வு நிலையை ; நம்பி, நம்பி – மிகவும் நம்பி ; நீ அடையும் நாள் என்றோ –;

*கருத்துரை* : உயிர் உணர்வு முனைத்து இருந்தால் புலன் உணர்வு அடங்கும்.

பற்றாமல் பற்றும் பரமசுக நிட்டைதனைப்
பெற்றுஇருந்தால் என்னகுறை பேசாய்நீ நெஞ்சகமே. 15

*பதவுரை* : நெஞ்சகமே –; பற்றாமல் – மனத்தால் நினைக்காமல்; பற்றும் உயிர் உணர்வால் உணரும்; பரமசுகம் – மேலான ஆனந்தத்தைத் தரக்கூடிய; நிட்டைதனை – தியானயோக சமாதியை; பெற்று – ; இருந்தால் – செயலற்று இருந்தால்; என்ன குறை? நீ பேசாய் – நீ சொல்லுவாயாக.

*கருத்துறை ;* உணர்வு ஒன்றுவது பரமானந்தம்.

ஆன்மஉரு அகண்டம்; அந்தஉரு ஆகாமல்
தான்ஒருவன் போல்ஆய்ச் சலித்தனையே நெஞ்சகமே. 16

*பதவுரை* : நெஞ்சகமே – ; ஆன்ம உரு – ஆத்மாவின் வடிவம் ; அகண்டம் – நீள அகலம் முதலிய அளவுகள் இல்லாதது; அந்த உரு – ; ஆகாமல் – நீ ஆகாமல்; தான் ஒருவன் போல் ஆய் – நீ அளவுகளுக்கு உட்பட்ட ஒரு மனிதன் என்று நம்பி; சலித்தனையே – வருந்துகின்றாய்; இது ஏன்?

*கருத்துரை* : நீ உண்மையில் கண்டப் பொருளான மனிதன் அல்ல. அகண்டமான பிரமம்.

சச்சிதா னந்தத் தனிவீட்டில் வாழாமல்
அச்சுஉருவாம் காட்சிதனை நாடிநைந்தாய் நெஞ்சகமே. 17

பதவுரை : நெஞ்சகமே – ; சச்சிதானந்தம் – உண்மை, ஞானம், ஆனந்தம் என்ற வடிவாகிய; தனி வீட்டில் – தத்துவங்களின் தொடர்பு இல்லாத அகண்டாகார வெளியில்; வாழாமல் – பெரு வாழ்வு பெறாமல்; அச்சு – உயிர்களின்; உருவாம் – கற்பனையால் உண்டான; காட்சிதனை – வெறுந்தோற்றமாகிய உலகப் பொருள்களை; நாடி – விரும்பி; நைந்தாய் – வருந்துகிறாய்; இது ஏன்?

*கருத்துரை* : பிரமத்தை நாடினால் கட்டற்ற ஆனந்த வடிவாகலாம்.

சான்றாம் துரியமதைச் சாராமல் நாடோறும்
தோன்று விடயமதைச் சுட்டினையே நெஞ்சகமே. 18

*பதவுரை* : நெஞ்சகமே – ; சான்று ஆம் – எந்த விருப்பு வெறுப்பிலும் ஈடுபடாது, உயிர்க்கு வரும் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் சாட்சி மாத்திரமாக இருக்கும்; துரியம் அதை – துரிய உணர்வு நிலையை; சாராமல் – அடையாமல்; நாள் தோறும் – ; தோன்றும் – உன்னுடைய கற்பனையால் உலகப் பொருள்களிடம் தோன்றும் தொடர்பை (சம்பந் தத்தை) சுட்டினையே – விரும்புகின்றாய். இது ஏன்?

*கருத்துரை* : உலக விடயங்களில் ஏன் தொடர்பு கொள்கிறாய்? அவற்றுக்குச் சாட்சியாக மட்டும் இரு.

பாவனைகள் யாதும்இலாப் பானநிலை எய்தாமல்
தீவினையைச் சேர்வதுஎன்ன சிந்தனையோ நெஞ்சகமே. 19

*பதவுரை* : பாவனைகள் – கற்பனைகள்; யாதும் இலா – ஒன்றும் இல்லாத; பான நிலை – மேலான நிலையை (பிரமநிலையை) எய்தாமல் – அடையாமல்; (நன்மை, தீமைகளைக் கற்பித்து, விருப்பு, வெறுப்புக்கு இடம் கொடுத்து) தீவினையை – தீமையான கன்மத்தை; சேர்வது என்ன – ஈட்டிக் கொள்வது; என்ன சிந்தனையோ – என்ன அறிவுடைமையோ?

*கருத்துரை* : உணர்வுகள் கற்பனையின் விளைவு. உணர்வுக்கு இடம் கொடுத்தால் செயல் போன்றும். 'நம் செயல்' என்று செய்தால், வினை சேரும். எல்லாம் பிரமத்தின் செயல்.

தூங்காமல் தூங்கும் சுகநிலையில் செல்லாது
நீங்காமல் துச்சவினை நீபுரிந்தாய் நெஞ்சகமே. 20

*பதவுரை* : நெஞ்சகமே – ; தூங்காமல் தூங்கும் – இகத்தை மறந்து, பரத்தை உணர்ந்து கொண்டு நிட்டையில் இருக்கும்; சுக நிலையில் – ஆனந்த நிலையை; செல்லாமல் – அடையாமல்; நீங்காமல் – இடையறாமல் ; துச்சவினை – தாழ்வான செயல்களை; நீ புரிந்தாய்–;

*கருத்துரை* : ஞான விருப்பம் கொண்டு, துரிய நிட்டை புரியாமல், பொருட்பற்றுக் கொண்டு செயல் செய்வது வீண்.

காண்பவற்றை முப்பொழுதும் காட்சிஅறத் தோற்றுவிக்கும்
மாண்புடைய சித்தில் மடிவதுஎன்றோ நெஞ்சகமே. 21

*பதவுரை* : நெஞ்சகமே – ; காண்பவற்றை – உணர்கின்ற மெய்யுணர்வுத் தோற்றங்களை; முப்பொழுதும் – கால வேறுபாடு இல்லாமல் தொடர்ந்து உணரும்படி;

காட்சி அற – அது உணரப்படுவது; நான் அதை உணர்கின்றேன், நான் பெறுவது மெய்யுணர்வு – என்ற திரிபுடி இன்றி; தோற்றுவிக்கும் – தோன்றச் செய்யும்; மாண்பு உடைய – தனிச் சிறப்புடைய; சித்தில் – ஞானப் பொருள் ஆகிய பிரமத்தில்; மடிவது – நான் ஐக்கியமாவது; என்றோ?

*கருத்துரை* : நான் பிரமமே யாகி, ஞானமேயாக நிற்றல் வேண்டும்.

நித்தரங்க முந்நீர்போல் நின்று விளக்குஅறிவின்
வைத்த படிரமித்து வாழ்வதுஎன்றோ நெஞ்சகமே. 22

*பதவுரை* : நெஞ்சகமே – ; நீர்த் தரங்கமும் – கடலில் எழும் அலையும்; நீர் போல் – கடலும் போல; நின்று – எனக்குள் இருந்து; விளக்கு – உணர்த்துகின்ற; அறிவின் – பேரறிவுப் பொருளாகிய பிரமத்தில்; வைத்தபடி – தோன்றிய பொருளாக என்னை உணர்ந்து; ரமித்து – அதில் ஐக்கியமாகி; வாழ்வது என்று?

*கருத்துரை* : கடலும் அலையும் வேறு வேறு அல்ல; அது போல், பிரமமும் சீவனும் வேறு வேறு அல்ல.

திறிபுடிக்கும் சாட்சிஎனும் சின்மயமாய் நில்லாமல்,
குறிபிடித்து நாடோறும் குலைகுலைந்தாய் நெஞ்சகமே. 23

*பதவுரை* : நெஞ்சகமே – ; திரிபுடிக்கும் – காண்பவன், காணப்படுவது, காட்சி – என்ற திரிபுடிக்கும்; சாட்சி – உள்ளே நிற்கும் விகாரம் அற்ற பொருள் ஆகிய; சின்மயமாய் – ஞானமயமாய்; நில்லாமல்; நாள் தோறும் – ; குறி பிடித்து – வெளியே தோன்றும் அடையாளங்களை உறுதி எனப் பற்றிக் கொண்டு; குலை குலைந்தாய் – சிதைந்தாய். அது ஏன்?

*கருத்துரை* : பிரமம் சர்வ சாட்சி. பிரமம் நீ. இதை உணராமல் துன்புறுவது ஏன்?

அவத்தாத் திரய அதிட்டான மாய்இருந்து
பவத்தை அழிக்காமல் பாழ்பட்டாய் நெஞ்சகமே. 24

*பதவுரை* : நெஞ்சகமே – ; அவத்தாத் திரயம் – விழிப்பு, கனவு, உறக்கம் என்ற மூன்று உணர்வு நிலைகளுக்கும்; அதிட்டானமாய் – காரணமான ( விளை நிலமான) ஆத்ம நிலையை; இருந்து – உணர்ந்து; பவத்தை – பிறப்பை; அழிக்காமல் – போக்காமல்; பாழ்பட்டாய் – ; பிறவியை வீணாக்கிவிட்டாய்;

*கருத்துரை* : மூன்று உணர்வு நிலைகளும் ஆத்மாவில் தோன்றுகின்றன. ஆத்மா துரிய உணர்வு நிலையில் இருந்தால் அது தன்னை உணர்ந்து, பிரமமாகி நிற்கும்.

முக்குணமும் கெட்ட முதற்பாழைச் சாராமல்
அக்குணத்தோடு ஒன்றி அலைந்தனையே நெஞ்சகமே. 25

*பதவுரை* : முக்குணமும் – சத்துவம்,இராஜசம், தாமசம் என்ற மூன்று குணங்களும் கெட்ட – இல்லாத; முதல் பாழை – உருவம் இல்லாத பொருள்களுள் எல்லாம் பழைய பொருளை; சாராமல் – அடையாமல்; அக்குணத்தோடு – அவற்றள் ஏதாவது ஒரு குணத்துடன்; ஒன்றி – மாறி மாறிச் சேர்ந்து; அலைந்தனையே – உழல்கின்றாயே – ;

*கருத்துரை* : குணம் அற்ற பிரமத்தைச் சார்ந்தால், என்றும் அமைதியாக இருக்கலாம்.

**கோசம்ஐந்தும் தோன்றாக் குருதுரியம் சேராமல்**
**பாசம் எனும்வலைக்குள் பட்டுஉழன்றாய் நெஞ்சகமே. 26**

*பதவுரை* : நெஞ்சகமே – ; கோசம் ஐந்தும் – ஐந்து உடம்புகளும்; தோன்றா – செயற் படாத; குரு துரியம் – குரு உபதேசப் படியான துரிய உணர்வினை; சேராமல் – அடையாமல்; பாசம் எனும் வலைக்குள் – உறவினரிடம் பற்று என்ற வலையினுள்; பட்டு – அகப்பட்டு; உழன்றாய் – துன்புறுகின்றாய்.

*கருத்துரை* : ஆத்ம நிலையை அடைந்தால் பற்று மறையும். துன்பம் ஒழியும்.

**எல்லாம் இறந்தநிலை ஈதுஎன்று கண்டிருந்தும்**
**நில்லாமல் அந்தநிலை நீங்கினையே நெஞ்சகமே. 27**

*பதவுரை* : நெஞ்சகமே – ; எல்லாம் – உலகப் பொருள்கள், பற்றுகள், பாசம் முதலியவை அனைத்தும்; இறந்த நிலை – கடந்த பொருள் ; ஈது – இன்னது; என்று – ; கண்டிருந்தும் – அறிந்து வைத்தும்; அந்த நிலை – ; நில்லாமல் –; நீங்கினையே – ;

*கருத்துரை* : பிரமத்தை அறிந்தும், அந்த உணர்வில் நீ நிற்கவில்லை.

**ஆறாறின் மேலாய் அறிவுமயம் ஆகாமல்**
**ஓர்ஆறின் ஓடி உழல்வதுஎன்னோ நெஞ்சகமே. 28**

*பதவுரை* : நெஞ்சகமே – ; ஆறாறின் மேலாம் – முப்பத்தாறு தத்துவங்களைக் கடந்த; அறிவு மயம் – அறிவு வடிவாகிய பிரமம்; ஆகாமல்; ஓர் ஆறின் ஓடி – காமம், கோபம், உலோபம், மோகம், செருக்கு, பகைமை என்ற ஆறு உட்பகைகளின் வசமாகி; உழல்வது – துன்புறுவது; என்னோ – ஏன்?

*கருத்துரை* : நீ ஞானமே யான பிரமம் ஆகாமல், கற்பனையாகிய தத்துவங்களில் உழல்வது ஏன்?

**துன்பத் துவிதம் தொலைந்தசுக நிட்டையிலே**
**இன்பத்து உருவாய் இருப்பதுஎன்றோ நெஞ்சகமே. 29**

*பதவுரை* : நெஞ்சகமே – ; துன்பத் துவிதம் – துன்பத்தைத் தருகின்ற; துவிதம் – மெய்ப் பொருள் வேறு; நான் வேறு என்ற உணர்வு; தொலைந்த – நீங்கிய ; சுக

நிட்டையிலே – ஆனந்தம் தருகின்ற தியானத்தில்; இன்பத்து உருவாய் – அந்த ஆனந்தமே வடிவாக; இருப்பது என்று?

*கருத்துரை* : பிரமத்தின் வேறானது எதுவும் இல்லை; நானும் பிரமம் என்று உணர்ந்து, அவ்வுணர்வில் நிற்றலே ஆனந்த நிட்டை.

சீவே சுரசெகத்தைச் சித்துஒன்றாத் தோற்றுவிக்க,
பாவனையால் பேதித்துப் பற்றுகின்றாய் நெஞ்சகமே. 30

*பதவுரை* : நெஞ்சகமே – ; சித்து – ஞானமே யான பிரமம்; சீவ – உயிர்களையும்; ஈசுர – தெய்வத்தையும் ; செகத்தை – உலகத்தையும் ; ஒன்றா – ஏகமாகவே ; தோற்று விக்க – உணர்த்தவும்; (நீ உணர்ந்து, அந்த நிலையில் நில்லாது) பாவனையால் – மனத்தின் கற்பனையால்; பேதித்து – அவற்றை வேறுபடுத்திப் பார்த்து; பற்றுகின்றாய் அவற்றிடம் அபிமானம் கொள்கிறாய்;

*கருத்துரை* : ஞானத்தை விடுத்துக் கற்பனையில் ஈடுபடுவதால், பற்று உண்டாகின்றது.

ஆமை உறுப்பை அடக்குதல்போல் காண்பவையாம்
தீமைதனில் புலனைச் சேர்க்காதே நெஞ்சகமே. 31

*பதவுரை* : நெஞ்சகமே – ; ஆமை – ; உறுப்பை – தன் உறுப்புகளை; அடக்குதல் போல் – ஓட்டிற்குள் அடக்கிக் கொள்வதைப் போல்; காண்பவை ஆம் – நீ பார்க்கின்ற பொருள்களாகிய; தீமைகளில் – விடயங்களில் ; புலனை – ஐம்புலன்களை; சேர்க்காது – சேர்க்காமல் அடக்குவாயாக.

*கருத்துரை* : ஐம்புலன்களை விடயங்களில் செலுத்தாதே.

சத்தோடு அசத்தும் சதசத்தும் ஆகாத
சித்தம் பலவாம்; செகம்பொருளோ நெஞ்சகமே. 32

*பதவுரை* : நெஞ்சகமே – ; சத்தும் – உண்மைப் பொருளும்; அசத்தும் – உண்மையில்லாப் பொருளும்; சதசத்தும் – ஒரு கால் உண்மையாயும், ஒருகால் உண்மையில்லாததாயும் தோன்றும் பொருளும்; ஆகாத – அல்லாத; சித்தம் ; அறிவேயான பிரமம்; பல ஆம் – மேற்கண்ட பல பொருள்களாகவும் தோன்றுகின்றது (அங்ஙனம் வெறுந் தோற்றமாகின்ற) செகம் – உலகம்; பொருளோ – பொருட்படுத்தத் தக்கதோ?

*கருத்துரை* : பிரமத்தின் தோற்றமே பலவகைப் பொருள்களும். ஆதலால், அவற்றை நினையாது, பிரமத்தை உணர்க.

சித்துருவால் தோன்றும் செகம்தனைஈது, இன்னதுஎன்று
நித்தம்அவ தானம்செய்; நீஒழியாய் நெஞ்சகமே. 33

*பதவுரை* : நெஞ்சகமே; சித்து உருவால் தோன்றும் – அறிவுப் பொருள் ஆகிய பிரமத்தின் சாயையாய்த் தோன்றும்; செகம்தனை – உலகத்தை; நித்தம் – நாள் தோறும்; ஈது இன்னது என்று – இந்த உலகம் உண்மையில் பிரமமே என்று; அவதானம் செய் – திரும்பத் திரும்ப எண்ணிக் கொள்வதிலிருந்து; நீ ஒழியாய் – நீ நீங்காதே.

*கருத்துரை* : உலகம் பிரமத்தின் சாயை. அதை நாளும் உணர்க.

எத்தனையோ கோடி இயல்புஉரைத்தும் கேளாமல்
அத்தனையும் பாழா அயர்ந்தனையே நெஞ்சகமே. 34

*பதவுரை* : நெஞ்சகமே – ; எத்தனையோ கோடி – எண்ணற்ற முறை; இயல்பு உரைத்தும் – உனது உண்மையை எடுத்துக் கூறியும்கூட; அத்தனையும் – ; பாழாய் – வீணாகுமாறு; அயர்ந்தனையே – மறந்து விட்டாயே; இது என்ன?

*கருத்துரை* : நீ பிரமம் என்பதை மனத்தில் வை.

எட்டுஉருவும் ஈசன்மயம் என்றுஅறிந்து அந்தமதி
விட்டு,அவனைப் பற்றி விடுத லுற்றாய் நெஞ்சகமே. 35

*பதவுரை* : நெஞ்சகமே – ; எட்டு உருவும் – ஐந்து பெரும் பூதங்களும், சூரிய, சந்திரர்களும், இயமானனும் ஆகிய எட்டும்; ஈசன் மயம் – ஈசனே ; என்று அறிந்தும் – ; அந்த மதிவிட்டு – அந்த உணர்வில் நில்லாமல்; (மனத்தைப் பயன்படுத்தி) அவனைப் பற்றி – அவனை நினைத்தலும்; விடுதல் உற்றாய் – மறத்தலுமாக இருக்கின்றாய் ;

*கருத்துரை* : எல்லாம் அவனே என்று உணர்வில் நிறுத்துக. அதுவல்லாமல், அவனைச் சில வேளை நினைத்துப் பின் மறப்பது வீண்.

நிவாத தலதீபம் நிற்பதின் நில்லாமல்
குவால்அப் பிணிக்குரம்பை கூடிநைந்தாய் நெஞ்சகமே. 36

*பதவுரை* : நிவாத – ஒளி குன்றாத; தல தீபம் – வீட்டுத் திருவிளக்குப் போல, ஞானவொளி; நின்றதின் – உன்னிடத்திலேயே சுடர்விடுகின்றது; (அதில்) நில்லாமல் – ஐக்கியமாகி நிற்காமல் ; அக்குரம்பை – மாயை என்று நன்கு அறியப்பட்டதும், வினையின் பயனாகத் தோன்றியதுமான உன் உடம்பில்; குவால் பிணி – ஏராளமான நோய்கள்; கூடி வந்து வருத்த; நைந்தாய் – வலிமை குன்றினாய்.

*கருத்துரை*: உன் உடம்பிலேயே உறைகிறது அறிவொளி. அதில் கலந்து நில்லாமல், உடம்பால் வருந்துவது ஏன்?

சித்திரத்தி லேவரைந்த தீபம்போல் நில்லாமல்
கத்தித் தலைவெடிக்கக் கற்றனையே நெஞ்சகமே. 37

*பதவுரை* : நெஞ்சகமே – ; சித்திரத்திலே – ; வரைந்த – எழுதிய ; தீபம் போல் – விளக்கைப் போல்; நில்லாமல் – அசைவு இன்றி (மனச் சலனம் இன்றி) நில்லாமல்; தலை வெடிக்கக் கத்த – ; கற்றனையே – நீ கற்றவற்றை எல்லாம் பயன் படுத்துகின்றாயே;

*கருத்துரை* : கல்வி மௌனமாயிருந்து ஆத்மாவை உணர்வதற்காக. பிறர்க்கு உபதேசம் செய்து வயிற்றுப் பிழைப்புத் தேட வன்று.

அரவின் களம்அறுக்கில் ஐந்தலையின் கேட்டின்
பரமஉரு நீஅடையில் பாறும்ஐந்தும் நெஞ்சகமே. 38

*பதவுரை* : நெஞ்சகமே – ; ஐந்தலை அரலின் – ஐந்து தலையும் ஓர் உடம்பும் உடைய பாம்பின்; களம் அறுக்கில் – கழுத்தை அறுத்தால்; கேட்டின் – அப்பாம்பு, ஐந்து தலைகளின் கொடுமையும் நீங்கி இறப்பது போல்; நீ – சீவாத்மா ஆகிய நீ ; பரம உரு அடையில் – உன் உண்மைச் சொரூபமான, மேலான ஆத்ம சொரூபத்தைப் பெற்றால்; ஐந்தும் – ஐம்புலன்களும்; பாறும் – அழியும்.

*கருத்துரை* : ஆத்மாவை அடைந்தால், ஐம்புலன்கள் செயலற்றுப் போகும்.

தத்தாய பிண்டமதில் சார்ந்தசலம் போல்துரிய
வத்தில் அடங்கியதாய் வாழ்வதுஎன்றோ நெஞ்சகமே. 39

*பதவுரை* : நெஞ்சகமே – ; தத்து ஆய – தானமாகக் கொடுக்கப்படும் ; பிண்டம் அதில் – பொருளோடு; சார்ந்த – சேர்ந்து வார்க்கப்படுகின்ற; சலம் போல் – தண்ணீர் போல்; துரியவத்துவில் – துரிய உணர்வான ஞானாகாரத்தில்; அடங்கியதாய் – அடங்கிய நிலையில்; வாழ்வது என்று – ;

*கருத்துரை* : துரிய உணர்வு பெற்று, அந்த உணர்வாகவே இருக்க வேண்டும்.

எண்ணெய் இருப்புஅற்ற எழில்தீபம் போலவும்நீ
எண்ணரிய இச்சைதவிர்ந்து என்றுஒழிவாய் நெஞ்சகமே. 40

*பதவுரை* : நெஞ்சகமே – ; எண்ணெய் – ; இருப்பு அற்ற – இல்லாமற் போன; எழில் தீபம் போலவும் – விளக்கைப் போல்; நீ – ; எண் அரிய – கணக்கில் அடங்காத; இச்சை – விருப்பங்களைக் கொள்ளுதலினின்றும்; என்று ; தவிர்ந்து ஒழிவாய் – நீங்குவாய்?

*கருத்துரை* : இச்சையால் வருவது மனச் சலனம். அச் சலனம் இல்லாத நிலையே ஆத்ம நிலை.

இல்லாது இறக்கும் இழிகுரம்பை வாசனையைப்
புல்லாது மெய்யுணர்வைப் புல்லல்என்றோ நெஞ்சகமே. 41

*பதவுரை* : இல்லாது – நிலையில்லாமல்; இறக்கும் – ; இழி குரம்பை – இழிவான உடம்பின் மீது செல்லும்; வாசனையை – பிறவி தோறும் வைத்த பற்றின் மனப் பதிவை; புல்லாது – கொள்ளாமல்; மெய்யுணர்வை – பிரமஞானத்தை; புல்லல் – அடைவது ; என்று – ;

*கருத்துரை* : நிலையாத உடலை விட்டு நிலைத்த பிரமத்தை அடைய வேண்டும்.

சும்மா இருந்துசுகம் தோயாமல், தன்நினைவால்
அம்மா, சுகம்அடைந்தோர் ஆர்உரைப்பாய் நெஞ்சகமே. 42

*பதவுரை* : நெஞ்சகமே – ; சும்மா இருந்து – மனச் சலனம் இன்றித் துரிய உணர்வுடன், ஆத்ம நிலையில், தன் செயலற்று இருந்து; சுகம் தோயாமல் – ஆனந்தம் அடையாமல்; தன் நினைவால் – சீவாத்மா என்ற தனது நினைவு, செயல்களுடன்; சுகம் அடைந்தோர் – ; ஆர் –யார்? (என்று) உரைப்பாய் – சொல்வாயாக;

*கருத்துரை* : ஆத்மாவின் தனித்த நிலையே ஆனந்தம்.

போராட்டப் பட்ட புரம்எடுத்த இவ்வரையில்
சீராட்டில் என்னசுகம் சேர்ந்தனைநீ நெஞ்சகமே. 43

*பதவுரை* : நெஞ்சகமே – ; போராட்டப்பட்ட – பிறப்பு, வாழ்வு, இறப்பு ஆகிய அனைத்தும் போராட்டமாக உள்ள; புரம் எடுத்த – மாமிசக் கோட்டை ஆகிய உடம்பை மேற்கொண்டு பிறக்கும்; இவ் வரையில் – காலம், இடம், குணம், செயல் முதலியவை வரையறுக்கப்பட்ட ஜீவ வாழ்வில்; சீராட்டில் – உடம்பையும் மனத்தையும், அறிவையும் பாராட்டிப் பேணுவதில்; என்ன சுகம் சேர்ந்தனை – முடிவான இன்பம் என்ன கண்டாய்? ஒன்றும் இல்லையே;

*கருத்துரை* : பிறப்பு மாயை. இதன் சாதனங்களை வளர்ப்பதால் பயன் இல்லை.

இல்லாளும் இல்லத்து இருநிதியும் ஈன்றமகவு
எல்லாம் மறந்திருப்பது என்றுஉரையாய் நெஞ்சகமே. 44

*பதவுரை* : நெஞ்சகமே – ; இல்லாளும் – மனைவியையும்; இல்லத்து – வீட்டில் தொகுத்துவைத்த; இரு நிதியும் – மிக்க செல்வத்தையும்; ஈன்ற மகவு – பெற்ற பிள்ளைகளையும்; (ஆகிய) எல்லாம் – அனைத்துத் தொந்தங்களையும், நினைத்துக் கவலை கொள்ளும் மனத்தை நீக்கி; இருப்பது என்று – ;

*கருத்துரை* : பற்றுக்களைக் கொள்ளும் மனத்தை வெல்வது பிரமஞானம் பெறுதற்கு முதற்படி.

பந்தம்நமக்கு உண்டுஅதனைப் பாற்றமுத்தி வேண்டும்எனும்
இந்த நினைவுஇரண்டும் என்றுஅயர்ப்பாய் நெஞ்சகமே. 45

*பதவுரை* : நெஞ்சகமே – ; நமக்கு – ; பந்தம் உண்டு; அதனை – ; பாற்ற – போக்குவதற்கு; முத்தி வேண்டும் – நாம் முத்தி பெற வேண்டும்; என்னும் – ; இந்த இரண்டு நினைவும்; (மனத்திலே எழுபவை ஆதலின், அவற்றை) என்று – ; அயர்ப்பாய் – மறப்பாய்?

கருத்துரை : ஆத்மாவுக்குப் பந்தமும் இல்லை; முத்தியும் இல்லை ஒன்றை உள்ளது என்றும்; மற்றொன்றை, இனிமேல் வரவேண்டும் என்றும் நினைப்பது மனத்தின் கற்பனை.

மறப்பதுவே நல்லதுஎன மாணவர்தாம் சொல்ல
அறத்தினமும் நீநினைத்தே அல்லல்உற்றாய் நெஞ்சகமே. 46

*பதவுரை* : நெஞ்சகமே – ; மறப்பதுவே – ; நல்லது என – ; மாணவர் தாம் மாணவர்கள்; சொல்ல – மறைமுகமாகத் தெரியப்படுத்தியும்; நீ – ; (அதன் நன்மையை அறியாமல்) தினம் – ; அற – எதையும் முழுமையாக; நினைத்தே – நினைவில் கொண்டு ; (எப்பொழுதும் எண்ணத்தில் ஈடுபட்டு) அல்லல் உற்றாய் – துன்பம் அடைகின்றாய்.

*கருத்துரை* : மனம் பல நினைவுகளில் அலைவதனால் துன்பமே.

எல்லாம் மறந்துவிட்டால் இவ்வுடலம் நீங்கும்எனின்
இல்லம்இலாப் பித்தன் இருப்பதுபோல் நெஞ்சகமே. 47

*பதவுரை* : நெஞ்சகமே – ; எல்லாம் – ; மறந்து விட்டால் – ; இவ்உடலம் – இந்த உடம்பு; நீங்கும் எனில் – பற்றிய எண்ணம் நீங்கிவிடும்; (அப்பொழுது) இல்லம் இலா – வீடு இல்லாத; பித்தன் – ; இருப்பது போல் –; நீ இருப்பாய் ;

*கருத்துரை* : மனம் இறந்தால் தேகாபிமானமும் நீங்கும்.

முற்றும்மல மாயிருக்கும் மூடமதாம் இவ்வுடலில்
சற்றும் விரத்திஉண்டாய்ச் சார்கிலையே நெஞ்சகமே. 48

*பதவுரை* : நெஞ்சகமே – ; முற்றும் – முழுவதும்; மலமாய் இருக்கும் – அழுக்கு மயமாயிருக்கும்; மூடம் அது ஆம் – சடப் பொருளான; இவ் உடலில் – ; சற்றும் – ஒரு சிறிதும்; விரத்தி – வெறுப்பு; உண்டாய் – கொண்டு ; சார்கிலையே – ஞான குருவினிடம் சேராதது ஏன்?

*கருத்துரை* : நீ அறிவுப் பொருள்; உடம்போ அறிவற்ற சடப் பொருள். அதில் நீ பற்றுக் கொள்ளுவது ஏன்?

செய்ததுவே செய்யத் தினம் துணிந்து செல்வதுவே
உய்யும் வழிஎன்று ஒருப்பட்டாய் நெஞ்சகமே. 49

*பதவுரை* : நெஞ்சகமே – ; செய்துதுவே – ஒரு நாள் செய்த சாதாரணச் செயல்களையே; தினம் – நாள் தோறும்; செய்ய – செய்து கொண்டு, காலம் கழிக்கலாம் என்று; துணிந்து – முடிவு செய்து; செய்வதுவே – அவ்வாறு செய்வதே; உபாயம் என்று; (அறியாமையால்) ஒருப் பட்டாய் – மனம் ஒப்பி நடந்து கொள்கின்றாய்; இது என்னே?

*கருத்துரை* : வாழ்வில் உவர்ப்புக் கொள்ளாதது ஏன்?

பத்துத் திசையும் பதினான்கு உலகும்மற்றும்
சித்துஅசித்தும் சிற்சடமும் சிவரூபம் நெஞ்சகமே. 50

*பதவுரை* : நெஞ்சகமே –; பத்துத் திசையும் – ; பதினான்கு உலகும் – ; மற்றும் – ; சித்து – அறிவுள்ள சீவராசிகளும்; அசித்தும் – அறிவு அற்றவையும்; சித் – அறிவு விலாசம் உடைய தெய்வங்களும்; சடமும் – அறிவற்ற அஃறிணைப் பொருள்களும்; (ஆகிய அனைத்தும்) சிவரூபம் – சிவனின் பல்வேறு தோற்றங்களே (என்று அறிக);

*கருத்துரை* : எல்லாம் சிவமயம்.

பண்ணவிதன் பாதநிழல் பற்றிஅது வாய்இருக்கின்
எண்ணரிய இச்சை இரிந்துஓடும் நெஞ்சகமே. 51

*பதவுரை* : நெஞ்சகமே – ; பண்ணவிதன் – சத்தியின் ; பாத நிழல் – திருவடிகளை; பற்றி – சார்ந்து; அது வாய் இருக்கின் – அதுவாகவே இருந்தால்; எண்ணரிய – (அதுவரை வந்து பற்றிய) கணக்கற்ற ; இச்சை – விருப்பங்கள்; இரிந்து ஓடும் – விரைந்து நீங்கும்.

*கருத்துரை* : தெய்வத்தின் மேல் இச்சை கொண்டால், பிற இச்சைகள் நீங்கும்.

என்இதயத் துள்ளே இருந்ததிரு நெல்லைபதத்து
உன்நினைவும் நீயும் ஒழிவதுஎன்றோ நெஞ்சகமே. 52

*பதவுரை* : என் இதயத்துள்ளே – என் சித்தத்தின உள்ளே; இருந்த – வீற்றிருக்கும்; திரு நெல்லை – திருநெல்லை அம்மையின் ; பதத்து – திருவடிச் சார்பினால் ; உன் நினைவும் – உன்னிடம் அலைபாயும் எண்ணங்களும்; நீயும் – ; ஒழிவது – நீங்குவது; என்று? – ;

*கருத்துரை* : மனத்தை வெல்ல வேண்டும்.

அண்டம்எலாம் தோற்றி அழிந்தபத மாயிருந்தால்
பிண்ட உபாதிஅன்றே பேராதோ நெஞ்சகமே. 53

*பதவுரை* : நெஞ்சகமே – ; அண்டம்– உலகங்கள்; எலாம் – அனைத்தும்; தோற்றி – உண்டாகி; அழிந்த – மறைந்த; பதத்து – சங்கற்பம் யாருடையதோ; அவரிடம்; (அவராக ஆகி) இருந்தால் – அமர்ந்திருந்தால்; பிண்ட உபாதி – உடம்பால் வரும் துன்பங்கள்;

அன்றே –அப்பொழுதே; பேராதோ – மாறாதோ?

*கருத்துரை*: ஆத்மாவின் சங்கற்பம் இந்த உலகம். நீ ஆத்மா என்பதை உணர்ந்து, அந்நிலை அடைந்தால் உலகமும் இல்லை; உடம்பும் இல்லை.

எல்லா உலகும் இறந்தும்இற வாதபதம்
செல்லாது, காண்பவற்றில் சிக்கினையே நெஞ்சகமே 54

*பதவுரை* : நெஞ்சகமே – ; எல்லா உலகும் – ; இறந்தும் – அழிந்த பிறகும் கூட; இறவாத – தான் அழியாத; பதம் – ஆத்மா என்ற உண்மை நிலையில்; செல்லாது – செல்வதற்கான தவத்தைச் செய்யாமல்; காண்பவற்றில் – நீ காணும் பொருளின் மீது வைத்த பற்றில்; சிக்கினையே – அகப்பட்டாயே; இது என்ன?

*கருத்துரை* : அழியாப் பொருளை விட்டு, அழியும் பொருளில் பற்று ஏன்?

தோன்று சிசுஉணர்வு துகள்அற்றுக் காணுதலின்
மான்றஉரு வம்தோன்ற வருவதென்றோ நெஞ்சகமே. 55

*பதவுரை* : நெஞ்சகமே – ; தோன்று சிசு – பிறந்த குழந்தை; உணர்வு – தனது உணர்வில்; துகள் அற்று – தத்துவ மாசுகள் இல்லாமல்; காணுதலின் – காண்பதைப் போல்; (அதனுடைய காட்சியில் கிடைக்கும்) மாற்று உருவம் – அனைத்து உருவத்திலும் கலந்து நிகழும் "வடிவற்ற வடிவம்"; தோன்ற – எனக்குக் காட்சிப்பட ; வருவது என்று? – ;

*கருத்துரை* : தத்துவக் கலப்பு இல்லாமல் தூயநிலையில் காணுதல் வேண்டும். அக் காட்சியில், காண்பவன், காணப்படுவது, காட்சி – என்ற திரிபுடி இல்லை.

தோற்றுஉருவை ஈதுஎனவே சுட்டும்மய லாம்அறிவை
மாற்றி அகண்டசுக வாழ்வுஅடைவாய் நெஞ்சகமே. 56

*பதவுரை* : நெஞ்சகமே – ; தோற்று உருவை – காணப்படும் பொருளை; ஈது – இது இன்னது; எனவே – என்று; சுட்டும் – நிறம், அளவு, குணம், செயல் ஆகியவற்றால் சுட்டி அறிகின்ற; மயல் ஆம் அறிவை – மயங்கிய அறிவை; மாற்றி – ; எல்லாம் பிரமமாகக் கண்டு; அகண்ட சுக வாழ்வு – பேரானந்த வாழ்வில்; அடைவாய் – ;

*கருத்துரை* : சுட்டியறியும் பொருள் அழியும். அதில் பற்று வைத்தல் துன்பம். எதிலும் பிரமத்தைக் காண்.

விட்டேன் உலகம்எனும் வீணான வாசனையும்
கெட்டுஇலங்கும் மன்னைஅடி கிட்டுவையோ நெஞ்சகமே. 57

*பதவுரை* : நெஞ்சகமே – ; உலகம் விட்டேன் – உலகப் பற்றை நீக்கி விட்டேன்; எனும் – எனினும்; வீணான – அவற்றைப் பற்றி என் அறிவில் பதிந்த குப்பையான; வாசனையும் – மனப் பதிவும்; கெட்டு – நீங்கி; இலங்கும் – எங்கும், எதிலும் விளங்கும்; மன்னை – நிலைத்த பொருளாகிய பிரமத்தை; அடி கிட்டுவையோ – நெருங்குவாயோ?

*கருத்துரை* : பற்றும், வாசனையும் நீங்க வேண்டும்.

எத்திக்கும் தானாய் இறந்துபிற வாதுஅடைந்தால்
செத்துப் பிறத்தல் அன்றே தீராதோ நெஞ்சகமே. 58

*பதவுரை* : நெஞ்சகமே – ; எத்திக்கும் – எல்லாத் திசைகளும்; தானாய்– வியாபகமாய்ப் பரவி; இறந்து, பிறவாது – பிறப்பு, மரணம் இலவாமல் இருக்கும் பொருளாகிய பிரமத்தை; அடைந்தால் – ; அன்றே –அப்பொழுதே; செத்துப் பிறத்தல் – உன் பிறவி வட்டம்; தீராதோ?–;

*கருத்துரை* : நீ பிரமமாய்விட்டால் பிறவி இல்லை.

ஒன்றோடும் தாக்குஅற்று உறுதுரியா தீதமதில்
சென்றுசிவம் ஆகஎந்நாள் செல்லுமதோ நெஞ்சகமே. 59

*பதவுரை* : நெஞ்சகமே – ; ஒன்றோடும் – உலகப் பொருள் ஒன்றினோடும்; தாக்கு – தொடர்பு; அற்று – இல்லாமல்; உறு – மிக்க; துரியாதீதம் அதில் – துரியாதீத உணர்வு நிலையில்; சென்று – (இருந்து) சீவநிலை கடந்து; சிவம் ஆகி – சிவமாகி நிற்பதற்கு; எந்நாள் செல்லும் –எத்தனை நாள் ஆகும்?

*கருத்துரை* : பற்றற்று இருக்கும் துரியாதீத நிலை வருமா?

மெய்உருவை நாளும் விரும்பாது இருந்தஇந்தப்
பொய்உருவால் பட்டதுயர் போதாதோ நெஞ்சகமே. 60

*பதவுரை* : நெஞ்சகமே – ; நாளும் – நாள் தோறும்; மெய் உருவை – உண்மைப் பொருளை; விரும்பாது இருந்த – ; இந்த – ; பொய் உருவால் – பொய்யான சீவ வாழ்க்கையால்; பட்ட துயர்– அனுபவித்த துன்பம் – போதாதோ;

*கருத்துரை* : சீவாத்மாவின் கற்பனையான தத்துவத் தொடர்பு, அது மெய்யுணர்வு பெறத் தடையாக உள்ளது.

பன்னாளும் காண்பவற்றைப் பற்றிப் படும்துயரம்
என்னால் இனிச்சகிக்க ஏலாதே நெஞ்சகமே 61

*பதவுரை* : நெஞ்சகமே – ; காண்பவற்றை – காண்கின்ற பொருள்களை; பற்றி – பற்றுக் கொண்டு; பன்னாளும் – பல நாட்களும்; படும் – நான் அனுபவிக்கும்; துயரம் – துயரத்தை; என்னால் –; இனி – ; சகிக்க –' பொறுக்க; ஏலாது – இயலாது.

*கருத்துரை* : பற்றுள்ளவரை துயரமே.

எந்நாள் சிவவடிவை யான்மறந்தது அன்றுமுதல்
உன்னோடும் காண்பவற்றை உற்றுஉழன்றேன் நெஞ்சகமே. 62

*பதவுரை* : நெஞ்சகமே – ; சிவ வடிவை – சிவனுடைய வடிவத்தை; எந்நாள் – ; நான் மறந்தது – நான் மறந்தேனோ – ; அன்று முதல் – ; உன்னோடு – உன்மூலம் ; காண்பவற்றை – ; உற்று – விரும்பி; உழன்றேன் – துன்புற்றேன்.

*கருத்துரை* : இறையன்பு இல்லாவிடின் பற்று மிகும்.

இற்றைவரை காண்பவையை எய்திஎய்தி என்னசுகம்
பெற்றனை? சொன் னால்அறியாய் பேதைமல நெஞ்சகமே. 63

*பதவுரை* : பேதை – அறியாமை உடைய; மல – தீய குணம் என்ற அழுக்கைக் கொண்ட; நெஞ்சகமே – ; இன்றைவரை – இன்று வரை; கண்பவையை – நீ காணும் பொருளை எல்லாம்; எய்தி – விடாமல் பெற்று; (நீ) என்ன சுகம் பெற்றனை? என்ன சுகம் பெற்றாய்? (ஒன்றும் இல்லை;) சொன்னால் – பற்றைவிடுக என்று சொன்னால்; அறியாய் –;

*கருத்துரை* : பொருளால் வரும் சுகம் நிறைவு தராத சுகமே.

எல்லாம் இறந்த திருநெல்லை இணையடியைப்
புல்ல அகம்இதமும் போகாதோ நெஞ்சகமே. 64

*பதவுரை* : நெஞ்சகமே – ; எல்லாம் – அனைத்துப் பொருள்களையும்; இறந்து – கடந்த; திருநெல்லை – ; அடியிணையை – திருவடிகளை ; புல்ல – சார்ந்தால்; அகம் இதமும் – உடம்பே ஆத்மா என்னும் அபிமானமும்; போகாதோ? – ; போய் விடும்.

*கருத்துரை* : திருநெல்லை அம்மை ஆத்ம ஞானம் தருவாள். அப்போது ஆத்மா, தோன்றும் உலகம் அல்ல; அது வெளியில் இல்லை. 'ஆத்மா நான்' என்று விளங்கும்.

வித்தைச் செருக்குஅடைந்து, வீணாள் கழிக்கும்மருள்
புத்திக் குருடர்நெறி போகாதோ நெஞ்சகமே. 65

*பதவுரை*: நெஞ்சகமே – ; வித்தைச் செருக்கு – கல்வியறிவு பெற்றுள்ளோம் என்ற கர்வத்தை; அடைந்து – உடையவராய்; வீணாள் கழிக்கும் – வாணாட்களை வீணாகக் கழிக்கும்; புத்திக் குருடர் – அறிவிருந்தும் விவேகம் இல்லாதவரின்; நெறி – வழியில்; போகாதே –

*கருத்துரை* : ஆத்ம ஞானம் இல்லாதவரது கல்வி பயனற்றது.

நிழல் நெருப்பாய்க் கண்ட நினைவு தவிராதே
விழலுக்கு நீர்இறைக்கும் வேலையுற்றாய் நெஞ்சகமே 66

*பதவுரை* : நெஞ்சகமே –; நிழல் நெருப்பாய் – நெருப்பின் அருகில் நிழலில் இருந்தாலும், அதன் வெம்மை படுவது போல்; (பொருள் இல்லா விட்டாலும் அதை) கண்ட– ஒரு முறை பார்த்த; நினைவு – ; தளராதே – நீங்காமல்; விழலுக்கு நீர் இறைக்கும் வேலை – பயனின்றி உழைத்தலை; உற்றாய் – மேற்கொண்டாய்;

*கருத்துரை* : வாசனையும் ஆசையை உண்டாக்கும்.

நாரிஇலம் பூமிதனம் நாசம்உறும் என்றஎலாம்
வாரியினில் பெய்த மழைஆன நெஞ்சகமே. 67

*பதவுரை* : நெஞ்சகமே – ; நாரி – மனைவி; இலம் – வீடு; பூமி – நிலம்; தனம் செல்வம்; (முதலியவை) நாசம் உறும் – அழியும்; என்ற எலாம் – என்று உனக்குக் கூறிய அறிவுரைகள் யாவும்; வாரியினில் – கடலில் பெய்த – ; மழையான – மழை போல், பயனில ஆயின.

*கருத்துரை* : பொருள்களும் வாழ்வும் நிலையற்றவை. இதை மறத்தல் கூடாது.

ஓயாது உழலும்மதி ஓய்வதுஇலை உன்றனக்கு
வாயால் பிதற்றமதி வந்ததுஎன்னோ நெஞ்சகமே. 68

*பதவுரை* : நெஞ்சகமே – ; ஓயாது – இடைவிடாமல்; உழலும் – எண்ணங்களில் அகப்பட்டுப் பல உணர்ச்சிகளுக்கு ஆளாகும் போக்கை நீ நிறுத்த வில்லை; (அவ்வாறு இருக்க) உன் தனக்கு –; வாயால் – ; பிதற்ற – பிறர்க்கு உனது கல்விப் பகட்டைக் காட்ட; மதி வந்தது – அறிவு தோன்றியது என்னே – எதற்கு?

*கருத்துரை* : பேசிப் பயனில்லை. மனத்தை அடக்க வேண்டும்.

பொல்லாத இக்காயம் புல்லும்மதி வாசனைகள்
எல்லாம் இறந்தஎன என்றுஇருப்பாய் நெஞ்சகமே. 69

*பதவுரை* : நெஞ்சகமே – ; பொல்லாத – தீய உணர்வுகளுக்குக் காரணமான ; இக்காயம் – இந்த உடம்பு; புல்லும் மதி – இதனைச் சார்ந்த அறிவு; வாசனைகள் – மனப் பதிவுகள்; (முதலிய) எல்லாம் – ; இறந்த – செயலற்று விட்டன; என – என்ற மன நிறைவுடன்; என்று இருப்பாய்? – ;

*கருத்துரை* : உடம்பைக் கடந்து உணர்தலே உண்மையான இன்பம்.

காரார் குழல்மடவார் கற்பித்த ஏவல்செய்து
தூராக் குழிதூர்க்கத் தோன்றினையே நெஞ்சகமே. 70

*பதவுரை* : நெஞ்சகமே – ; கார் ஆர் – மேகம் போன்ற; குழல் – கூந்தலை உடைய; மடவார் – பெண்கள்; கற்பித்த – தம்மனம்போனபடி கூறிய; ஏவல் செய்து – பணிகளைச் செய்து; தூராக் குழி – என்றும் நிரப்ப முடியாத வயிற்றை; தூர்க்க – நிரப்ப; தோன்றினையே –பிறந்தாயே!

*கருத்துரை* : காமம் துய்ப்பதும் பசி தீர உண்பதுமே வாழ்க்கை அல்ல.

விண்ஆதி கண்ட விசுவம்இற வாதுஇருந்த
கண்ணாம் துரியமதைக் கையிகழ்ந்தாய் நெஞ்சகமே. 71

*பதவுரை* : நெஞ்சகமே – ; விண் ஆதி – ஆகாயம் முதலிய ஐம்பூதங்களையும்; கண்ட – ஒருங்கே கண்ட ; விசுவம் – எங்கும் ஒன்றேயான பரப்பு; இறவாது இருந்த – நீங்காதிருந்த; கண்ணாம் – உணர்வாகிய; துரியம் அதை – துரிய நிலையை; (உணர்ந்தும், அதனை) கையிகழ்ந்தாய் – புறக்கணித்தாய்.

*கருத்துரை* : ஒன்று எனக் காணும் உணர்வே மேலானது.

ஆரணங்கள் ஈதுஎன்று அறிவரிய தென்கழனிப்
பூரணியை நீமறந்து புண்பட்டாய், நெஞ்சகமே. 72

*பதவுரை* : நெஞ்சகமே – ; ஆரணங்கள் – வேதங்கள்; ஈது என்று – இன்னது என்று; அறிவு அரிய – துணிந்து அறிய முடியாத; தென் கழனி – ; பூரணியை – நிறை வியாபியான அம்மையை; நீ மறந்து –; புண்பட்டாய் – துன்பம் அடைந்தாய்;

*கருத்துரை* : திருநெல்லை அம்மை பூரணப் பொருள். அவளை மறந்து, அளவுக்குட்பட்டவையும் நிலையற்றவையுமான வடிவமுடைய பொருள்களின் மீது பற்றுக் கொண்டால் துன்பமே.

அல்லும் பகலும் அகம்இதம்தீர் என்றதனால்
கல்லும் கரையாதோ கடைப்பட்ட நெஞ்சகமே. 73

*பதவுரை* : கடைப்பட்ட – தாழ்வான; நெஞ்சகமே – ; அல்லும் – இரவும்; பகலும் – ; (நீ) அகம் இதம் தீர் – சீவன் என்ற எண்ணத்தை விலக்கு; என்றதனால் – என்று நான் கூறியதனால்; கல்லும் – ; கரையாதோ? – ;

*கருத்துரை* : நீ சீவன் அல்ல; ஆத்மா. இதை மறப்பது ஏன்?

இல்லம் துறந்து சுகத்துறவை எய்தாமல்
அல்லற் படும்இயல்பை யார்விதித்தார் நெஞ்சகமே. 74

*பதவுரை* : நெஞ்சகமே – ; இல்லம் – வீட்டையும் உறவையும்; துறந்து – ; சுகத் துறவை – ஆனந்தமான மனநிலையில் இருக்கும் துறவு வாழ்வை; எய்தாமல் – மேற்கொள்ளாமல்; அல்லல் படும் – துன்பமுறுகின்ற; இயல்பை – விதியை ; யார்; விதித்தார்; உன்னைத் தவிர, வேறு யார் உனக்கு ஏற்படுத்துவார்?

*கருத்துரை* : துறவுக்குத் தடை நம் மனமே.

பற்றாமல் பற்றும் பரமசுக நிட்டைபெற்றால்
பற்றுஉருவில் என்னதுஎனும் பார்வைஉண்டோ நெஞ்சகமே. 75

*பதவுரை* : நெஞ்சகமே –; பற்றாமல் – மனம் முதலிய அந்தக் கரணங்களால் உணராமல்; பற்றும் – உயிர் உணர்வால் உணரும்; பரமசுகம் – மேலான ஆனந்தம் தரும்; நிட்டை – ; பெற்றால் – அடைந்து விட்டால்; பற்று உருவில் – அந்தக் கரணங்கள் உணர்கின்ற வடிவத்தில்; என்னது எனும் – சிறிதேனும்; பார்வை – கவனம்; உண்டோ – உண்டாகுமா? உண்டாகாது.

*கருத்துரை* : அகண்டமான பிரமத்தை உணர்ந்தால், பற்றுக்கள் மறையும்.

தோன்றாமல் தோன்றும் துரியநிலம் கண்டுஇருந்தால்
ஊன்றாது பற்றிவிடும் ஓர்வுஉண்டோ நெஞ்சகமே. 76

*பதவுரை* : நெஞ்சகமே – தோன்றாமல் – கண்ணுக்குத் தோன்றாமல்; தோன்றும் – உணர்வில் புலப்படும்; துரியநிலம் – துரிய உணர்வு நிலையை; கண்டு–அடைந்து; இருந்தால் – அதில் தொடர்ந்து உணரும் வாய்ப்பைப் பெற்றால்; பற்றி – எந்தப் பொருளையும் எண்ணி; ஊன்றாது – அதில் உறைத்து நில்லாமல்; விடும் – மறைந்து விடும்; ஓர்வு – சிந்தனை; உண்டோ – உண்டாகுமா?

*கருத்துரை* : துரிய உணர்வு வந்தால், நினைத்து மறக்கும் மனத்தின் செயல் குறையும்.

## தெய்வமே என்னும் கண்ணி

அண்டமும் பிண்டமும் ஆனதும் காண்கிலேன் தெய்வமே – இந்த
அண்டமும் பிண்டமும் வேறுஎன்று அறிந்திலேன் தெய்வமே. 1

*பதவுரை* : தெய்வமே – ; அண்டமும் – உலகமும்; பிண்டமும் – உடம்பும்; வேறு – என்னிலிருந்து வேறானவை; என்று – ; அறிந்திலேன் – நான் உணரவில்லை; (ஆதலால்) இந்த அண்டமும் பிண்டமும் –; ஆனதும் – அவற்றில் உள்ள பொருள்களும்; காண்கிலேன் – நான் பார்க்கவில்லை. (அவை எல்லாவற்றையும் ஆத்மாவாகவே பார்க்கின்றேன்).

*கருத்துரை* : ஆத்மாவே உண்மை. அது கற்பித்த அண்ட பிண்டங்கள் பொய்.

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பொருட்டெய்வமே – இந்தக்
கோதாம் உடம்பாய்க் குறித்து விளங்குதே தெய்வமே. 2

*பதவுரை* : தெய்வமே – ; ஆதியும் – தோற்றமும் ; அந்தமும் – முடிவும்; இல்லா – இல்லாத; அரும்பொருள் – அரிய பொருளான; தெய்வமே – ; இந்த – ; கோது ஆம் – குற்றம் நிறைந்த; உடம்பில் – உடம்பாகவும்; குறித்து – தன் வாழ் இடத்தைக் குறித்துக் கொண்டு; விளங்குதே – அதில் விளங்குகின்றது.

*கருத்துரை* : உருவம் கடந்த பரம் பொருள் உருவம் உடைய உடம்பிலும் விளங்குகின்றது.

இன்ப உருவாய் இருந்த பரஞ்சுடர் தெய்வமே – இந்தத்
துன்ப சுகவினைத் தொந்தம் அடைந்ததே தெய்வமே. 3

*பதவுரை* : தெய்வமே – ; இன்ப உருவாய் – ஆனந்தமே வடிவமாக; இருந்த விளங்கும்; பரஞ்சுடர் – மேலான சுடர்; இந்த – ; துன்ப – துன்பமும்; சுக – இன்பமுமான; வினைத் தொந்தம் – வினைத் தொடர்பை; அடைந்ததே – ; இஃது என்ன?

*கருத்துரை* : ஆத்மா என்றும் ஆனந்த வடிவமே. ஆனால் அது சீவனாக உள்ள போது கர்ம பந்தத்தில் அகப்படுகின்றது.

ஈகையும் ஏற்றலும் இல்லா இரும்பொருள் தெய்வமே – இந்த
ஈகையும் ஏற்றலும் ஆகி இருந்ததே தெய்வமே. 4

*பதவுரை* : தெய்வமே – ; ஈகையும் – கொடுத்தலும்; ஏற்றலும் – பெறுதலும்; இல்லா – இல்லாத; இரும்பொருள் – பேரறிவுப் பொருளாகிய பிரமம்; ஈதலும் ஏற்றலும் – ; ஆகி மேற்கொண்டு ; இருந்ததே –; இஃது என்ன?

*கருத்துரை* : செயலற்றது ஆத்மா. ஆனால், சீவநிலையில், அது கன்மத் தொடர்பால் தன் செயல் என்று எதையும் செய்கின்றது.

உண்மையும் இன்மையும் இன்றி இருந்ததே தெய்வமே – இந்த
உண்மையும் இன்மையும் ஆகி விளங்குதே தெய்வமே. 5

*பதவுரை* : தெய்வமே – ; உண்மையும் – ; இன்மையும் – இல்லாமையும்; (ஆகிய இரண்டும்) இன்றி – ; இருந்ததே – இருந்த பிரமம்; உண்மையும் – ஓரிடத்தில் உள்ளமையும் ஒரு காலத்தில் உள்ளமையும்; இன்மையும் – வேறிடம், வேறு காலத்தில் இல்லாமையும் ; ஆகி – உடையதாய்; விளங்குதே – ;

*கருத்துரை* : இடம், காலம் – இவற்றைக் கடந்த ஆத்மா, சீவநிலையில், இவற்றிற்கு உட்பட்டு விட்டது.

ஊனம் உறும்பந்த ஓதம் ஒழிந்ததே தெய்வமே – இந்த
ஊனம் உறும்பந்த ஓதம் அடைந்ததே தெய்வமே. 6

*பதவுரை*: ஊனம் – குறைபாடுகள்; உறும் – அடையப் பெறும்; பந்த ஓதம் – உற்றார், உறவினர் என்ற பந்தக் கடல்; ஒழிந்தது – இல்லாததாகிய; தெய்வம் – பிரமம்; இந்த – ; ஊனம் உறும் பந்த ஓதம் அடைந்தது – சீவநிலையில் அவற்றைக் கன்மத்தால் பெற்றது.

*கருத்துரை* : ஆத்மா என்ற தனது உண்மையைச் சீவன் தனது அவிச்சையால் அறியாமல், தனக்கு உறவுகளைக் கற்பித்துக் கொள்கின்றது.

எப்பொருளாவதும் மெய்ப்பொருள் என்பது தெய்வமே – இந்தத்
தப்பறு நல்லோர் நிலைஇது சத்தியம் தெய்வமே. 7

*பதவுரை* : எப்பொருளாவதும் – எல்லாப் பொருளும்; மெய்ப்பொருள் – மெய்ப் பொருள் ஆகிய பிரமத்தின் தோற்றமே; என்பது – ; இந்த– ; தப்பு அறு – குற்றமில்லாத; நல்லோர் – நல்லோரின்; நிலை இது – மெய்யுணர்வு இதுவே;

*கருத்துரை* : எல்லாம் பிரமம்.

ஏதோ தறிகள்ளன் என்பது போல்ஒன்று தெய்வமே – இந்தத்
தீதே இலாத சிவத்தினில் தோன்றுதே தெய்வமே. 8

*பதவுரை* : தறியில் கள்ளன் – தறியில் கள்ளன் என்பது போல்; ஏதோ ஒன்று – இன்னது என்று விளக்க முடியாத மாயை; தீதே – தீமையென்பதே; இல்லாத –; இந்த – ; சிவத்தினில் – ; தோன்றுதே – ; இஃது என்ன?

*கருத்துரை* : பிரமம் சீவநிலையை மேற்கொண்டது அதன் மாயை.

ஐய உருவே அகம்என்று தோன்றலால் தெய்வமே – இந்தப்
பொய்யாம் அலகையாம் புன்பவம் தோன்றுதே தெய்வமே. 9

*பதவுரை* : ஐயம் – இருப்பது மெய்யோ, பொய்யோ என்ற ஐயத்திற்கு இடமான; உருவே – உடம்பே; அகம் – நான்; என்று – ; தோன்றலால் – பாவித்துக் கொள்வதால்; பொய்யாம்– பொய்யாகிய; அலகையாம் – பேய் போன்ற ; புன் பவம் – இழிவான பிறப்பு; தோன்றுதே – ;

*கருத்துரை* : உடற் பற்றால் பிறப்பு உண்டாகிறது.

ஒன்றோ படும்பாடு உரைப்பேன் சிறிதுஅதில் தெய்வமே –இந்தப்
பொன்றும் உடம்பு பொருளாய் முடிந்ததே தெய்வமே. 10

*பதவுரை* : தெய்வமே – ; படும் பாடு – நான் அனுபவிக்கும் துன்பம்; ஒன்றோ – ; அதில் –; சிறிது – ; உரைப்பேன் – ; இந்த – ; பொன்றும் – அழியும்; உடம்பும் – ; பொருளாய் – உண்மை என்று; முடிந்ததே – தோன்றியதே (அத்துயருக்கு மூல காரணம்.)

*கருத்துரை* : உடற்பற்றே எல்லாத் துன்பத்திற்கும் காரணம்.

ஓவாத ஞான அமுதம் உவட்டுதே தெய்வமே – இந்த
ஓவும் விடயவிடம் சுகம் ஒத்ததே தெய்வமே. 11

*பதவுரை* : தெய்வமே – ; ஓவாத – அளவு இல்லாத; ஞான அமுதம் – ஞானமாகிய அமுதம்; உவட்டுது – ; இந்த – ; ஓவும் – நிலையற்ற; விடய – பொருள்களின் அனுபவமாகிய; விடம் – நஞ்சு; சுகம் ஒத்தது – இன்பமாக உள்ளது. இஃது என்ன?

*கருத்துரை* : எனக்கு அறிவு குறைவாகவும், வாசனை மிகுதியாகவும் உள்ளன.

ஔவியம் இல்லா அறிவு மறைந்ததே தெய்வமே – இந்த
ஔவிய ரூப அகிலமே தோன்றுதே தெய்வமே. 12

*பதவுரை* : தெய்வமே – ; ஔவியம் – வஞ்சனை; இல்லா – இல்லாத; அறிவு அகண்டாகார அறிவு; மறைந்ததே – ; இந்த – ; ஔவிய ரூபம் – வஞ்சனை வடிவமான; அகிலமே – உலகம் மட்டுமே; தோன்றுதே – உணர்வுக்கு விஷயமாகின்றது.

*கருத்துரை* : பொய்யே உண்மையாகத் தோன்றிட, உண்மையை உணரும் பக்குவம் வரவில்லை.

அக்கமும் பக்கமும் ஆனதைக் காண்கிலேன் தெய்வமே – இந்த
அக்கமும் பக்கமும் எண்ணி அழிந்தேன்நான் தெய்வமே. 13

*பதவுரை* : தெய்வமே – ; அக்கமும் பக்கமும் – என்னைச் சுற்றியுள்ள உலகமாக; ஆனதை – ஆன மெய்ப் பொருளை; காண்கிலேன். (காணாமல்) – ; இந்த – ; அக்கமும் பக்கமும் – இந்தப் பொருள்களையே; எண்ணி –; அழிந்தேன் – துயர் உற்று மெலிந்தேன்.

*கருத்துரை* : உலகமாக ஆனது பிரமம். அதை எண்ணாமல், உலகத்தைப் பார்த்து மயங்கினால் துன்பமே.

கண்ட உருவங்கள் காண்பதாக் காண்கிலேன் தெய்வமே–இதை
பண்டு பறித்திட்ட பாவியர் ஆர்கொலோ தெய்வமே. 14

*பதவுரை* : கண்ட – பார்க்கும்; உருவங்கள் – பொருள்களை; காண்பதா (க) – பார்க்கும் ஆத்மாவாக; காண்கிலேன் – நான் பார்க்கவில்லை; இதை – அவ்வாறு பார்க்கும் காட்சியை; பண்டு – முன்பு; பறித்திட்ட –; பாவியர் – ; ஆர்கொலோ – யாரோ அறியேன்.

*கருத்துரை* : காணும் பொருளை விடக் காணும் ஆத்மாவே சிறந்தது.

காலங்கள் மூன்றும் கடந்ததைக் காண்கிலேன் தெய்வமே – இந்த
ஞாலத்தின் பேதங்கள் நன்றாகத் தோற்றுதே தெய்வமே. 15

*பதவுரை* : காலங்கள் மூன்றும் – ; கடந்ததை – ; காண்கிலேன் – நான் உணரவில்லை; (அவை வீணாகிவிட்டன) இந்த – ; ஞாலத்தின் – உலகத்தின்; பேதங்கள் – வேறுபாடுகள்; நன்றாக – ; தோற்றுதே – தெரிகின்றன.

*கருத்துரை* : பொருள்களை வேறு வேறாகக் காண்கின்றவரை துவைத புத்தி போகாது; அத்வைத அனுபவம் வராது.

கின்னம் உறும்பல வீணரைக் கிட்டினேன் தெய்வமே – இந்த
நன்னலம் பெற்றோரை நண்ணவும் நாணினேன் தெய்வமே. 16

*பதவுரை* : கின்னம் – கீழ்மை; உறும் – உடைய ; பல வீணரை – ; கிட்டினேன் நண்பராக அடைந்தேன் ; இந்த – ; நன்னலம் பெற்றோரை – பண்புள்ள நல்லவர்களை; நண்ணவும் – நெருங்கவும் ; நாணினேன் – தயங்கினேன்.

*கருத்துரை* : தீயோர் நட்பு பயனற்றது.

கீழோர் உரைத்த உரைகளைக் கேட்கிறேன் தெய்வமே – இந்தப்
பாழ்வாழ்வில் என்ன பயன்எனத் தேர்கிலேன் தெய்வமே. 17

*பதவுரை* : கீழோர் – கீழ்மக்கள்; உரைத்த – ; உரைகளை – தீய சொற்களை கேட்கிறேன் –; இந்த – ; பாழ் வாழ்வில் – பாழான வாழ்க்கையால்; என்ன பயன்? – ; ஒன்றுமில்லை. தேர்கிலேன் – இலை அறியேன்.

*கருத்துரை* : தீயோர் மொழி மெய்யுணர்வு தராது.

குட்டிய மான குரம்பையை நாடொறும் தெய்வமே – மிகக்
கட்டியே காத்திருந்து என்பயன் கண்டனன் தெய்வமே. 18

*பதவுரை* : குட்டியமான – வெற்றுச் சுவர் ஆகிய; குரம்பையை – மண் குடிசை போன்ற உடம்பை ; நாள்தொறும் – ; மிக – மிகுந்த கருத்துடன்; கட்டிக் காத்து – ; என் பயன் – என்ன பயனைக் ; கண்டனன் – நான் கண்டேன்? ஒன்றும் இல்லை.

*கருத்துரை* : உடம்பால் பயன் இல்லை.

கூடாது என்னால் இந்தக் கூட்டில் இருக்கவும் தெய்வமே – இந்தப்
பாடு படுவது பார்த்திலையோ பர தெய்வமே. 19

*பதவுரை* : இந்த – ; கூட்டில் – உடம்பில்; இருக்கவும் – வாழவும்; என்னால் – ; கூடாது – முடியாது; இந்தப் பாடு – நான் இத்தகைய துன்பத்தை; படுவது – அனுபவிப்பதை பார்த்திலையோ – நீ பார்க்க வில்லையா?

*கருத்துரை* : உடல் வாழ்வு துன்பம்.

கெம்பீரம் அன்றிக் கிலேசம் அடைந்தனன் தெய்வமே – இந்தப்
பம்பு பவக்கடல் தாண்டல் என்றோபர தெய்வமே. 20

*பதவுரை* : கெம்பீரம் – பெருமிதமாக இருப்பது ; அன்றி – இயலாமல்; கிலேசம் – கவலை அடைந்தனன் – அடைந்தேன்; இந்த – ; பம்பு – அதிகமான; பவக் கடல் – பிறப்பாகிய கடலை; தாண்டல் – கடப்பது ; என்று – ;

*கருத்துரை* : பிறப்பு வட்டம் கவலை தருகின்றது.

## கிளிப்பத்து

கண்படையும் சாக்கிரமும் காணாத் துரியநிலைப்
பண்பு அடைவது என்றோ பகராய்நீ அஞ்சுகமே 1

*பதவுரை* : அஞ்சுகமே – கிளியே; கண்படையும் – ஆழ்ந்த உறக்கமும்; சாக்கிரமும் – விழிப்பும்; காணா – (ஆகிய) இரண்டும் அல்லாததான; துரியநிலை – துரிய உணர்வு; (என்னும்); பண்பு – நிலையை; அடைவது – நான் அடைவது; என்று? – ; நீ – ; பகராய் சொல்வாயாக.

*கருத்துரை* : துரியமே ஆத்மாவை உணரும் நிலை.

உள்ளும் புறம்பும்மனம் உற்றிடும்சங் கற்பசகம்
தள்ளிச் சுகநிலையில் சார்வதுஎன்றோ அஞ்சுகமே. 2

*பதவுரை* : அஞ்சுகமே – கிளியே; மனம் – ; உள்ளும் – தன்னைப் பற்றியும்; புறம்பும் – வெளி விடயங்கள் பற்றியும்; உற்றிடும் – சிந்திக்கும்; சங்கற்ப – எண்ணநிலையில் உள்ள; சுகம் – உலக ஈடுபாட்டை; தள்ளி – விட்டு; சுக நிலையில் – மனத்தைக் கடந்து, உணர்வால் ஆத்மாவை உணரும் ஆனந்தமான நிலையை; சார்வது – அடைவது ; என்று?

*கருத்துரை* : பொருள்களை மனத்தால் எண்ணுவதும் விடயானுபவமே. அதைத் தள்ளி, ஆத்மானுபவம் பெற வேண்டும்.

உன்னல் ஒழிதலினால் உண்டுஅரந்தை இன்பம்;இது
பன்னு சமநிலையில் பாறல் என்றோ அஞ்சுகமே. 3

*பதவுரை* : அஞ்சுகமே – ; உன்னலினால் – பொருள்களை நினைப்பதனால்; இன்பம் – ; உண்டு – ; ஒழிதலினால் – அவ்வாறு நினைக்காவிட்டால்; அரந்தை – துன்பம்; உண்டு – ; இது – இந்த இரட்டைநிலை; பன்னு – உயர்வாகக் கூறப்படுவதாகிய; சமநிலையில் – இன்ப துன்ப சம பாவத்தில்; பாறல் – ஒழிதல்; என்று?

*கருத்துரை* : விருப்பு வெறுப்பு அற்ற சமபாவம் வந்தால், நினைப்பு நிலையிலும் அது கைவரும். அப்போது, இன்பமும் இல்லை, துன்பமும் இல்லை.

உள்ளம் நினைப்புமறப்பு உற்றிடின்ஓர் தன்வடிவை
உள்ளபடி உணர ஒண்ணுமதோ அஞ்சுகமே. 4

*பதவுரை* : அஞ்சுகமே – ; உள்ளம் – மனத்தில்; நினைப்பும் – ; மறப்பும் – ; உற்றிடின் – தோன்றினால்; ஆர் – ஒப்பற்ற; தன் வடிவை – சீவன் தன் ஆத்ம வடிவை; உள்ளபடி – உள்ளவாறு; உணர ஒண்ணுமதோ – உணர முடியுமா? முடியாது.

*கருத்துரை* : மனத்தின் செயல் நிற்கும் வரை உயிர் உணர்வு பெற முடியாது.

இத்தரையில் தேகம்எடுத்து எய்தும்மனச் செய்கைவிட்டுச்
சித்தசம மாம்வாழ்வு சேர்வதுஎன்றோ அஞ்சுகமே. 5

*பதவுரை* : அஞ்சுகமே – ; இத் தரையில் – உலகில்; தேகம் எடுத்து – பிறந்தமையால்; எய்தும் – வந்ததாகிய; மனச் செய்கை – மனச் சிந்தனை என்ற செயலை; விட்டு – நீக்கி; சித்த சமமாம் – சித்தம் சமநிலையில் இருப்பதாகிய; வாழ்வு – மெய்யுணர்வு வாழ்வை; சேர்வது – அடைவது; என்று? – ;

*கருத்துரை* : எண்ணமிடுதல் உலகில் நம்மை ஈடுபடுத்தும். சித்தம் விருப்பு வெறுப்பு இன்றிச் சமபாவனையில் இருப்பதே ஆனந்தம்.

இட்டமொடு நாமஉரு எய்தி,மனம் சுட்டிஉறும்
சுட்டறிவு நீங்கும் நிலை தோய்வதுஎன்றோ அஞ்சுகமே. 6

*பதவுரை* : மனம் – ; இட்டமொடு – தன் விருப்பம் போல்; நாமம் – பொருள்களின் பெயர்களையும்; உரு – வடிவங்களையும்; சுட்டி – அளவு குறித்து; எய்தி – நினைத்து ; உறும் – விரும்புதல் அல்லது வெறுத்தலைச் செய்யும்; சுட்டறிவு – ; நீங்கும் நிலை – ; தோய்வது – என்னிடம் வருவது; என்று? – ;

*கருத்துரை* : சுட்டறிவு உள்ளவரை பேதபுத்தியும், விருப்பு வெறுப்பும் இருக்கும். பொருள்களில் பிரமத்தைக் காணும் வியாபகக் காட்சியே வேண்டும்.

தம்மால் அறிவு,அறியா மைஇரண்டும் தள்ளிவிட்டுச்
சும்மா இருக்கும்நிலை தோய்வதுஎன்றோ அஞ்சுகமே. 7

*பதவுரை* : அஞ்சுகமே – ; தம்மால் – தமது மனத்தால் பற்றி; அறிவு – அறிதலும்; அறியாமை – அறிய முடியாமல் இருத்தலும்; (ஆகிய) இரண்டும் – இரண்டையும்; தள்ளிவிட்டு – நீக்கி; சும்மா இருக்கும் – மனம் அற்ற நிலையில், ஆத்ம உணர்வுடன் இருக்கும்; நிலை – இன்ப நிலை; தோய்வது – வருவது; என்று – ;

*கருத்துரை* : உலகத்தைப் பற்றி அறிந்து என்ன பயன்? உயிர் உணர்வால் ஆத்மாவை உணர வேண்டும்.

இத்தேகம்பற்றி இருக்கும்ஒரு தேகிஇன்றி
எத்தேகமும் யானாய் இருப்பதுஎன்றோ அஞ்சுகமே. 8

*பதவுரை* : அஞ்சுகமே – ; இத்தேகம் – இந்த உடம்பை ; பற்றி – சார்ந்து; இருக்கும் – வாழ்கின்ற; ஒரு தேகி – உடம்புடைய கர்த்தா ஒருவனாக; இன்றி – நான் இல்லாமல்; எத்தேகமும் ஆய் – எல்லா உடம்பிலும் வாழும் தேகியாய்; யான் – நான்; இருப்பது என்று –;

*கருத்துரை* : ஒரு உடம்பை மட்டும் சார்ந்த சீவனாக நான் இல்லாமல், எல்லா உடம்பிலும் வாழும் ஆத்மாவாக இருப்பது கைவருமா?

மூலப் பகுதி முடிந்துமுடி யாதுபெறும்
சீலப் பரமசுகம் சேர்வதுஎன்றோ அஞ்சுகமே. 9

*பதவுரை* : அஞ்சுகமே – ; மூலப்பகுதி – பிரகிருதி; முடிந்து – செயலற்றுப்போக; முடியாது பெறும் – அளவில்லாமல் பெறக் கூடிய; சீலம் – ஆத்ம உணர்வோடு கூடிய ; பரம சுகம் – மேலான ஆனந்தம்; சேர்வது – வருவது; என்று?

*கருத்துரை* : பிரபஞ்சத்துக்கு அழிவு உண்டு. நம் உயிர் உணர்வாலேயே அந்த அழிவு உணரப்படும். அந்த நிலையில் பிரம ஞானம் வந்தால் அளவில்லாத ஆனந்தம் கிட்டும்.

சித்தம் இறந்தால் சிவம்இறக்கும் தேகி உளது
அத்தன்மை இன்றி,அவன் ஆவதுஎன்றோ அஞ்சுகமே. 10

*பதவுரை* : சித்தம் – உயிர் உணர்வு; இறந்தால் – நின்று போனால்; சிவம் இறக்கும் – சிவ நிலையை உணரமுடியாது; தேகி – சீவன்; உளது – இருக்கிறது; (என்ற) அத்தன்மை அந்த உணர்வு; இன்றி – இல்லாமல்; அவன் ஆவது – சிவனாகவே ஆவது; என்று?

*கருத்துரை* : நான் சீவன் என்ற நினைப்பை அடியோடு விட்டுச் சிவன் என்று உணரவேண்டும்.

அத்தி பாதிப்பிரிய ஆதி வெளியாய் இருந்தால்
சுத்தம்இலாச் சீவபரத் தொய்தம்எங்கே அஞ்சுகமே. 11

*பதவுரை*: அத்தி – இருக்கையும் (சத்) ; பாதி – விளக்கமும் (சித்); பிரியம் – இன்பம் (ஆனந்தம்) என்ற மூன்றுமான; ஆதி – மூல; வெளியாயிருந்தால் – வெளியாக நாம் நம்மை உணர்ந்து இருந்தால்; சுத்தம் இலா – தூய்மை இல்லாத; சீவ – சீவன் என்றும்; பரம் – ; என்றும் ; நெரய்தம் – இரண்டும் வேறு வேறு என்று கூறுவது; எங்கே – எவ்விதம் உண்மையாகும்?

*கருத்துரை* : பிரம ஞானம் பெற்றால் எல்லாம் ஒன்றே என்ற காட்சி உண்டாகும்.

## சந்த விருத்தம்

சொல்லலாஞ் – சொல்லலாந்–தார–தனங்களைத்
தூற்றிவிட்–டோமென–வாயாலே. நன்னனா. 1

*பதவுரை* : சொல்லலாம் – ; தாரம் – மனைவியையும்; தனங்களை – செல்வத்தையும்; தூற்றி விட்டோம் – துறந்துவிட்டோம்; என–என்று; வாயாலே – ; சொல்லலாம் – சொல்வது எளிது.

*கருத்துரை* : வாய்த்துறவு பயன் படாது.

சொல்லாம் – சொல்லலாம் – அந்தக் – கரணத்தைச்
சுட்டு விட்டோம் என – வாயாலே. 2

*பதவுரை* : சொல்லலாம் –; அந்தக் கரணத்தை – மனம், புத்தி, அகங்காரம் என்ற அந்தக் கரணங்களை; சுட்டு விட்டோம் – வென்று விட்டோம்; என – ; வாயாலே சொல்லலாம் – சொல்வது எளிது.

*கருத்துரை* : மனத்தை வெல்வது எளிது அன்று.

*****

# சுவானுபவத் திருவாக்கியங்கள்

## சர்வம் பஞ்சபூத மயம் 1.

*பதவுரை* : சர்வம் – அண்டம், உடல், பிற பொருள்கள் ஆகிய அனைத்தும்; பஞ்சபூதம் – நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பெரும் பூதங்களால்; மயம் – ஆகிய (அப் பூதங்களின்) குணங்களை உடையவையாக உள்ளன.

*விளக்கவுரை* : இவ்வுலகமும், இதில் உள்ள அனைத்துப் பொருள்களும் ஐம்பெரும் பூதங்களின் கலப்பால் உண்டாகியவை. இந்தக் கலப்பைப் 'பஞ்சீகரணம்' என்பர்.

## சர்வம் மித்தை 2.

*பதவுரை* : சர்வம்–இவ்வுலகமும், இதில் உள்ள அனைத்துப் பொருள்களும்; சீவர்களும்; மித்தை – பொய்த் தோற்றம்.

*விளக்கம்* : உண்மையாக உள்ளவை போல் தோன்றும் உலகமும், பொருள்களும், சீவாத்மாக்களும், உண்மைப் பொருளாகிய பிரமத்தின் சங்கற்பத்தால், அதன் மீதே பொய்த்தோற்றமாகத் தோன்றுபவை . சீவாத்மா தனது மனத்தின் கற்பனையால் அவற்றை உண்மையென்று கருதுகின்றான். இக் கற்பனைக்குக் காரணம் அவிச்சை.

## சர்வம் சின்மயம். 3.

*பதவுரை* : சர்வம் – (உலகமும்) பொருள்களும், சீவர்களும் ஆகிய எல்லாம்; சின்மயம் – அறிவே வடிவாகிய பிரமமே யாகும்.

*விளக்கம்* : சீவாத்மாவின் அவிச்சை நீங்கினால், அது பேருணர்வு பெறும். அவ்வுணர்வால், அது தானும், உலகமும், பொருளுள்களும் உண்மையில் ஞானமே வடிவான, சச்சிதானந்தமாகிய பிரமமே என்று அறியும்.

மேற்சென்ற மூன்று வாக்கியங்களும், காணப்படும் பொருள்கள் யாவும் தோற்றத்தால் ஐம்பூதங்களின் ஆக்கம் என்றும், அத்தோற்றம் பொய்யென்றும், உண்மையில் பிரமமே, சீவனின் அவிச்சையால் அவ்வாறு தோன்றுகின்றது என்றும் உணர்த்துகின்றன.

## நாம, ரூபம் – நாடாமல், பகிர்முகம் இன்றி, இருக்க வேண்டும், 4.

*பதவுரை* : நாமம் – காணப்படும் பொருள்களின் பெயரும்; ரூபம் – வடிவமும்; (அறிந்து அவற்றின் மேல்) நாடாமல் – பற்றுக் கொள்ளாமல்; பகிர்முகம் இன்றி – புறத்தில் உணர்வு செல்லாமல்; இருக்க வேண்டும் – உணர்வை உள்முகமாகச் செலுத்த வேண்டும்.

*விளக்கம்* : நாமமும் ரூபமும் உடைய பொருள்கள் சுட்டி அறியப்படுவதால், அழியும் தன்மை உடையவை. இன்ன உருவம், இன்ன பெயர் என்று சுட்டி யறியப் படாததாகிய பிரமமே அழிவற்ற பொருள். அது ஒன்றே உண்மைப் பொருள். அதை உள்முகமான ஞான விசாரத்தால் உணரவேண்டும். உள்முக அறிவு என்பது, தன்னையே உணர்தல். தான் உடம்பன்று; அந்தக் கரணமன்று. பிரபஞ்சம் எனப்படும் தத்துவம் எதுவுமன்று; தான் பிரமம் என்று உணர்தல்.

பரிபூரணம் ஆகிய தனக்கு என்ன வேண்டுவது? 5.

*பதவுரை* : பரிபூரணம் ஆகிய – எக்குறையும் இல்லாத முழு நிறைவாகியதும், எங்கும் வியாபகமாக உள்ளதுமான பிரமத்தின் தோற்றமாகிய; தனக்கு – சீவாத்மாவிற்கு; என்ன வேண்டுவது?– என்ன குறை இருக்கிறது?

*விளக்கம்* : ஜீவன் பிரமமே. அவிச்சையால் மறைபட்ட அறிவால், ஜீவன் தன்னைப் பிரமத்தின் வேறாய்க் கருதுகின்றது. ஆதலால், தனக்குப் பலவும் வேண்டும் என்று இச்சை கொள்கிறது. ஞான விசாரத்தால், அவிச்சை நீங்கப் பெற்றால், ஜீவன் தன்னைப் பிரமசொரூம் என உணரும். அப்பொழுது அதன் சகல இச்சைகளும் நீங்கும்.

எல்லாம் தோற்றல் மாத்திரம். 6.

*பதவுரை* : எல்லாம் – உலகமும், பொருள்களும், சீவனும், தெய்வ வடிவங்களும்; தோன்றல் மாத்திரம் – வெறும் தோற்றமே;

*விளக்கம்* : பிரமமே உண்மை. மற்றவை எல்லாம் சீவன் தனது அவிச்சையால் கற்பனை செய்யும் வடிவங்கள். அத்தோற்றத்தில் உண்மை இல்லை. அவையாகத் தோன்றும் பிரமமே உண்மை.

அதிட்டானமாகிய தானாய்ப் பார்க்கும் போது "நான், அவன்"–எங்கே? 7.

*பதவுரை* : அதிட்டானம் ஆகிய – சீவான்மாவாக அதிட்டித்திருப்பதாகிய; தானாய் – பிரமமேயாக நின்று; பார்க்கும்போது – கருதும் பொழுது; நான், அவன் – நான் வேறு, அவன் வேறு என்று பிரித்துப் பார்க்கும் நிலை; எங்கே? – ஏது? இல்லை;

*விளக்கவுரை* : பிரமத்தின் சங்கற்பத்தால் சீவனும் அதன் உடம்பும் தோன்றுகின்றன. அது பிரமத்தின் மாயா லீலை. ஆதலால் பிரமமே சீவாத்மாவாக அதிட்டித்திருக்கின்றது எனப்படுகின்றது. சீவன் அதிட்டானம். பிரமம் அதிட்டான சைதன்யம். சீவனின் அவிச்சையால் சைதன்யம் தோன்றாமலிருக்கிறது. அவிச்சை நீங்கினால், சீவன் தானே சைதன்யம் என்று உணரும். அப்போது சீவன் வேறு, பிரமம் வேறு என்று இல்லை.

உப சாந்தமும் துரியம்; அறியாத விடயமும் துரியம். 8.

*பதவுரை* : உபசாந்தமும் – எல்லாத் துன்பமும் நீங்கிய – கருவிகரணங்கள் எல்லாம் ஓய்ந்த – நிலையும்; துரியம் – பிரமம். அறியாத – ஏனை அறிவால் அறிய இயலாத; விடயமும் – பொருளும்; துரியம் –பிரமம்.

*விளக்கம்* : உபசாந்தம் என்பது எந்த வகையான துன்பங்களும் இன்றி நிச்சிந்தையாக, சலனம் அற்று இருக்கும் நிலை. அது ஆத்ம சொரூபம். ஆத்மா தன்னைத் தானே உணர வேண்டுமே அன்றி, மனம், புத்தி, சித்தம் ஆகியவற்றால் அதனை ஆய்ந்து அறிய முடியாது.

**பாசபந்தம் வரும்போது, பாச நிவிர்த்தியும் தோன்ற வேண்டும். 9.**

*பதவுரை* : பாச பந்தம் – கட்டுப் போட்டது போல உள்ள பலவகை அபிமானங்கள்; வரும் போது ஆத்மாவிற்கு முன்பு இல்லாதிருந்து, பிறகு தோன்றுகின்றன. (இந்த அபிமானங்கள் அவனது கற்பனையால் உண்டானவை) (ஆதலின்) பாச நிவிர்த்தியும்– அந்தக் கட்டு விலகுவது என்பதும்; தோன்றவேண்டும் – நிகழக் கூடியதே.

*விளக்கம்* : ஆத்மாவிற்குப் பாசம் என்று சொல்லப்படும் உடற்பற்று, உறவினர்பற்று, பொருட்பற்று முதலிய பலவகை அபிமானங்களும் இடையில் வந்து சேரும் உணர்ச்சிகள். ஆதலின், இறுதிவரை ஆத்மாவுடன் நில்லா. ஞானவிசாரத்தால் நீங்கும்.

**சுக, துக்கம் உள்ள வரையில், தார தம்மியம் நீங்காது. 10.**

*பதவுரை* : சுக துக்கம் – ஆத்மாவிற்குச் சுகம் துக்கமும் என்ற இரட்டை உணர்வு உள்ளவரை–; தார தம்மியம் – பொருள்களை உயர்வு என்றும் தாழ்வென்றும் வேறுபடுத்திக் காணும் அறிவு நீங்காது. சுகத்தையும் துக்கத்தையும் சமமாகக் கருதி, மனச் சலனத்தை நிறுத்தினால், அனைத்தும் ஒன்று என்ற பேருணர்வு உண்டாகும்.

*விளக்கம்* : எந்தப் பொருளிலும், எந்த ஒரு நிகழ்ச்சியிலும் சுகம் அல்லது துக்கம் இல்லை. ஒருவனுக்குச் சுகமாகத் தோன்றுவது மற்றவனுக்குத் துக்கமாகத் தோன்றும். ஆகவே சுகமும் துக்கமும் மனத்தின் கற்பனையே. இந்தக் கற்பனையை நீக்கி, எல்லாப் பொருள்களையும் பிரமமாகவும், எல்லாச் செயல்களையும் (நிகழ்ச்சிகளையும்) பிரமத்தின் செயல்களாகவும் உணர்ந்தால், அவற்றில் சிலவற்றை உயர்ந்தவை என்றும், மற்றும் சிலவற்றைத் தாழ்ந்தவை என்றும் கருதும் கருத்துத் தோன்றாது.

**பிரபஞ்சம் மித்யா பாவனையினாலும், தன்மய பாவனையினாலும் காண்பான் காட்சி நீங்கும். 11.**

*பதவுரை* : பிரபஞ்சம் – கண்ணெதிரே தோன்றும் உலகமும், வேறுபட்ட குணம், வடிவம் உடைய பொருள்களும்; மித்யா பாவனையினாலும் (மித்யா திருஷ்டியினாலும்) – பொய்யென்று எண்ணுவதாலும்; தன்மய பாவனையினாலும் – காண்கின்ற பொருள் எல்லாம் நமது சொரூபம் என்று இடைவிடாது எண்ணுவதாலும்; காண்பான் – பார்ப்பவன் என்பதும்; காட்சி – பார்க்கப்படும் பொருள் என்பதும்; நீங்கும்.

*விளக்கம்* : 'காண்பவன் ஒருவன் உண்டு; அவனால் காணப்படும் பொருளாகப் [illegible]' என்று காண்பவன் இருவித பாவனைகளுள் ஏதேனும்

பிரபஞ்சம் இருக்கின்றது' என்பது, காண்பவன் இருவித [illegible]

ஒன்றை மேற்கொள்வதால் நீங்கிவிடும். ஒன்று, மித்யா பாவனை. அது, காணப்படும் பொருள் எல்லாம் பொய் என்று எண்ணுவது. மற்றொன்று, தன்மய பாவனை. அது, காணப்படும் பொருள் எல்லாம் நமது சொரூபம் என்று எண்ணுவது.

எல்லாவற்றையும் தான் அறிவதாயும், தன்னை ஒன்றும் அறியாததாயும் – இப்படிக் காண்கின்றதே பிரத்தியட்ச ஞானம். 12.

*பதவுரை* : எல்லாவற்றையும்–; தான் – ஆத்மாவாகிய பிரமம்; அறிவதாயும்– சர்வவியாபகமாக இருந்து, ஒருங்கே அறிகின்றது என்றும்; ஒன்றும் – பிரபஞ்சத்தில் தோன்றும் எந்தப் பொருளும் மாயைத்தோற்றமே; அறியும் அறிவற்றதே ஆதலின் அது; தன்னை – ஆத்மனை; அறியாதாயும்–; இப்படிக் காண்கின்றதே – இதை உணர்வதே ; பிரத்தியட்ச ஞானம் – கண்கூடான ஞானம் ஆகும்.

*விளக்கம்* : ஒருவன் தான் பிரமமே என்று உணர்ந்தால், அவனுடைய அறிவு சுக துக்கங்களால் மயங்காது. கண்பார்வைக்கு அப்பால் உள்ளவை பரோஷம். பார்வையில் படுபவை பிரத்யக்ஷம். ஆத்ம ஞானத்தால் உள்முகமாக நாடிப் பிரம சொரூபத்தை அறியும் பொழுது, பிரமம் சாக்ஷாத் அபரோக்ஷம்.

தன்னிடத்தில் அகங்காரம் பிராந்தி மூலம். 13.

*பதவுரை* : தன்னிடத்தில் – சீவன் தன்னிடத்தில்; அகங்காரம் – கர்வம் கொள்ளுவது; பிராந்தி – மயக்க உணர்வு உண்டாவதற்கு; மூலம் – ஏதுவாகும்.

விளக்கம்: ஒருவன் தன்னைச் சீவன் என்று கருதி, உலகியலில் தான் பெற்றுள்ள மேன்மையை எண்ணிக் கர்வம் கொண்டால், அவனுக்கு உண்மை விளங்காது. மாறாக, அவன் தன்னைப் பிரமம் என்று உணர்ந்தால் உலகில் உள்ள பொருள்களைப் பற்றிய உண்மை விளங்கும்.

இங்கும் அங்கும் ராக, துவேஷம் அன்றி இருந்தால்
இரண்டுக்கும் ஐக்கியம். 14.

*பதவுரை* : இங்கும் – இப்பொழுது உள்ளவற்றிலும்; அங்கும் – இனி வரவிருப்பவற்றிலும் – முறையே சந்திப்பிலும், எதிர்பார்ப்பிலும்; ராகம் – விருப்பமும்; துவேஷம் – வெறுப்பும்; அன்றி – மனத்தில் கொள்ளாமல்; இருந்தால்–; இரண்டுக்கும் – ராக, துவேஷங்களை மனத்தில் உண்டாக்கும் இரண்டு வகைப் பொருள்களும்; ஐக்கியம் – ஒன்றே; வேறுபட்டவை அல்ல என்ற உணர்வு பிறக்கும்.

*விளக்கம்* : விருப்பு வெறுப்பு அற்ற சமநிலை மனத்தோடு (நளுரனைந) நோக்கினால், 'பிரபஞ்சம் விவிதம்' – உலகம் பல வகை – என்ற காட்சி மாறி, 'எல்லாம் ஒன்று' என்ற ஏகக் காட்சி வாய்க்கும். இக்காட்சியே, எல்லாம் பிரமமாகக் காணும்

காட்சிக்குத் தோற்றுவாய். "வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல" என்ற திருக்குறளை ஒப்பு நோக்குக.

சுகம், துக்கம் என்ற சொற்களில், முதல் எழுத்துக்களாகிய சு, து என்பவை நீங்கினால், எஞ்சுவது 'கம்' என்பது. அது பிரமம் எனப் பொருள்படும்.

**பிரத்தியட்சமான விடயமும், அப்பிரத்தியட்சமான விடயமும்,**
**திருக்கு ஆகிய ஞானத்துக்குத் திருசியம். 15.**

*பதவுரை* : பிரத்தியட்சமான – புறக்கண்ணுக்குத் தோன்றுவதான; விடயமும் – பொருளும்;அப்பிரத்தியட்சமான – அங்ஙனம் புறக்கண்ணுக்குத் தோன்றாததான; விடயமும் – பொருளும்; 'திருக்கு' ஆகிய – அகக் கண்ணால் காண்பதாகிய; ஞானத்திற்கு – ஆத்ம ஞானத்திற்கு; 'திருசியம்' – 'காணப்படும்' (உணரப்படும்) பொருளே ஆகும்.

*விளக்கம்* : புறக்கண்ணிற்கு, உண்மை பொய்யாகத் தோன்றும். பொய் உண்மையாகத் தோன்றும். இது 'பிராந்தி ஞானம்'. ஆத்ம வித்தையைப் பயின்று, அறிவுபெற்றால் புறக் கண்ணுக்குத் தோன்றாத விஷயமும் விளங்கும். அதே சமயம், புறக்கண்ணிற்குத் தோன்றுபவை அனைத்தும் 'மித்தை' – பொய்யாகிய மாயைத் தோற்றம் – என்பதும் விளங்கும். இந்த இரண்டும் தாம் உண்மைக்காட்சி. 'எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும், அப்பொருள் மெய்ப் பொருள் காண்பது அறிவு' என்னும் திருக்குறள் காண்க.

**வஸ்து நிர்ணயத்தில், பிரபஞ்சம் தான் அல்ல என்றும்;**
**அத்துவிதத்தில், தன்னைத் தவிர, வேறு இல்லாதபடியினாலே,**
**தான் என்றும் காண்க. 16.**

*பதவுரை* : வஸ்து நிர்ணயத்தில் – பொருள்களைப் பிரித்து, இன்ன இன்ன பொருள் இன்ன தன்மை உடையது என்று தீர்மானம் செய்யும் பொழுது; பிரபஞ்சம் – காணப்படும் உலகமும், அதில் உள்ள நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பெரும் பூதங்களும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து பொறிகளை உடைய உடம்பும், அதன் அகக் கருவிகளாகிய மனம், புத்தி சித்தம் என்பவையும், ஐம்பூதங்களின் காரியமாகிய பிற பொருள்களும்; தான் அல்ல – (அறிவற்ற பொருள்களாதலின்) அறிபவனாகிய 'தான் ' அல்ல என்று–; காண்க. அத்துவிதத்தில் – ஞான விசாரணை செய்து, நிட்டைகூடி, அத்துவித அனுபவம் அடைகின்ற பொழுது; தன்னைத் தவிர– ஆத்மா ஆகிய தன்னைத்தவிர; வேறு இல்லாதபடியினாலே – பிற எல்லாம் மித்தையாய்– பொய்த் தோற்றமாகிய மாயையாய்ப்) போவதால் மெய்ப்பொருள் வேறு ஒன்றும் இல்லாத காரணத்தால்; தான் – காண்பவனாகிய சீவாத்மாவே அறியும் கருத்தாவாக நின்று காண்பதால், தானே ஆத்மா (பிரமம்); என்று–; காண்க – உணர்க.

*விளக்கம்* : நான் யார்? இப்பிரபஞ்சம் எத்தன்மை உடையது என்று அகக் கண்ணால் (உள்ளார்ந்த – உள்முகமான அறிவால் விசாரம் செய்தல், ஞான விசாரத்தின் முதற்படி ஆகும். இதை "வஸ்து நிர்ணயம்" என்பர். பிரபஞ்சமும், அதில் உள்ள பொருள்களும், தாமாக அறியும் அறிவு இல்லாதவை. காண்பவனே அவற்றை அறிகின்றான். ஆதலின், அவை வேறு, காண்பவன் வேறு என்று தீர்மானிப்பது வஸ்து நிர்ணயம்.

அவ்வாறாயின், காண்பவனாகிய நான் யார்? என்ற வினாவுக்கு விடை கிடைக்கவில்லை. அகமுக ஆய்வில், நிட்டை கூடி, சீவனின் அறியும் ஆத்மனில் (பிரமத்தில்) கரைந்து, ஒன்றும் இல்லாமற் போவதால், 'நான்' என்பது பொய், உண்மையில் 'தான்' ஆகிய ஆத்மாவே, சீவனின் அவிச்சையால் 'நான்' – ஆகத் தோன்றியது என்று உணரப்படும். இது காண்பவனும், காணப்படுவதாகிய பரமும், காண்பதாகிய ஞான விசாரச் செயலும் ஒன்றாக உணரப்படும் நிலை; அத்துவித அனுபவம்.

**சோகத்தினாலே துக்கத்தோற்றம்; மோகத்தினாலே சுகத் தோற்றம். 17.**

*பதவுரை* : சோகத்தினாலே – மனத்தில் ஏற்கனவே படிந்துள்ள வாசனையாலும், புத்தியில் படிந்துள்ள கர்மபலனாலும் அவத்தையாகத் தோன்றும் "வருத்தம்" என்னும் மன நிலையால்; துக்கம் – துன்பம் என்னும்; மனோபாவனை – தோற்றம் உண்டாகும். மோகத்தினாலே – மேலே கூறிய காரணங்களால் மனத்தில் அவத்தையாகத் தோன்றும் 'விடாமற் பற்றுதல்' (கவர்தல்; வாரிக்கொள்ளுதல்) என்னும் மனநிலையால்; சுகம்–இன்பம் என்னும் மனோபாவனை உண்டாகும்.

*விளக்கம்* : சுகமோ துக்கமோ, காணப்படும் பொருளில் இல்லை. காண்பவன் என்ன மன நிலையுடன் காண்கின்றானோ, அதற்கு ஏற்ப, பொருள், அல்லது நிகழ்ச்சி துன்பத்தையோ, சுகத்தையோ அவன் மனத்தில் விளைவிக்கும். (மானஸப் பிரத்யட்சம்) மன நிலை அவன் விருப்பப்படி அமைவதல்ல. மனத்தில் தோன்றும் அவத்தையால், மனநிலை அமையும். அவத்தையும் தானே உண்டாவதல்ல. அது ஏற்கனவே உள்ள வாசனையாலும், அவன் சேர்த்த வினைப்பயன், அவனது புத்தியில் நின்று, தூண்டுவதாலும் உண்டாகின்றது. அவன் ஆத்ம ஞானம் என்னும் வாளால் தன் மனத்தில் தோன்றும் நிலையாகிய சோகத்தையும் மோகத்தையும் வெட்டியெறிவானாயின், துக்கமும் அணுகாது. சுகமும் மயக்காது.

கடந்து போனவற்றால் (இறந்த காலச் செய்திகளால்) ஏற்படுவது சோகம் (கவலை). இறந்தகாலச் செய்தியைப் 'பூதம்' என்பர். நிகழ்காலச் செய்திகளால் (வர்த்தமானம்) ஏற்படுவது மோகம். எதிர் காலத்தில் நிகழும் என்று எண்ணப்படுவனவற்றால் (பவிஷ்ய) ஏற்படுவது பயம்.

**இத்தனையும் மாயாமயம் அலவோ?; உள்ளபடி முடியும். 18.**

*பதவுரை* : இத்தனையும் – பிரபஞ்சத்தில் உள்ள பொருள்கள் எண்ணத் தொலையாதவை. அவற்றின் குணங்களும், பயன்களும், அவற்றால் விளையும் சுக

துக்கங்களும் அளவற்றவை; (ஆயினும் இவை) மாயா மயம் அல்லவோ? – (சிந்திக்கு மிடத்து) பொய்த்தோற்றமல்லவோ? உள்ளபடி முடியும் – (இவற்றால் மகிழ்ச்சியோ, துக்கமோ கொள்ளுவதால் பயனில்லை. இவை எத்துணை வலிமையுடையவை ஆயினும்) உண்மைப் பொருளாகிய பிரமத்தை உணர்ந்தால், அதன் தோற்றமே இவை என்பதும், நாம் நமது அவிச்சையால் இவற்றின் மீது சுகத்தையும் துக்கத்தையும் கற்பனை செய்கின்றோம் என்ற உண்மையும் புலப்படும்.

**திருசியம் திருக்குவை அன்றித் தோன்றாது. 19.**

*பதவுரை* : திருசியம் – காணப்படும் பொருள்கள்; திருக்குவை அன்றி – காண்பவனை அல்லாமல்; தோன்றாது – தனியாக உள்ளவை அல்ல.

*விளக்கம்* : பிரமத்தை அல்லாமல் எந்தப் பொருளும் இல்லை. ஆனால் எத்தனையோ பொருள்கள், எவ்வளவோ பயன்களைத் தருகின்றவே எனின், அவையெல்லாம் காண்பவனின் கற்பனையால் தோன்றுபவை. தமக்கு எனத் தனியான தோற்றமோ, பயனோ எந்தப் பொருளுக்கும் இல்லை. காண்பவன், ஆத்ம ஞானத்தால், தன்னைப் பிரமம் என்று அறிந்து கொண்டால், அந்தப் பிரமத்தின் மாயா லீலையே ஜீவனாக இருந்த தனது நிலையும், அப்பொழுது உண்மை போலத் தோன்றிய இந்த உலகமும் என்று அறிவான்.

**அதிட்டானத்தைத் தவிர, ஆரோபத்துக்கு வடிவம்**
**இல்லாதபடியினாலே, எல்லாம் அதிட்டான மயம் தான். 20.**

*பதவுரை* : அதிட்டானத்தை – காரியப் பொருளில், அக்காரியம் மறையும் பொழுது, எஞ்சி நிற்கும் பொருள் எதுவோ, அது அதிட்டானம். அது பிரமம். அதை; தவிர–; ஆரோபத்திற்கு – கற்பனை செய்து கொள்ளப் பட்ட காமியப் பொருளாகிய பிரபஞ்சத்திற்கு; வடிவம் – தனக்கென வடிவம்; இல்லாதபடியினாலே–; எல்லாம் – பிரபஞ்சமும் அதில் உள்ள பூத, பௌதிகப் பொருள்கள் எல்லாம்; அதிட்டான மயம் தான் – பிரமமே ஆகும்.

*விளக்கம்* : குடம் காரியம்,; மண் காரணம். (அதிட்டானம்) அதிக+ஸ்தானம் – அதிட்டானம். குடம் உடையினும் மண் எஞ்சி நிற்கிறது. அது குடத்திலும் இருக்கிறது. ஆகவே மண்அதிட்டானம். குடம் ஆரோபம். அது போல் சீவாத்மாவின் கற்பனையாகிய பிரபஞ்சம் ஆரோபம். ஞான விசாரத்தால் அப்பொய்த் தோற்றம் மறையும் பொழுது, உண்மைப் பொருளான பிரமம் அங்கு எஞ்சி நிற்கின்றது. குடம் என்ற ஒன்று தனித்து இல்லை. மண்தான் உள்ளது. அதுபோல, பிரபஞ்சம் தனித்து இல்லை. பிரமமே உள்ளது.

**இந்திரசாலக்காரனிடத்தில் கந்தர்வபுரம் தோன்றி, நில்லாமல்**
**அழிந்து போவது போல, தன்னிடத்தில் உண்டாகாநின்ற**
**சங்கற்பம் எவ்வளவோ அனேகமாய் வந்தும், ஒன்றும்**
**நிற்கவில்லை. 21.**

*பதவுரை* : இந்திரசாலக்காரனிடத்தில் – செப்படி வித்தை காட்டுபவன் செய்யும் வித்தையில்; கந்தர்வபுரம் – காந்தர்வர்கள் வாழும் உலகம்; தோன்றி–; நில்லாமல் – நிலைத்து நில்லாமலும், அதில் வாழ்வதற்கு ஏற்றதாயில்லாமலும்; அழிந்து போவது போல–; தன்னிடத்தில் – ஜீவனிடத்தில் ; உண்டாகா நின்ற – தோன்றும் ; சங்கற்பம் – கற்பனை; எவ்வளவோ –; அனேகமாய் – பற்பலவாய்; வந்தும்–; ஒன்றும் – அவற்றுள் எதுவும் ; நிற்கவில்லை – நிலைத்து நிற்கவில்லை.

*விளக்கம்* : பிரமத்தைத் தவிர, மற்றவை எல்லாம் உண்மையாக இருப்பவை அல்ல. அவை உள்ளவையாக இருக்கின்றனவே; அவற்றை உணர்கின்றோமே எனின், அவை நமது கற்பனையே. அந்தக் கற்பனை ஆகிய மாயை, ஒரு கணத்தில் இருப்பது மறுகணத்தில் இல்லாமல் மாறிக்கொண்டேயிருக்கும். ஆனால் மாறாமல் எப்போதும் ஒரு படித்தாக உள்ளது பிரமமே.

ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர் கூறியுள்ள கீழ்க்கண்ட செய்தியை இங்கு ஒப்புநோக்குக.

"மனித ரூபமாக விளையாடுபவன் ஈஸ்வரனே. அவன் ஒரு செப்படி வித்தைக் காரன் போலாவான். ஜீவன், ஜகத் என்ற மாயைத் தோற்றமெல்லாம் அவனுடைய பெரிய வித்தைகள். செப்படி வித்தைக் காரன் மட்டுமே உண்மை. வித்தைகள் எல்லாம் மாயை.

**உபசாந்தம் ஆனாலும், தன்மயமானாலும் சகலத் தியாகம் தான். 22.**

*பதவுரை* : உபசாந்தம் ஆனாலும் – சாதகன் 'உபசாந்தம்' என்ற நிலையை அடைந்தாலும்; (அன்றி) தன்மயமானாலும் – அதுவல்லாமல், தனது சொரூபமாக இருப்பது என்ற நிலையை அடைந்தாலும்; சகலத் தியாகம் தான் – இவை இரண்டும், பிரபஞ்சத்தில் உள்ள எல்லாவற்றையும் விட்ட நிலையே ஆகும்.

*விளக்கம்*: உபசாந்தம், தன்மயம் – என்ற இவ்விரண்டும் ஒரு பொருட் சொற்கள். உபசாந்தம் என்பது இன்ப துன்பம் அற்ற நிலை. தன்மயம் என்பது ஆத்ம சொரூபம், ஆத்ம சொரூபத்தை அறிந்தவன் இன்ப துன்பம் அற்று இருப்பான். அவன் பிரபஞ்சத்தில் உள்ள எதன்மீதும் பற்று வைக்கமாட்டான்.

**நிவிர்த்தியாய் இருக்க வேண்டும். அல்லது, நாம ரூப நாட்டம் வந்தால், அத்துவிதமாய் இருக்க வேண்டும். 23.**

*பதவுரை*: நிவிர்த்தியாய் – செயலற்று; இருக்க வேண்டும் –; அல்லது –; நாமரூப நாட்டம் வந்தால் – பொருள்களின் பெயரிலும், உருவத்திலும் கருத்துச் செல்லுமானால்; அத்துவிதமாய் – (அந்த நாட்டத்தை மறந்து) நானும் பிரமமும் ஒன்றே என்ற சிந்தனையுடன் இருக்க வேண்டும்–;

*விளக்கம்* : பொருளின் மீது பற்று வைத்து, அதை அடைவதற்காகச் செயல் மேற்கொள்ளாமல் இருக்க வேண்டும். இவ்வாறு இருந்தால் வினை சேராது. இவ்வாறு

இருக்கும்போது பெயர், உருவம் – என்றவற்றின் நினைவு வருவதன் மூலம், மனம் பொருளின் மீது பற்றுக் கொள்ளத் தொடங்கினால், அந்த நினைவைப் பிடிவாதமாக மறந்து, நாமும் பிரமமும் ஒன்றே ஆதலின் அந்த நினைவிலேயே ஒன்றியிருக்க வேண்டும். பிரம நினைவு, நாமரூபநாட்டத்தை மறக்கச் செய்யும். பிரமநினைவோடு இருந்து சாதனை செய்ய வேண்டும்.

**தன்னைச் சீவபாவனையாகக் காண்கிறதே பிறவி; தன்னைச் சிவரூபமாய்க் காக்கிறதே மோட்சம். 24.**

*பதவுரை* : (ஒருவன்) தன்னை–; சீவபாவனையாக – பிரமத்தின் வேறாக உள்ள ஜீவன் (உயிர்) என்று தீர்மானமாகக் கருதிக் கொள்ளும் பொழுது; காண்கின்றதே – அனுபவித்து அறிவது; பிறவி – இவ்வுலகத்தில் உள்ள வாழ்க்கை. (அவன்) தன்னை –; சிவரூபமாய் – பிரம்மமே என்று; காண்கிறதே – உணரும் நிலையே; மோட்சம் –;

*விளக்கம்* : பிரமம் தன் மாயா சக்தியினால் கீழான பிரகிருதி ஆகிய உலகமாகவும், மேலான பிரகிருதி ஆகிய சீவனாகவும் ஆகியிருக்கிறது. அது மாயையால் உண்டாக்கிய மனம் முதலிய அந்தக் கரணங்களால் இந்தப் பிரகிருதிகளை உண்மை என்று நம்பி, அனுபவங்களையும் சீவன் அடைகின்றது. ஆத்மசாதனை செய்து, அந்தக் கரணங்களைப் போக்கிக் கொண்டால், சீவனே சிவமாகி விடுவான். சிவபாவனை – தன்னைச் சிவம் என்றே கருதிக் கொள்கின்ற கருத்து (சிவோகம் பாவனை). இது உறுதிப்பட பட சீவன் சிவமே – பிரமமே – ஆகின்றான். சீவாத்மா, பரமாத்மா – என இரண்டு ஆத்மா இல்லை. சீவாத்மாவே பரமாத்மா ஆகிய தன் சொரூபத்தைத் தெரிந்து கொள்கின்றது. இதற்கு மனத்தை ஒருநிலைப்படுத்தி, வென்று, பிறகு அறவே நீக்க வேண்டும்.

**சகல கலை ஞான வல்லவர்களுக்கும் நிராசை வேண்டுவது தான். 25.**

*பதவுரை* : சகல – அனைத்து; கலை ஞானம் – கலைகளைப் பற்றிய ஞானம்; வல்லவர்களுக்கும் – கைவரப் பெற்றவர்களுக்கும்; நிராசை – ஆசையற்ற தன்மை; வேண்டுவதுதான்–;

*விளக்கம்* : பிறவியை உண்டாக்குவது ஆசை: அதை நீக்குவது நிராசை. நிராசை உடையவனது மனம் சலனமின்றி இருக்கும். அதில் ஆத்ம சொரூபம் விளங்கும். நிராசை என்பது விருப்பு வெறுப்பு அற்ற தன்மை.

**எல்லாம் சிவன் செயல்தான். 26.**

*விளக்கம்* : எல்லாச் சீவர்களும் பிரமம். ஆகவே சீவர்களின் செயல் எல்லாம் பிரமம் சங்கற்ப மாத்திரையாய்ச் செய்யும் செயல்களே.

சீவர்கள் தன்முனைப்பால் தீய செயல் செய்து, அது சிவன் செயல் என்று கூறித் தப்ப முடியாது. அதனில் விளையும் பாவத்தை அனுபவித்தே தீரவேண்டும். நல்ல செயல்

செய்யும் பொழுதும் தன்முனைப்புடன் செய்யலாகாது. நம் எண்ணமும் இறைவன் திருவுள்ளமும் ஒத்திருப்பின், நம் செயலுக்கு நல்ல பயன் கிடைக்கும். அது கிடைக்காதபொழுது, எல்லாம் சிவன் செயல் என்று அமைதியடைய வேண்டும்.

எந்த நிகழ்ச்சியையும் நாம் எதிர்கொள்ளும் பொழுது, அது 'சிவன் செயல்' என்று, ஏற்றுக் கொள்ள வேண்டும்.

**எல்லாம் சிவாகாரம் தான். 27.**

*பதவுரை* : எல்லாம் – சீவர்களும் பொருள்களும்; சிவாகாரம்தான் – (புறத்தில் எவ்வடிவம் உடையவையாக இருப்பினும்) அகத்தில் பிரம சொரூபமே ஆகும்.

**சிற்றறிவிலேதான் உயர்வு தாழ்வான தாரதம்மியங்கள். 28.**

*பதவுரை* : சிற்றறிவிலேதான் – சீவர்கள் சிற்றறிவு உடையவையாய் இருக்கும் பொழுதுதான்; உயர்வு தாழ்வான–பிரபஞ்சத்தில் உள்ள பொருள்களுள் சில உயர்வானவை என்றும், மற்றும் சில தாழ்வானவை என்றும் கருதும்; தார தம்மியங்கள்– வேறுபாட்டு உணர்ச்சி தோன்றும்.

*விளக்கம்* : சீவன் பிரம ஞானம் பெற்று உயர்ந்தால் அதன் அறிவில், அனைத்தும் சமமாகத் தோன்றும். விமானத்தில் செல்பவனுக்குப் பூமியில் உள்ள கட்டிடங்களின் உயர்வு தாழ்வு புலப்படாது. அனைத்தும் ஒரே உயரம் உடையவையாகத் தெரியும். அதுபோல நாம் எவ்வளவிற்கு எவ்வளவு அறிவில் உயர்கின்றோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு பொருள்களின் வேறுபாடு நமக்குப் புலப்படாது.

**பேரறிவிலே சமசாட்சிதான். 29.**

*பதவுரை* : பிரமஞானம் பெற்றவர்களுக்குப் பேரறிவு உண்டாகும். அதனால் எல்லாவற்றுக்கும் பொதுவான சாட்சியாகிய ஆத்மாவை அவர் உணர்வார். ஆத்மா சமீபத்திலிருந்து சீவன் செய்வதை எல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிறது. சீவன் ஒன்றைப் பார்க்கும் போது அதனுடைய அறிவிற்கு ஏற்ப அதைப் புரிந்து கொள்ளும். ஆதலால் சீவ சாட்சியில் வேறுபாடு உண்டு. ஆனால் ஈஸ்வரன் பேரறிவு உடையவன் ஆதலால் ஈஸ்வரசாட்சியில் வேறுபாடில்லை.

**உபசாந்தத்தில் சச்சிதானந்தம் மூன்றும் அனுபவமாய் காணவேண்டும். 30.**

*பதவுரை*: உபசாந்தத்தில் – சீவன் உபசாந்தம் என்னும் நிலையை அடையும் போது; சச்சிதானந்தம் மூன்றும் – சத்து, சித்து, ஆனந்தம் என்ற மூன்றையும்; அனுபவமாய் – அனுபவத்தில்; காணவேண்டும் – ஒன்றாகக் காணவேண்டும்.

*விளக்கம்* : ஆத்மாவின் இலக்கணம் சத்துசித்து ஆனந்தம் என்பவை. இந்த மூன்றையும் ஆத்மாவின் வடிவம் என்பர். இவற்றை மூன்று விஷயங்கள் என்று எண்ணக் கூடாது. இந்த மூன்றையும் ஒன்றாக அனுபவிக்கவேண்டும்.

பிரபஞ்சத்தில் தோன்றும் பேதங்கள் எல்லாம் சிற்றறிவிலேதான் என்று அறிய வேண்டும். 31.

*பதவுரை* : பிரபஞ்சத்தில் – உலகத்தில்; தோன்றும் –; பேதங்கள் எல்லாம் – பொருள்களில் உள்ள வேறுபாடுகளெல்லாம்; சிற்றறிவிலேதான் – சீவன் சிற்றறிவு உடையதாக இருக்கும்போது தான்; என்று அறிய வேண்டும்–;

எல்லாம் உன்னுடைய செயலே ஆனால், கொடுத்தது யார்; வாங்கினது யார்? 32.

*விளக்கம்* : செய்பவன் ஆத்மாவே. ஒரு பொருளைக் கொடுப்பதும் ஆத்மாவே, அதை வாங்குவதும் ஆத்மாவே.

ஈதனைத்துஞ் சொரூபமே; யான் இங்கெதை இச்சிப்பேன்? எதை இகழ்வேன்? எனல் பற்றின்மை. இதில் யாருக்கும் நம்பிக்கை வரவேண்டுவதுதான். 33.

*விளக்கம்* : உலகத்தில் உள்ள பொருள்கள் எல்லாம் பிரமசொரூபமேயாகும். ஆகவே எனக்கு (சீவனுக்கு) விருப்புவெறுப்பு உண்டாகக் காரணம் இல்லை. இதை உணர்ந்து இருப்பதே பற்று இல்லாமை ஆகும். சாதகனுக்கு இவ்வாறு பற்று இன்றி இருப்பதில் நம்பிக்கை அவசியமாக ஏற்பட வேண்டும். நம்பிக்கை என்பது சூரியனைப்போன்றது. நம்முடைய மனம் தாமரையைப் போன்றது. சூரியன் உதயமானால் தாமரை மலரும். அதுபோல நம்பிக்கை வந்தால் நம்முடைய மனம் விரிவடையும்.

தேகோக புத்தியினாலே அருந்தல்; இதனாலே பொருந்தல்; இதனாலே சகல ஆசையும் வந்தன. 34.

*விளக்கம்* : சீவனுக்குத் தேகமே நான் என்ற உணர்வு உள்ளமையால் தேகத்தில் உள்ள ஐம்பொறிகளின் மூலமாக வரும் விருப்பத்தை அல்லது தேவையை நிறைவேற்றிக்கொள்வதற்கு உணவு உண்ணுகிறோம். சிற்றின்பத்தை அனுபவிக்கிறோம். அது மட்டுமின்றி, பொருள்களின் மீது ஆசைகொள்கிறோம். நான் தேகம் அல்ல என்ற உணர்வு வந்தால் எவ்வகையான ஆசையும் தேவையும் தோன்றாது.

நிருவிகல்ப சமாதியில் என்ன தோற்றம் வந்தாலும் தன்னைத் திருக்காகவே காணவேண்டுவதுதான். 35.

*விளக்கம்* : சமாதி இருவகைப்படும் ஒன்று, சவிகல்ப சமாதி, மற்றொன்று, நிருவிகல்ப சமாதி. சவிகல்ப சமாதி என்பது, தியானத்தில் ஏதேனும் ஒரு தோற்றத்தை நிறுத்தி, அதில் இரண்டறக் கலப்பதாகும். (ஒன்றி நிற்பதாகும்). நிருவிகல்ப சமாதியில் ஒரு தோற்றமும் தோன்றக் கூடாது. சவிகல்ப சமாதியில் தோற்றமாக

வைத்துக்கொள்ளத் தக்கவை மூன்று. அவை அறிபவன் (ஞாதா), அறியப்படும் பொருள் (நேயம்), அறிவு (ஞானம்) என்பவை.

ஆத்ம சொரூபத்தை உணர்வதற்காக நிருவிகற்ப சமாதியை அடையச் சாதகம் செய்பவனுக்கு இந்தத் தோற்றங்கள் வரக்கூடும், வந்தால், ஆத்மாவை ஞானம் என்றே கருதவேண்டும். அதாவது ஞாதா, நேயம் – இவற்றின் தோற்றம் வந்தாலும், அவை ஆத்மா அல்ல; ஞானமே ஆத்மா என்று கருதிச் சாதனை செய்ய வேண்டும். இச்சாதனையின் முடிவில் ஆத்ம சொரூபம் புலப்படும்.

**பிரபஞ்சத்தில், பஞ்ச விடய சுகத்தில் பொருந்தும் போது**
**பிரியமாய் இருக்கும். பிற்பாடு, தனக்குத் தானே வெறுப்புக்**
**காணும். இது போல, தன் சொரூப சுகத்தில் பொருந்தும்**
**போதும் பிரியம் வரும். எத்தனை நாள் இருந்தாலும் பிரியம்**
**வாங்காது. 36.**

*பதவுரை*: பிரபஞ்சத்தில் –; பஞ்ச விடய சுகத்தில் – புலன் இன்பத்தில்; பொருந்தும் போது பிரியமாய் இருக்கும் – திளைக்கும் போது அதில் ஈடுபாடு இருக்கும்; பிற்பாடு, தனக்குத் தானே வெறுப்புக்காணும் – பிறகு அதில் வெறுப்புத் தோன்றும். இதுபோல– ; தன் சொரூப சுகத்தில் பொருந்தும் போது–தான் ஆத்மா என்று உணரும் போது; பிரியம் வரும் –; எத்தனை நாள் இருந்தாலும் –; பிரியம் வாங்காது – ஈடுபாடு மாறாது. "ஆராத இன்பம் அருளும் மலை போற்றி" என்ற திருவாசகம் காண்க.

ஆற்றில் வெள்ளம் வரும்போது இரு கரைகளிலும் பறவைகள் அமர்ந்து நீர் பருகும். அவ்வாறு, எத்துணைப் பறவைகள், எத்துணை நேரம் பருகினும் தண்ணீர் குறையாது. அது போலப் பிரமானந்தம் குறைபடாது. அதுபற்றி அது 'நித்யானந்தம்' எனப்படும்.

**சமுத்திரத்தில் முன் வந்த அலை போய், பின் அலை வருகிறதற்கு**
**முன்னாலே, சமுத்திரம் மாத்திரம் இருந்தது போல,**
**தன்னிடத்திலும் முன்னாலே வந்த 'கட பட நினைவு' போய்,**
**பின்னாலே வருகிற நினைவுக்கு முன் தான் இருந்தது.**
**இதனாலே, பிரபஞ்சம் அசத்து ; தான் சத்து. தன்னை**
**அனுபவிக்கிறதும் இந்த நிலைதான். 37.**

*விளக்கம்* : கடலில் ஓர் அலை தோன்றி மலை போல் எழுந்து, கரையை நோக்கி வந்து மறையும். அடுத்த அலை எழுவதற்குச் சிறிது நேரமாகும். அப்போது கடல் மட்டுமே உள்ளது. அலை தோன்றி மறைய, கடலோ எப்போதும் இருந்துகொண்டிருக்கிறது. அது போல, ஆத்மாவிடம் ஒரு பொருளைப் பற்றிய ஓர் எண்ணம் தோன்றி, மறக்கப் பட்டு, பின்பு அடுத்த எண்ணம் தோன்றுவதற்குமுன், ஆத்மா மட்டும் இருக்கிறது. அதாவது, எண்ணம் தோன்றி மறைய ஆத்மா இருந்து கொண்டிருக்கிறது. ஆதலால் உலகம் இல்பொருள் ; ஆத்மா உள்பொருள், பொருள்களை அனுபவிக்கும் அனுபவம் பொய். ஆத்மாவை உணரும் அனுபவம் உண்மை.

ஆத்மா என்ற பற்றுக்கோடு (ஆசிரயம்) இருப்பதால். அதில் பொருள் பற்றிய எண்ணம் தோற்றுகின்றது.

**பூமியில் உண்டான வஸ்துக்களைக் கற்பிதம் என்றும், தன்மயம் என்றும் சொல்லலாம். இது போல, சிதாகாசத்திற்கு மேலில்லாதபடியினாலே, அதில் உண்டானவைகளைக் கற்பிதம் என்றும் தன்மயம் என்றும் சொல்லலாம். 38.**

*விளக்கம்* : உலகில் உள்ள பொருள்களை, சீவாத்மா கற்பித்துக் கொண்ட பொருள்கள் என்று கூறலாம். அல்லது அவை பிரம சொரூபம் என்று கூறலாம். அதுபோல, சிதாகாசத்திற்கு (அறிவுவெளி) அன்னியமாக ஒன்றுமில்லை ஆதலால், அதில் தோன்றும் அனுபவத்தை ஆத்மாவின் (பரமாத்மா) கற்பிதம் என்று கூறுவதும் சரியே. தன்மயம் என்று கூறுவதும் சரியே. ஏனெனில் சிதாகாசம், தன்னிடம் தோன்றும் அனுபவமாக, தானே ஆகிவிடுகிறது. "யத் பாவ தத் பவதி" என்பது வேத மொழி.

**வகையாகக் கண்டு மயங்காமல், தொகையாகக் கண்டு சும்மா இருக்க வேண்டும். 39.**

*பதவுரை* : வகையாகக் கண்டு – பிரபஞ்சத்தில் உள்ள பொருள்களை அவற்றின் வடிவம், நிறம், தன்மை, பயன் ஆகியவை வேறுவேறாக இருத்தலைக் கொண்டு, பற்பல வகையைச் சேர்ந்தவை என்று கருதி; மயங்காமல் – அவற்றின் மீது பற்றுக் கொண்டு மனச் சஞ்சலம் அடையாமல்; தொகையாகக் கண்டு – அவை அனைத்தும் பிரம சொரூபம் என்ற ஒன்றே; பிரமத்தின் சங்கல்பத்தினால் உண்டான மாயத் தோற்றமே என்று உணர்ந்து; சும்மா இருக்க வேண்டும் – புத்தியில் சலன மின்றி இருக்க வேண்டும்.

*விளக்கம்* : பிரபஞ்சத்தில் உள்ள பொருள்களின் புறத்தோற்றம் வேறு வேறாக இருப்பதைக் கண்டு, அவை பல என்று உணரலாகாது. உண்மையில், அது மாயத் தோற்றம். அவை பிரமத்தின் மாயா லீலை. உள்ளது ஒன்றே. அது பிரமம். அதை உணர்ந்தால் பற்றுத் தோன்றாது.

**சாது சங்கமே சகல கலை. சன்மார்க்கத்திற்கும் ஏது. 40.**

*பதவுரை* : சாது சங்கமே – ஞானிகளுடைய கூட்டுறவே; சகல கலைக்கும் – அனைத்து வேத, சாத்திரக் கல்விக்கும்; சன்மார்க்கத்திற்கும் – நல்வழிக்கும்; ஏது – காரணமாகும்.

கலை ஞானம் அபர ஞானம்; சன்மார்க்கம் பர ஞானம். இவ்விரண்டையும் பெறுதற்கு ஞானிகளுடைய சன்னிதியில் இருக்க வேண்டும். கலா:க–பிரமம் லா–அதனைக் காட்டுவது, "கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை" என்ற திருவிசைப்பாவை நோக்குக.

உபசாந்தத்தில் காண்பான் காட்சி இல்லை. 41.

பதவுரை: உபசாந்தத்தில் – உபசாந்தம் என்னும் நிலையில்; காண்பான் – அறிபவனாகிய ஞாதாவும்; காட்சி–அறியப்படும் பொருளாகிய ஞேயமும் இல்லை. வேறு வேறு அல்ல.

*விளக்கம்* : காண்பான் சாதகன். அவன் உபசாந்தம் என்ற இன்ப துன்ப உணர்வு அற்ற நிலையை அடையும் பொழுது, அவன் ஆத்மாவைத் தன்னின் வேறான பொருளாகக் காண்பதில்லை. ஆத்மாவாக அவனே இருக்கிறான்.

மேல் நனவு போல இரா நின்ற துரிய
நிலையில்தான் சர்வதுக்க நிவர்த்தியாம். 42.

*விளக்கம்* : துரியம் என்பது நான்காவது உணர்வுநிலை. சாக்கிரம் என்ற விழிப்புநிலை, சொப்பனம் என்ற கனவுநிலை, சுழுத்தி என்ற உறக்க நிலை என்ற மூன்று உணர்வு நிலைகளையும் கடந்தால் வருவது துரியம். இது முன்னைய உணர்வு நிலைகளில் கலந்தும், அவற்றைக் கடந்தும் இருப்பது. இந்த உணர்வுநிலையிலேயே ஆத்ம சொரூபம் உணரப்படும். ஆதலின் பரமாத்மாவிற்குத் துரியம் என்றே ஒரு பெயர் உண்டு.

உற்றவாறு எது வரும்? அது வருக. 43.

*பதவுரை* : உற்றவாறு – வினைப்பயனாக; எது வரும்–நமக்கு வரவேண்டிய இன்பம் அல்லது துன்பம்; அது வருக–;

*விளக்கம்* : வினைப் பயனை அனுபவித்தே தீர வேண்டும். அவ்வாறு இன்பம் வரினும், எக்களிப்புக் கொள்ளாமல் இருப்பதும், துன்பம் வரினும் அதைப் பொறுமையுடன் அனுபவிப்பதும் ஞானியின் தன்மை. இதனைச் 'சம புத்தி' என்பர். இன்ப துன்பங்களால் மனச் சலனம் இன்றி இருப்பதே ஞானியின் சிறப்பியல்பு.

எல்லாம் கதை தான். 44.

*பதவுரை* : எல்லாம் – பிரபஞ்சத்தில் உள்ளவை அனைத்தும்; கதைதான் – உண்மையல்ல; நம் கற்பனையில் தோன்றுபவை ஆதலின் கதையே ஆகும்.

எல்லாம் புலம்பல்தான். 45.

*பதவுரை* : எல்லாம் – பிரபஞ்சத்தில் விடயங்களை அனுபவித்து நாம் செய்வது; புலம்பல் தான் – அந்த அனுபவம் என்று விலகும்? அதனால் வந்த மனச்சலனம் என்று நீங்கும்? என்ற புலம்பலே ஆகும்.

"ஓயாக் கவலையினால் உள்ளுடைவு வாராமல் மாயாப் பிறப்பு மயக்கறுப்பது எக்காலம்" என்று பத்திர கிரியார் புலம்புவது காண்க.

பிறர் குற்றத்தைத் தனதாக எண்ணிக் கொண்டு, தன் குற்றத்தை விசாரிக்க வேண்டும். **46.**

பதவுரை: பிறர் குற்றத்தை – பிறர் எண்ணம், சொல், செயல்களால் செய்யும் குற்றத்தை; தனதாக எண்ணிக்கொண்டு – யாவரும் பிரம சொரூபமே ஆதலால், தான் செய்தவையாகவே கருதி; தன் குற்றத்தை – தான் செய்யும் குற்றத்தை–தன்னுடையவையாகக் கருதிக் கொள்ளும் குற்றத்தையும்; விசாரிக்க வேண்டும் – செய்தவர் யார் என்பதை விடுத்து, குற்றத்தின் நோக்கில், (objectively) அக் குற்றம் எத்தகையது? அதனால் விளைந்த, விளையக் கூடிய தீமை என்ன? அக்குற்றம் ஏன் செய்யப்பட்டது? அது தற்செயலாக நிகழ்ந்ததா, ஒரு நோக்கத்துடன் நிகழ்ந்ததா? என்று, விருப்பு வெறுப்பின்றி ஆராய வேண்டும்.

*விளக்கம்* : இவ்வாறு பொருள் நோக்கில் ஆராய்வதால் ஆராய்ச்சி தவறின்றி நிகழும். குற்றத்தின் தன்மை தெளிவாக வரையறுத்து உணரப்படும். அதன் மூலகாரணம் அறியப்படும். அதற்குரிய தண்டனையை எதிர்நோக்கத் தைரியம் உண்டாகும், பிறர் செய்யும் குற்றத்திற்குத் தான் தண்டனை அனுபவிப்பதால், பிறர் உணர்ந்து திருந்துவர்; இவ்வாறு ஆராய்ச்சி செய்து, தண்டனையை அனுபவிப்பது, 'எல்லாம் பிரமம்' என்ற உண்மையை அனுபவத்திற்குக் கொண்டுவருதலாகும். அது வெறும் வாய் வேதாந்தமாக இருத்தலாகாது. குற்றம் நீங்க வேண்டும் என்பது முக்கியமே தவிர, ஓர் ஆள் துன்பத்தைத் தாங்குவது முக்கியம் அன்று.

சிற்றறிவாகிய சீவ அறிவே எல்லாவற்றுக்கும் மூலம். **47.**

*பதவுரை* : சிற்றறிவு ஆகிய – குறுகிய தன்மை உடைய அறிவாகிய; சீவ அறிவே – சீவனின் அறிவே; எல்லாவற்றுக்கும் – அனைத்துத் தீமைகளுக்கும்; மூலம் – காரணம்.

*விளக்கம்* : சீவனின் அறிவு அறியாமையால் பந்தப் பட்டுள்ளது. அவ்வறியாமையே குற்றங்கள் உண்டாவதற்கும், அவற்றால் தீமை விளைவதற்கும் காரணமாகும். பிறர் குற்றத்தைத் தனதாகக் கொள்ளும் போது, 'எல்லாம் பிரம மயம்' என்ற உண்மையை அனுபவத்திற்குக் கொண்டு வரலாம். ஆதலின் சிற்றறிவாக உள்ள குறைபாடு நீங்கும். தான் குற்றம் செய்வதற்குச் காரணமாக உள்ள காமம், கோபம் முதலியவையும் நீங்கும். 'நான் யார்?' என்று விசாரித்து, சீவனாக உள்ளவன் அல்ல; நான் பிரமம் என்று உணர்ந்தால் குற்றம் விளையாது.

மனம் முதலாகிய பிரபஞ்ச இயல்புகளும் மேகாடம்பரந்தான். **48.**

*பதவுரை* : மனம் முதலாகிய – மனம், புத்தி, சித்தம், அகங்காரம் முதலிய; பிரபஞ்ச இயல்புகளும் – உயிரின் தத்துவங்கள் யாவும்; மேக ஆடம்பரம் தான் – மேகம் எவ்வாறு (நீராவியாகத் தோன்றி, மழை பொழிந்தவுடன் மறைகிறதோ) அவ்வாறு தோன்றி மறைவனவே. நிலையானவை அல்ல.

*விளக்கம்* : காலையில் உள்ள எண்ணம் மாலையில் இல்லாமற் போவதை யாவரும் அறிவர். மனம் முக்கிமானது ஆதலின் அதைக் கூறினார். பிரபஞ்சத்தில் உள்ள தத்துவங்கள் எல்லாம் தோன்றி மறைவனவே ஆகும்.

ஞான நாட்டத்திலே சிரத்தையும், பிரபஞ்ச நாட்டத்திலே அசிரத்தையும் வேண்டும். **49.**

*பதவுரை* : ஞான நாட்டத்தில் – மெய்ஞ்ஞானம் பெற வேண்டும் என்ற கருத்தில் ; சிரத்தையும் – ஆர்வமும் ஊக்கமும்; வேண்டும்; பிரபஞ்ச நாட்டத்தில் – உலகியல் மேல் கொள்ளும் கருத்தை ; அசிரத்தையும் வேண்டும் – அலட்சியம் செய்ய வேண்டும்.

*விளக்கம்* : ஞானம் முத்தி தரும். உலகியல் பந்த பாசத்தை உண்டாக்கும்

தத்துவ, அதத்துவ விசாரம் பண்ணி, அதத்துவத்தைத் தள்ளி, தத்துவத்தைத் 'நான் ஆகக்' கண்டு, சந்தேக, விபரீதம் அற இருக்க வேண்டும் **50.**

*பதவுரை* : தத்துவ, அதத்துவ விசாரம் பண்ணி – உண்மைப் பொருள் எது, மெய்ப்பொருள் எது என்று ஆராய்ந்து; அதத்துவத்தைத் தள்ளி – பொய்ப் பொருளை விலக்கி; தத்துவத்தை – உண்மைப் பொருளை; 'தான்' ஆகக் கண்டு – ஆத்மாவாக உணர்ந்து; சந்தேகம் – ஐயமும் ; விபரீதம் – மயக்கமும்; அற – இல்லாமல்; இருக்க வேண்டும் – உயர வேண்டும்.

*விளக்கம்* : மெய்ப் பொருள் – பிரமம். பொய்ப் பொருள் – பிரபஞ்சம். சந்தேகம் – அதுவோ இதுவோ என்று குழப்பம் அடைதல். விபரீதம் – ஒன்றை மற்றொன்றாகத் துணிதல்.

சனன, மரணமும் நினைவு மாத்திரமே. **51.**

*பதவுரை*: சனனம் – பிறப்பும் ; மரணம் – இறப்பும்; நினைவு மாத்திரமே – சீவனின் கற்பனைதான்.

*விளக்கம்* : ஆத்மாவே சீவனாகத் தோன்றுகின்றது. ஆத்மா பிறப்பதுமில்லை; இறப்பதுமில்லை. அது என்றும் உள்ள பொருள். அதனால் அது 'சத்' எனப்படும்.

நாம ரூபமாய் நாடுவதைத் தள்ளிச் சொரூபமாக நாடுவதே சமநிலை. **52.**

*பதவுரை* : நாம, ரூபமாக – பிரபஞ்சப் பொருள்களை அடையவேண்டும் என்று; நாடுவதை – முயல்வதை; தள்ளி –; சொரூபமாக – அவற்றை ஆத்மா என்றே; நாடுவதே –உணர்ந்து சும்மா இருப்பதே; சமநிலை – மனத்தின் நடு நிலைமை ஆகும்.

*விளக்கம்* : பெயரையும் உருவத்தையும் உடையவை உலகப் பொருள்கள். அவற்றில் இச்சை வைக்கக்கூடாது. அவையாகக் தோன்றுவது ஆத்மாவே. அதை உணர்ந்து, மனச் சலனம் இன்றி வாழ வேண்டும்.

**குரு வாக்கியத்தில் சந்தேக, விபரீதம் இன்றி இருக்கிறது மெய்ப்புருடார்த்தம். 53.**

*பதவுரை :* குரு வாக்கியத்தில் – குருவின் உபதேசத்தில்; சந்தேகம் –ஐயமும்; விபரீதம் – மயக்கமும்; இன்றி –; இருக்கிறது – கடைப்பிடிப்பது; மெய்ப் புருஷார்த்தம் – உண்மைப் பயன் ஆகும்.

*விளக்கம் :* குருவின் உபதேசத்தை நன்கு சிந்தித்துத் தெளிவுபெற வேண்டும். ஏனெனில், அதுவே முத்திக் கரை சேர்க்கும் தோணி. அது ஆப்த வாக்கியம். அதை அன்றி நன்மையடைய வேறு வழி இல்லை.

**தன் சுபாவ நிலையில் நினைவுக்கு**
**நித்தியத்துவம் இல்லாத படியினாலே,**
**பிரபஞ்சம் மித்தை தான். 54.**

பதவுரை: தன் சுபாவ நிலையில் – ஆத்ம சொரூபத்தில்; நினைவுக்கு நித்யத்துவம் இல்லாதபடியினாலே – எப்பொழுதும் நிலைத்திருக்க முடியாது என்பது கண்கூடு ஆதலால்; பிரபஞ்சம் – உலகம்; மித்தை தான் – பொய்யே ஆகும்.

*விளக்கம் :* உலக எண்ணம், ஒருவனை ஆத்ம சொரூபத்தில் நிலைத்திருக்க விடாது. அக்காரணத்தால், அது பொய்ப் பொருளாகும்.

**அதிட்டான ஞான நிலைமை உள்ளவர்களுக்கு எல்லாம் ஆகிய அத்துவித ஞானமும் வரும். 55.**

*பதவுரை :* அதிட்டான ஞான நிலைமை – சொரூப ஞானம் நிலைத்திருக்கும் தன்மை; உள்ளவர்களுக்கு –; எல்லாம் ஆகும் – எல்லா வடிவமும் ஆகும்; அத்துவித ஞானமும் – பொருள் ஏகம் என்ற தெளிவும்; வரும் – உண்டாகும்.

*விளக்கம் :* அதிட்டானம் – இவ் உரைநடைப் பகுதியில், 20 ஆவது வாக்கியத்தில் விளக்கப்பட்டது.

**பற்றின்மை ஆகிய துரிய நிலைமை உள்ளவர்களுக்குப் போன காரியத்திலும், வருகிற காரியத்திலும் நினைவு தோன்றாமல் இருந்தால், சாட்சாத்காரம் தான். 56.**

*பதவுரை :* பற்றின்மை ஆகிய – எதன் மீதும் பற்றுக் கொள்ளாமை ஆகிய; துரிய நிலைமை – துரியம் என்ற உணர்வுநிலை; உள்ளவர்களுக்கு – கைவரப் பெற்றவர்களுக்கு; போன காரியத்திலும் – கடந்துபோன செயல்களிலும்; வருகிற – நிகழவிருக்கும் ; காரியத்திலும் – செயல்களிலும் ; நினைவு தோன்றாமலிருந்தால்–; சாட்சாத்காரம் தான் – சொரூபம் பிரத்தியட்சமாக (கண்கூடாக) இருப்பதாக ஆகும்.

*விளக்கம்* : துரியம் – ஆத்மா என்ற உணர்வு. அதற்குப் பற்றுக்கொள்ளுதலும் இல்லை. பற்றில்லாமை என்பதும் இல்லை. இவற்றைக் கடந்த உணர்வு அது.

**தான் சித்து ரூபன் என்கிற புத்தி வாங்காமல் இருந்தால், நான், நீ என்கின்ற பேதமாகிய அஞ்ஞான நீக்கம் வரும். 57.**

*பதவுரை* : தான் – ஆத்மா; சித்து ரூபன் – அறிவே வடிவமானது; என்கிற –; புத்தி – அறிவு ; வாங்காமல் இருந்தால் – மாறாமல் இருந்தால்; நான், நீ என்கின்ற – நான் வேறு; நீ வேறு என்று கூறும் ; பேதம் ஆகிய – வேறுபாட்டு உணர்வு ஆகிய; அஞ்ஞாமை நீக்கம் வரும் – அறியாமை நீங்கும்.

*விளக்கம்* : வேறுபாட்டுணர்வுக்குக் காரணம் அறியாமை. அது போகும்.

**நிகழ் காலமாகிய எதிர்காலத்தில் செய்காரியங்களை, பின் வருத்தமும் சௌக்கியமும் அறிந்து செய்ய வேண்டும். 58.**

*பதவுரை* : நிகழ் காலமாகிய – நிகழ் காலத்தை ஒட்டி வருகின்ற எதிர் காலத்தில் – செய்காரியங்களை – செய்யும் செயல்களை; பின் – சற்றுத் தள்ளி வரும் எதிர்காலத்தில்; வருத்தமும் – துன்பம் வருமா என்பதையும் ; சௌக்கியம் – இன்பம் வருமா என்பதையும்; அறிந்து செய்ய வேண்டும் –;

*விளக்கம்* : "எண்ணித் துணிக கருமம்" என்ற திருக்குறளையும் நினைக.

**அக்கினியில் எவ்வளவு பொறி கிளம்பினாலும்; அக்கினிக்கு லாபம் இல்லாதது போல பூரணமான தன்னிடத்தில், தேகாதி முதலாய் வாழ்ந்ததாயும், தாழ்ந்ததாயும் உள்ள என்ன நினைவு வந்தாலும் கற்பிதமே ; தான் நித்தியம். 59.**

*பதவுரை* : அக்கினியில் – மூண்டு எரியும் நெருப்பில்; எவ்வளவு பொறி கிளம்பினாலும்–;அக்கினிக்கு லாபம் இல்லாதது போல – அதனால் நெருப்பு அதிகமாகாதது போல; பூரணமான – எங்கும் நிறைந்துள்ள ; தன்னிடத்தில் – ஆத்மாவினிடம்; தேகாதி முதலிய – சீவனின் உடம்பும் அதில் உள்ள அகக் கருவி, புறக் கருவிகளும்; வாழ்ந்ததாயும் –; தாழ்ந்ததாயும் –; என்ன நினைவு வந்தாலும் – சீவனுக்கு என்ன நினைவு தோன்றினாலும்; கற்பிதமே – அது அச்சீவன் கற்பித்துக் கொண்டதே – அதாவது, பொய்யே; தான் – (ஆனால்) ஆத்மா; நித்தியம் – உண்மைப் பொருள்.

**எல்லாமானதாகக் தன்னை அறிந்தால், ஈதலும், இரக்கமும் வரும்; ராகத் துவேஷம் வராது. 60.**

*பதவுரை*: தன்னை – சீவன் தன்னை; எல்லாம் ஆனாதாக – ஆத்மாவாக, எங்கும் உள்ள பொருளாக; அறிந்தால்–; ஈதலும் – ஓர் உயிர் படும் துன்பத்தை நீக்கப் பொருள் கொடுத்தலும்; இரக்கமும்–; வரும்–; ராகம் – விருப்பும்; துவேஷம் – வெறுப்பும்; வராது.

*விளக்கம்* : எல்லாம் ஈசன் என அறிந்தால், எவ்வளவு சீவர்களுக்கும் உதவும் எண்ணம் உண்டாகும். எப்பொருள்களையும் விரும்புதலோ வெறுத்தலோ உண்டாகாது.

**தன்னிடத்தில் பெருமை, சிறுமை, பகை, உறவு, சுக துக்கமாய் வருகிற சங்கற்பம் கற்பிதம்; ஆரோபம்; அத்தியாசந்தான். 61.**

*பதவுரை* : தன்னிடத்தில் – சீவனிடம் ; பெருமை, சிறுமை – பெருமை என்றும் சிறுமை என்றும் ; பகை, உறவு – பகை என்றும் உறவு என்றும்; சுக துக்கமாய் – சுகம் என்றும் துன்பம் என்றும் ; வருகிற – தோன்றும் ; சங்கற்பம் – எண்ணம்; கற்பிதம் – பொய்யாகும். ஆரோபம் – ஒன்றில் மற்றொன்றை ஏற்றிக் கூறுதலாகும். அத்தியாசம் – தன்னிடம் இல்லாத ஒன்றைத் தன்மேல் ஏற்றிக் கூறுதலாகும்.

**சரீரம் முதலான பிரபஞ்சம் காலத்தில் உட்பட்ட படியினாலே, அதனிடத்து வாரா நின்ற உயர்வு, தாழ்வு, வருத்தங்களுக்குப் பிரமாணம் இல்லை. 62.**

*பதவுரை* : சரீரம் முதலிய – உடம்பு முதலிய; பிரபஞ்சம் – உலகப் பொருள்கள்; காலத்திலுட்பட்ட படியினாலே – குறிப்பிட்ட காலத்தில் தோன்றி, இருந்து, பின் மறைபவை ஆகையால்; அதனிடம் – அதற்கு; வருகின்ற–; உயர்வு, தாழ்வு – பெருமைக்கும் சிறுமைக்கும்; வருத்தங்களுக்கு – துன்பங்களுக்கும்; பிரமாணம் – தகுதிப்பாடு; இல்லை. அவை பொருட்படுத்தத் தக்கவை அல்ல.

**பிரபஞ்சத்தில் விவேகத்தினாலே குணத்தைப் பொருளாய்க் கொள்ளாமல், குற்றமே காண வேண்டும். 63.**

*பதவுரை* : பிரபஞ்சத்தில் – உலகப் பொருள்களில்; விவேகத்தினால் – பகுத்தறிவால்; (குணத்தையும் குற்றத்தையும் பிரித்து அறிந்து) குணத்தைப் பொருளாய்க் கொள்ளாமல் – குணத்தைக் கருதி, ஒரு பொருள்மீது பற்று வைக்காமல்; குற்றமே காணவேண்டும் – குற்றம் காரணமாக அதிலிருந்து விலகி இருக்க வேண்டும்.

**ஒன்றிலே தோன்றி, அனைத்து உருவமுமான உணர்வுக்கு, பகை உறவு என்று உரைப்பது எங்கே? 64.**

*பதவுரை* : ஒன்றிலே – ஆத்ம சொரூபத்தில்; தோன்றி – அதன் தோற்றங்களாய் உண்டாகி; அனைத்து உருவமுமான – பல பொருள்களாய் இருக்கின்றன என்ற ; உணர்வுக்கு – உணர்வு உண்டாகுமாயின் ; பகை உறவு என்று உரைப்பது – இவன் பகைவன், இவன் உறவு என்று வேறுபடுத்திப் பேசும் பேச்சு; எங்கே – எவ்வாறு தோன்றும்?

**நான் சித்து ரூபன் என்கிற புத்தி மறந்தால், உடனே விட்சேபமும், விபரீதமும் வரும். 65.**

*பதவுரை*: நான் –; சித்து ரூபன் – ஆத்ம சொரூபம்; என்கின்ற –; புத்தி – உணர்வு; மறந்தால் –; விட்சேபமும் – மனம் நிலைகுலைதலாகிய சலனத் தன்மையும் ; விபரீதமும் – ஒன்றை மற்றொன்றாகக் காணும் மயக்க உணர்வும்; வரும்.

**சுவரிடத்தில் உள்ள சித்திரம் வஸ்து ஆகாது. அதுபோல, தன்னிடத்தில் உண்டான சர்ப்பம் முதலியவை வஸ்து ஆகாது. 66.**

*பதவுரை* : சுவரிடத்தில் உள்ள –; சித்திரம் – ஒரு பொருளின் படம்; வஸ்து – அந்தப் பொருள் ; ஆகாது –; அதுபோல–; தன்னிடத்தில் – ஆத்ம சொரூபத்தில்; உண்டான – கற்பிதமாய்த் தோன்றும்; சர்ப்பம் முதலியவை – பாம்பு முதலியவை ; வஸ்து ஆகாது – உண்மை அல்ல.

*விளக்கம்* : இவை போன்ற கற்பனைகளால் ஆத்மா நன்மையோ, தீமையோ அடைவதில்லை.

**தன்னைப் பஞ்சகிர்த்தியம் உடையவனாகக் கண்டால், ஜனன மரணம் தனக்கு இல்லை. 67.**

*பதவுரை* : தன்னை – ஆத்மாவை; பஞ்சகிருத்தியம் உடையவனாக – படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழிலும் செய்பவனாக; கண்டால் – உணர்ந்தால்; தனக்கு–ஆத்மாவுக்கு; ஜனனம்– பிறப்பும்; மரணம்–இறப்பும்; இல்லை–;

*விளக்கம்* : சீவன் ஆத்மாவின் தோற்றமே. ஆகவே சீவன் பிறப்பதும் இறப்பதும் கற்பிதமே.

**துரிய நிலையிலும், எல்லாம் சின்மயம் என்கிற நிலையிலும் புத்தி அழுத்தம் வேண்டும். 68.**

*பதவுரை* : துரிய நிலையிலும் – ஆத்ம சொரூபத்திலும்; எல்லாம்–; சின்மயம் – அறிவு வடிவம்; என்கிற நிலையிலும் –; புத்தி அழுத்தம் – சிந்தனை மறவாதிருத்தல்; வேண்டும்–;

*விளக்கம்* : இதை மறந்தால், மனத்தை மீண்டும் பந்த பாசம் பற்றும்.

**கூத்தாடியைப் போலக் கூத்து நிலையல்ல. அது போல, எல்லாம் கூத்தாகக் கண்டால் தான் நித்தியம் தான். 69.**

*பதவுரை* : கூத்தாடியைப் போல – கூத்தாடி நிலையாக உள்ளமை போல; கூத்து; நிலை அல்ல – நிலையானது அல்ல; மாறும். அதுபோல–; எல்லாம் – உலகத்து

நிகழ்ச்சிகள் யாவும்–; கூத்தாகக் கண்டால்–கூத்தாக மாறும் தன்மையை; கண்டால் – உணர்ந்து எண்ணிப் பார்க்குமிடத்து ; தான் – அந்த நிகழ்ச்சிகள் நிகழும் இடமான ஆத்மா; நித்தியம் தான் – மாறாது இருப்பவனே.

**பிரமா முதல் தம்பப் பூச்சி பரியந்தம் நிலைமை இல்லாத படியினாலே, தான் ஒருவன் மாத்திரம் இருக்கிறவன்; இதனாலும் அத்துவிதம் தான், 70.**

*பதவுரை* : பிரமா – படைப்புக் கடவுள்; முதல் –; தம்பப் பூச்சி – பூச்சி ; பரியந்தம் – வரை; நிலைமை – நிலை பேறு (நிலைத்திருக்கும் தன்மை); இல்லாதபடியினாலே – இல்லை என்பதைக் கண் கூடாகக் காண்பதால் ; தான் – அவற்றைக் காண்பவனாகிய ஆத்மா; மாத்திரம் – மட்டும்; இருக்கிறவன் – என்றும் உள்ள உண்மைப் பொருள், அதனாலும் – ஆகவே; அத்துவிதம்தான் – உண்மை இரண்டாற்றது ஆகும்.

*விளக்கம்* : காண்பவன், காணப்படுபவை – என இரண்டு உள்ளன. அவற்றுள், காணப்படுபவை நிலையற்றவை என்பதைக் காண்பவன் உணர்கின்றான், அக்காரணத்தால், அவன் நிலையான பொருள்.

**ஜகத்து எல்லாம் தன்னைத் தவிர, இல்லாத படியினாலேயும், தானே எல்லாம் ஆனதாலும் அத்துவிதம்தான். 71.**

*பதவுரை* : ஜகத் எல்லாம் – உலகமும் உலகப் பொருள்களும்; தன்னைத் தவிர – ஆத்மாவின் கற்பனை இன்றி ; இல்லாத படியினாலேயும் – உண்டாக மாட்டா ஆதலாலும்; தானே–ஆத்மாவே ; எல்லாம் – எல்லாமாகத் தோன்றுகிறது; ஆனதாலும் –; அத்துவிதம் தான் பொருள் ஏகமே (ஒன்றே).

**சரீரம் எடுத்து, விசாரம் தோன்றினவரைக்குள்ளாக வெகு விதங்களாய் 'உத்கிருஷ்டம்' என்று சொல்லப்பட்ட பேர்கள் இருக்கவில்லை. ஆனதால், தேகாதி முதலானவைகளில் என்ன திர நிலை? 72.**

பதவுரை: சரீரம் எடுத்து – ஜீவர்கள் பிறந்து; விசாரம் தோன்றின வரைக்குள்ளாக –'நான் யார்' என்ற ஆராய்ச்சி தோன்றுகின்றவரை; அந்த ஜீவர்களுள்; வெகுவிதங்களாய் – எல்லா வகையிலும்; உத்கிருஷ்டம் – உயர்ந்தோர்; என்று சொல்லப்பட்ட; பேர்கள் இருக்கவில்லை–; ஆனதால் –; தேகாதி முதலானவைகளில் – உடம்பு, செல்வம், பிற உடைமைகளில்; என்ன திர நிலை – என்ன உறுதி உள்ளது?

*விளக்கம்* : நான் யார் என்ற ஆராய்ச்சி தோன்றிவிட்டால், ஆத்மா ஒன்றே உண்மை என்று புரியும். பிற பொருள்கள் எல்லாம் அழியும் என்பது விளங்கும்.

**பிரபஞ்சம் காலத்திரயத்திலும் இல்லாதபடியினாலேயும், ஒரு நினைவு வரும்போது, ஒரு நினைவு அழிந்து**

போகிறபடியினாலேயும், காணப்பட்டன எல்லாம் அழிந்து போகிறபடியினாலேயும், மித்தை என்று சொல்லுகிறதிலே சந்தேகம் இல்லை. 73.

*பதவுரை* : பிரபஞ்சம் – உலகம்; காலத் திரயத்திலும் – மூன்று காலத்திலும்; இல்லாதபடியினாலேயும் –; ஒரு நினைவு வரும்போது ஒரு நினைவு அழிந்து போகிறபடியினாலேயும் –; காணப்பட்டன எல்லாம் –; அழிந்து போகிறபடியினாலேயும் – நிலையில்லாதவை என்று கண்கூடாகத் தெரிவதாலும்; (இவற்றை) மித்தை – பொய்; என்று–; சொல்லுகிறதிலே சந்தேகமில்லை – உறுதியாகக் கூறலாம்.

*விளக்கம்* : மாறுவனவும், அழிவனவும் பொய்யே.

திருநதித் துறைகள் எல்லாம் தீம்புனல் வறந்தவேயோ? 74.

*பதவுரை* : திருநதி – சீவநதிகளில் உள்ள; துறைகள் – கட்டங்கள் ; எல்லாம்–; தீம்புனல் – இனிய தண்ணீர்; வறந்தவேயோ – இல்லாதவையா? அல்ல.

*விளக்கம்* : அதுபோல பிரமத்தின் செயல்கள் எல்லாம் (உலகத்தை உண்டாக்கி ஆட்டிப் படைக்கும் லீலைகள்) நடந்து கொண்டேயிருக்கும். இச் சுவானுபவ வாக்கு, "அதிதோ நரக்ஷதி; சரிதோ ந ரக்ஷதி" என்ற பாகவத வாக்கியத்தின் தமிழாக்கம். 'யாவராலும் வெல்ல முடியாத நிலையில் உள்ள ஈசன் காக்கமாட்டானா என்பது இப்பாகவத வாக்கியத்தின் பொருள்.

"இட்டமுடன் என் தலையில் இன்னபடி என்றெழுதி விட்ட சிவனும் செத்து விட்டானோ? " என்ற ஔவையாரின் வாக்கையும், "மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான் " என்ற உலக வழக்கையும் நினைக.

சீவனைத் தோற்றுவித்தவன் அதற்கு ஞான விசாரத்தைத் தோற்றுவிப்பான் – என்பது சிறப்புப் பொருள். ஜீவ நதி என்றும் வற்றாது. அது போல ஆத்ம சொரூபம் என்பது பேரறிவு. அது ஜீவனாகத் தோன்றியபோதிலும், அது, தான் – பிரம சாட்சாத்காரம்' என்பதை உணர்ந்தே தீரும்.

அக்கினியில் உண்டாகா நின்ற பொறிக்கு அனல் காரணமாகிறது போல ஜகத்துக்கு ஆத்மாவே காரணம் அல்லாமல், இடையில் ஒன்றும் சொல்லத் தக்கது இல்லை. 75.

பதவுரை: அக்கினியில் – நெருப்பில் ; உண்டாகின்ற – எழுகின்ற; பொறிக்கு –; அனல் – அந்நெருப்பின் சுடர் ; காரணமானது போல–; ஜகத்துக்கு – உலகத்திற்கு; ஆத்மாவே காரணம் அல்லாமல்–; இடையில் – அவை இரண்டுக்கும் வேறாக; ஒன்றும்–; சொல்லத்தக்கது – காரணம் என்று சொல்லத்தக்கதாக; இல்லை.

*விளக்கம்* : பொறிகளை உண்டாக்கும் பொருள் நெருப்பே. வேறு ஒன்றும் இடையில் இல்லை. அதுபோல, உலகத்தை உண்டாக்கும் பொருள் ஆத்மாவே. வேறு ஒரு பொருள் இல்லை.

பழுதையில் உண்டான பாம்பு பழுதை போல என்று சொல்லலாம்.
அது போல பிரமத்தில் உண்டான ஜகத்து, பிரமம் தான். 76.

*பதவுரை* : பழுதையில் உண்டான பாம்பு – பழுதையைப் பார்த்து, அது பாம்பு என்று எண்ணினால்; (அது) பழுதைபோல என்று – உண்மையில் பழுதைபோலதான் என்று; சொல்லலாம்; அது போல பிரமத்தில் – ஆத்மாவினிடத்தில்; உண்டான – அது தோற்றுவிக்கும் கற்பனையான; ஜகத்தும் – உலகமும்; பிரமம்தான்–;

*விளக்கம்* : பழுதை கிடக்கிறது. அதை ஒருவன் பாம்பு என்று கூறுகின்றான். ஆயினும் அது பழுதைதான். அதுபோல உண்மைப் பொருள் பிரமமே. ஞான ஆராய்ச்சி இல்லாதவன் ''பிரமம் வேறு; உலகம் வேறு'' என்று கூறுகின்றான். ஆயினும் உலகம் பிரமமே.

தன்னைக் கர்ம கர்த்தாவாய்க் காணும் போது, கர்த்துரு
தந்திரம் என்றும், நித்தியமாய், பூரணமாய்க் காணும் போது,
வஸ்து தந்திரம் என்றும் அறிக. 77.

*பதவுரை* : கர்மா கர்த்தாவாய் – ஒரு குறிப்பிட்ட காரியத்தைச் செய்பவனாக; தன்னை – ஆத்மாவை; கருதும் போது –; கர்மா – அச்செயல்; கர்த்துரு தந்திரமாக – கர்த்தாவுக்கு உட்பட்டதாக ; இருக்கிறது–; (அவ்வாறு இன்றி) தன்னை – ஆத்மாவை; நித்யமாய் – என்றும் உள்ளதாய் ; பூரணமாய் – நிறைவாய் ; காணும் போது –; வஸ்து தந்திரம் – அச்செயல் பரமாத்மாவின் செயல் ஆகின்றது.

*விளக்கம்* : ஜீவன் ஒரு செயலைத் தன் செயல் என்று எண்ணினால், அவன் நல்ல செயலும் செய்யலாம்; தீய செயலும் செய்யலாம். செய்யாமலும் இருக்கலாம். சான்றாக, கை நல்லதும் செய்யும், தீயதும் செய்யும்; செய்யாமலும் இருக்கும். வஸ்து என்பது பொருள். சான்றாக, கண், காணுமே அன்றிக் கேளாது, வஸ்து பரமாத்மாவே ஆதலின், அது பேராற்றல் உடையதாக உணரப்படும். அவரால் எச் செயலும் பேராற்றலுடன் செய்யப்படும்.

காரண காரியமாய் உள்ளதுக்குப் பரிச்சின்னத்துவம் உண்டு.
நிஷ்காரணமாய் இருக்கின்ற ஆத்மாவுக்கு அபரிச் சின்னத்துவம்
என்னும் பூரணத்துவம் உண்டு. 78.

*பதவுரை* : காரண, காரியமாய் உள்ளதுக்கு – காரணத்தை உடைய பொருளுக்கு; அதாவது உலகிற்கு; பரிச்சின்னத்துவம் – அளவுக்கு உட்பட்ட தன்மை உண்டு. நிஷ்காரணமாய் – தான் ஒன்றினால் தோற்றுவிக்கப் படாததாய்; இருக்கின்ற –; ஆத்மாவுக்கு –; அபரிச் சின்னத்துவம் – அளப்பரிய தன்மை; என்னும்–; பூரணத்துவம் – வியாபகம் (எங்கும் உள்ள தன்மை) உண்டு.

*விளக்கம்* : தோன்றுவது அழியும், தோன்றாதது அழியாது.

சகல சாத்திர விசாரம் பண்ணின ஞானிகளுக்கு யான், எனது
எனப், போகத்தில் ஆசாபாசப் பிரவிர்த்தி வரகிறதற்குக் காரணம்,
பிரபஞ்சம் சத்தியம் என்னும் பிரமாண புத்தியேயாம். 79.

*பதவுரை :* சகல சாத்திரம் – அனைத்து நூல்களையும்; விசாரம் பண்ணின – ஆராய்ந்த ; ஞானிகளுக்கு–; யான், எனது என – யான் அனுபவிக்க வேண்டும்; எனது அனுபவப் பொருள் இது என்று; யோகத்தில் – இன்பானுபவத்தில்; ஆசா பாசப் பிரவிர்த்தி – முயற்சியும் இச்சையும்; வருகிறதற்குக் காரணம்–; பிரபஞ்சம் சத்தியம் – உலகம் உண்மைப் பொருள் ; என்னும் –; பிரமாண புத்தியே யாம் – உறுதியான எண்ணமே ஆகும்.

*விளக்கம் :* அவர்கள் ஆய்ந்து தெளிந்தும் பொய்யான எண்ணத்தை விடவில்லை, அது அவர் உள்ளத்தில் அழுந்தப் பதிந்துள்ளது.

அனேகமான செல்வம் உடையவர்களுக்கு உதார புத்தியும்,
இரக்கமும் இல்லாமல் இருத்தல் அவிவேகத்தினாலேதான். 80.

*பதவுரை :* அனேகமான – பெரும்பாலான; செல்வம் உடையவர்களுக்கு – செல்வர்களுக்கு ; உதார புத்தியும் – தாராள சிந்தனையும்; இரக்கமும்–; இல்லாமல் இருந்தால்–; அவிவேகத்தினாலேதான் – அறியாமையால் தான்.

தெய்வ வியதிரிக்தமாக – ஜீவ; ஈஸ்வர, ஜகத்துக்களில் கட்டுப்
பாடாய் – பேசா நின்ற வசனங்கள் எல்லாம், புத்திமான்களுக்கு
நச்சு வசனங்களாய்த் தோன்றல் வேண்டும். 81.

*பதவுரை :* தெய்வ வியதிரிக்தமாக – பிரமத்திற்கு வேறாக (பிரம உண்மைக்கு முரண்பட்டதாக) ஜீவன், ஈஸ்வரன், ஜகத்திற்கு – சீவனின் காரியம் என்றும், சகுண பிரமமாகிய ஈஸ்வரனின் காரியம் என்றும், ஜகத்தின் காரியம் என்றும்; கட்டுப்பாடாய்ப் பேசா நின்ற – சிற்றறிவோடு பேசப்படும்; வசனங்கள் எல்லாம்–;புத்திமான்களுக்கு – விவேகிகளுக்கு; நச்சு வசனங்களாக – தீய உரைகளாக; தோன்றல் வேண்டும்.

வானவ ரசமாம் தொடர்பினால் உலகோர்;
வழுத்துறும் வன்னிஜங் கரனை
வானஅ ரதன மணியறு முகனை,
மாசறு கொற்றவா ளிறையை
வானவர் முதுவன் பாலன வலவன்
வணங்குநல் திருநெலை மாதை
வானவ ரதனாம் முத்திரா மேச
வள்ளலை வணங்கிவாழ்த் திடுவாம்

சுவானுபவத் திருவாக்கும் பதவுரை விளக்கமும் முற்றும்.

# கோவிலூர் ஆதீனத்தில் பாடத் திட்டமாக உள்ள 16 வேதாந்த சாத்திரங்கள்

1. நாநாஜீவ வாதக் கட்டளை
(சேஷாத்திரி சிவனார் இயற்றியது)

2. கீதாசாரத் தாலாட்டு
(திருவேங்கட நாதர் இயற்றியது)

3. சசிவன்ன போதம்
(எறும்பூர் தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

4. மஹாராஜத் துறவு
(விருத்தாசலம் குமார தேவர் இயற்றியது)

5. வைராக்கிய சதகம்
(பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)

6. வைராக்கிய தீபம்
(பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)

7. இலட்சணா விருத்தி
(கருணாநிதி என்னும் சிதம்பர ஞான தேசிகர் இயற்றியது)

8. அஞ்ஞவதைப்பரணி
(எறும்பூர், தத்துவராயசுவாமிகள் இயற்றியது)

9. வேதாந்த சூடாமணி
(துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தமிழ்ச் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்பு)

10. விவேக சூடாமணி
(திருவிடைமருதூர் உலகநாத சுவாமிகள், தமிழில் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்பு)

11. பஞ்ச தசி
(நித்தியானந்த சுவாமிகள் வீர. சுப்பையா சுவாமிகள், தமிழில் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்பு)

12. கைவல்ய நவநீதம்
(நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் இயற்றியது)

13. ஈசுர கீதை
(எறும்பூர், தத்துவராய சுவாமிகளால், தமிழில் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்பு)

14. பகவத் கீதை
(பாட்டனார் தமிழில் செய்யுள் வடிவ மொழி பெயர்ப்பு)

15. பிரம்ம கீதை
(எறும்பூர், தத்துவராய சுவாமிகளால், தமிழில் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்பு)

16. ஞான வாசிட்டம்
(வீரை. ஆளவந்தார். தமிழில் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்பு)